# ஐங்குறு நூறு மூலமும்

## பழைய வுரையும்

மூன்றாம் பதிப்பு

பதிப்பாசிரியர்
S. கலியாணசுந்தரையர்

உ

கணபதி துணை

எட்டுத்தொகையுள் மூன்றாவதாகிய

# ஐங்குறுநூறு மூலமும்

## பழைய வுரையும்

இவை

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்

பரிசோதித்து எழுதிய குறிப்புக்களுடன்

அவர்கள் குமாரர்

S. கலியாணசுந்தரையரால்


சென்னைக் கபீர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன

மூன்றும் பதிப்பு

சுபானு வருஷம் மார்கழிமீ


 1944 [விலை ரூ. 3-12-0

# இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா - அகநானூறு
அடிக் - அடிக்குறிப்பு
அடியார் - அடியார்க்கு நல்லாருரை
இ-வி - இலக்கணவிளக்கம்
இளம் - இளம்பூரணருரை
இறை - இறையனுரைகப்பொருள்
இன்னா - இன்னாநாற்பது
இனியது - இனியதுநாற்பது
எ-து - என்பது
ஐங் - ஐங்குறுநூறு
ஐந். ஐம் - ஐந்திணையைம்பது
ஐந். எழு - ஐந்திணையெழுபது
கட - கடவுள்வாழ்த்து
கம்ப - கம்பராமாயணம்
கல் - கல்லாடம்
கலி - கலித்தொகை
களவழி - களவழிநாற்பது
களவியல் - களவியற்காரிகை
கார் - கார்நாற்பது
குறள் - திருக்குறள்
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு
குறுந் - குறுந்தொகை
சங் - சங்கரநமச்சிவாயருரை
சிலப் - சிலப்பதிகாரம்
சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீவக - சீவகசிந்தாமணி
சூளா - சூளாமணி
சே - சேனவரையருரை
தக்க - தக்கயாகப்பரணி
தண்டி - தண்டியலங்காரம்
தமிழ்நெறி - தமிழ்நெறிவிளக்கம்
தனிப் - தனிப்பாடல்கள் [பது
திணைமாலை - திணைமாலைநூற்றைம்
திணைமொழி - திணைமொழி ஐம்பது
திரி - திரிகடுகம்

திருவள்ளுவ - திருவள்ளுவமாலை
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியருரை
நம்பி - நாற்கவிராச நம்பியகப்
நற் - நற்றிணை [பொருள்
நன் - நன்னூல்
நாலடி - நாலடியார்
நான்மணி - நான்மணிக்கடிகை
நெடுநல் - நெடுநல்வாடை
பட் - பட்டினப்பாலை
பதிற் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல்
பரிமேல் - பரிமேலழகருரை
ப-ரை - பழையவுரை
பழமொழி - பழமொழிநானூறு
பி-ம் - பிரதிபேதம் [மாலை
பு-வெ - புறப்பொருள் வெண்பா
புறநா - புறநானூறு
பெருங் - பெருங்கதை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
பேர் - பேராசிரியருரை [படை
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை
மதுரை - மதுரைக்காஞ்சி
மயிலேறு - மயிலேறும் பெருமாள் பிள்ளையுரை
மயிலை - மயிலைநாதருரை
மலைபடு - மலைபடுகடாம்
மு - முழுதும்
முருகு - திருமுருகாற்றுப்படை
முல்லை - முல்லைப்பாட்டு
மேற் - மேற்கோள்
யா. கா - யாப்பருங்கலக்காரிகை
யா-வி - யாப்பருங்கலவிருத்தி
வி-பா - வில்லிபாரதம்

# இப்புத்தகத்தில் அடங்கியவை

4. பாலை



5. முல்லை

# மூன்றும் பதிப்பின் முகவுரை

தேவாரம்

## திருச்சிற்றம்பலம்

*அண்ணலாலவாய்*
*நண்ணி னுன்றனை*
*எண்ணியே தொழத்*
*திண்ணமின்பமே.*

ஐங்குறுநூறு என்னும் இந்நூலின் இரண்டாம்பதிப்பை என் தந்தையாரவர்கள் 1920-ஆம் ஆண்டில் வெளியிட்டார்கள். சில ஆண்டுகளுக்குமுன் மூன்றும் பதிப்பை அவர்கள் வெளியிட எண்ணி அதற்குரிய குறிப்புக்களைத் தொகுத்து வைத்திருந்தும், அப்போதிருந்த வேறு நூற்பதிப்பு வேலைகளால் அது நிறைவேற வில்லை. அவர்களே வெளியிட்டிருந்தால் இப்பதிப்பு மிகவும் சிறந்த முறையில் அமைந்திருக்கும்.

அவர்கள் தொகுத்து வைத்திருந்த குறிப்புக்களையும் கைப் புத்தகங்களையும் ஆதாரமாகக்கொண்டு அவர்கள் கருத்தின் படியே ஒருவாறு இப்பதிப்பை வெளியிடலானேன். இப்பதிப்பில் மூலம், கருத்துரை, பழையவுரை, குறிப்பு, மேற்கோளாட்சி, பிரதிபேதம் என்பன ஒன்றன்பின் ஒன்றாக அமைந்துள்ளன. குறிப்பு என்ற பகுதியில் மூலத்திலும், பழைய உரையிலும் உள்ள அரும் பதங்களுக்கும் தொடர் மொழிகளுக்கும் உரையும், விளக்கமும், விசேடக் குறிப்பும், அந்வயமும், ஒப்புமைப் பகுதியும், அடங்கியுள்ளன. பழைய பதிப்புக்களில் பிரயோக விளக்க மென்ற பகுதியிற் கண்ட செய்திகள் இதில் மேற்கோளாட்சி யென்னும் பகுதியில் ஆங்காங்கு அமைக்கப்பெற்றுள்ளன. மேலே சொன்ன குறிப்புக்கள் முதலியவற்றால் இந்நூலின் மூலமும் உரையும் சில சில திருத்தங்கள் அடைந்திருத்தலை அறிஞர்கள் காணலாம்.

ஐயரவர்கள் எழுதிவைத்திருந்த ஐந்திணைக்குமுரிய முதல் கரு உரிப்பொருள்களின் அகராதி ஒரு தனிப் பகுதியாகச் சேர்க்கப்பெற்றுள்ளது. இப்பகுதியிலுள்ள பதங்கள் முதலியன அரும்பத முதலியவற்றின் அகராதியென்னும் பகுதியில் பெரும் பாலும் காணப்படா.

இந்நூல் சம்பந்தமான விரிவான செய்திகளை இதன் பழைய முகவுரையிற் காணலாம்.

பலவகையான குறிப்புக்களையெல்லாம் முறைப்படுத்தி ஆங்காங்கே சேர்த்து அமைத்தற்கும் இப்பதிப்பு அச்சாகி வருகையில் ஒப்புநோக்குதற்கும் அன்புடன் உதவிபுரிந்த அடையாற்று B. T. உயர்தரப் பாடசாலையில் தமிழாசிரியராக உள்ள **ஸ்ரீ வித்வான் ச. கு. கணபதி ஐயர்** B. O. L., அவர்களுக்கும் திருவல்லிக்கேணி தேசீயக்கலாசாலைத் தமிழாசிரியர்களாகிய வித்துவான்கள் **அ. வைத்தியநாதையருக்கும்**, ஸ்ரீ. வே. **லக்ஷ்மணையருக்கும்** மிக்க நன்றி பாராட்டுகிறேன்.

**தியாகராஜவிலாசம்**
திருவேட்டீசுவரன் பேட்டை,
சென்னை, 8-1-44.

இங்ஙனம்,
S. கலியாணசுந்தரம்

## பழைய முகவுரை

" சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே."

ஐங்குறுநூறென்பது கடைச்சங்கப்புலவர்கள் அருளிச் செய்த நூல்களாகிய * எட்டுத் தொகைகளில் மூன்றாவது ; சொற் சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது ; பொருள்களின் இயற்கை யழகையும் தமிழ்ப் பாஷையின் இனிமையையும் நன்கு தெரி விப்பது ; இத்தமிழ்நாட்டின் பழையகாலத்தின் நிலைமையையும் சில சரித்திரங்களையும் புலப்படுத்துவது ; பொருளிலக்கணத்தின் பகுதிகளாகிய அகம் புறமென்னும் இரண்டனுள், அகத்தின் பகுதிகளுக்கு இலக்கியமாக அமைந்துள்ளது ; அகமாவது ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்றகாலத் துப் பிறந்து அக்கூட்டத்தின் பின்பு அவ்விருவராலும் ஒருவர்க் கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாத தாய் எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம். இன்பம்பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தை அக மென்றது ஆகுபெயர். அகம் - உள்.

இந்நூல், சிவபெருமானுடைய துதியாகிய கடவுள் வாழ்த் துச் செய்யுளொன்றை முதலிற் பெற்றுப் பின்னர் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லையென்னும் ஐந்திணைகளுள் ஒவ்வொன்றற்குமுரிய ஒழுக்கங்களைத் தனித்தனி விளக்கும் நூறு நூறு அகவற்பாக்களைக்கொண்டு முறையே ஐந்து வகையாகப் பகுக்கப் பெற்றுள்ளது. ஒவ்வொருதிணையும் பத்துப் பத்துப் பகுதிகளையுடையது.

இதிலுள்ள பாக்கள் ருOக. இவை ங - அடிச் சிற்றெல்லை யையும் சு - அடிப் பேரெல்லையையும் உடையவை.

நற்றிணை முதலியவற்றிலுள்ள பாக்களைக்காட்டிலும் அடி வரையறையிற் குறைந்த நூறு நூறு பாக்களால் மருதமுதலிய ஐந்திணை யொழுக்கங்களைத் தனித்தனியே விளக்குகின்றமையின் இந்நூல் ' ஐங்குறுநூறு ' என்று பெயர் பெற்றது.

---

* இவற்றின் வரலாற்றைப் புறநானூற்று முகவுரையாலுணர்க.

இதிற் கடவுள்வாழ்த்துப் **பாரதம்பாடிய பெருந்தேவனாராலும்,** முதனூறாகிய மருதம் **ஓரம்போகியாராலும்,** இரண்டாம் நூறாகிய நெய்தல் **அம்மூவனாராலும்,** மூன்றாம்நூறாகிய குறிஞ்சி **கபிலராலும்,** நான்காம்நூறாகிய பாலை **ஓதலாந்தையாராலும்,** ஐந்தாம்நூறாகிய முல்லை **பேயனாராலும்** இயற்றப்பட்டன; இதனை,

> " மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
> கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய
> பாலையோத லாந்தை பனிமுல்லை பேயனே
> நூலையோ தைங்குறு நூறு "

என்னும் வெண்பாவாலுணர்க.

இத்தொகையைத் தொகுத்தார் **புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்** என்பதும், தொகுப்பித்தார் **யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை யார்** என்பதும் இந்நூலின் இறுதியில் உள்ள பழையவாக்கியத் தால் தெரிகின்றன.

ஓரம்போகியார் முதலிய ஐவரும் முறையே மருதமுதலிய ஐந்திணை வளங்களையும் இனிது விளக்கிப் பாடுதலில் மிக்க பயிற்சியுடையவர்களாதலின், மருத முதலிய ஒவ்வொரு பகுதி யையும் படிப்பவர்கள் அப்பொழுது அப்பொழுது அந்த அந்த நிலங்களில் உள்ள பொருள்களைக் கண்கூடாக நுகர்பவர்களா கவே யாவார்கள்.

இதிலுள்ள அகவற்பா ஒவ்வொன்றன் பின்னும் தனித் தனியே கருத்துரையும் பழையவுரையும் உள்ளன. சிலபாக் களுக்கு இரண்டு கருத்துரைகளுமுண்டு. அக்கருத்துக்களை இயற் றியவர்கள் நூலாசிரியர்களோ, வேறு யாரோ யாதும் புலப்பட வில்லை. தொல்காப்பியப் பொருளதிகாரவுரையில் இந்நூலி லிருந்து மேற்கோளாக எடுத்துக்காட்டிய செய்யுட்களுட் சிலவற் றிற்கு நச்சினார்க்கினியர் முதலியோர் இக்கருத்துரைகளைத் தழு வாமல் வேறு கருத்துரைகள் எழுதி அவற்றிற்கேற்ப அச்செய் யுட்களுக்குப் பொருளும் விளங்க எழுதியிருக்கிறார்கள். இஃது இப்புத்தகம் கசரு - ஆம் பக்க முதலியவற்றில் அமைந்துள்ள **பிரயோகவிளக்கக்** குறிப்பால் நன்கு விளங்கும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் " மாயோன்மேய " (**தொல்.** அகத். ரு) என்னும் சூத்திரத்தில், 'முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என நிலங்களுக்கு முல்லை முதலாக முறை கூறினாரேனும் அதில், 'சொல்லவும் படுமே' என்ற உம்மையால், இங்ஙனம் சொல்லாத முறையாலும்

திணைகள் சொல்லப்படுமென்று அவர் அறிவுறுத்தினராதலின், புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் இந்நூலில் திணைகளை மருத முதலாகத் தமக்கு வேண்டிய முறையாற் கோத்தாரென்றுணர்க. இக்கருத்தை, "உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்லவும்படுமென்பது பொருளாயிற்று; தொகைகளிலும் கீழ்க் கணக்குக்களிலும் இம்முறை மயங்கக் கோத்தவாறு காண்க" (**தொல்.** அகத். ரு-ஆம் சூ. உரை) எனவும், "இனி, 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்ற வழிச் சொல்லாத முறையாற் சொல்லவும்படு மென்று பொருள் கொண்டமை பற்றிப் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தலெனவும் கோத்தார்; ஐங்குறு நூற்றினும் பிறவற்றினும் வேறுபடக் கோத்தவாறு காண்க" (**கலித்தொகை,** கடவுள் வாழ்த்துரை) எனவும் போந்துள்ள **ஆசிரியர் நச்சினார்க்கினியர்** வாக்கியங்களும், "சொல்லிய முறையாற் சொல்லவும்படும் என்ற உம்மை பிறவாற்றானும் சொல்லப்படுமென்பது பட நிற்றலானும், பத்துப் பாட்டாலும், கலித்தொகையும், ஐங் குறுநூறும், கீழ்க் கணக்கும், *சிற்றட்டகமும் முதலாகிய சான் றோர் செய்யுட்களிலெல்லாம் வேண்டிய முறையான் வைத்தலா னும் இவ்வாற்றான் எண்ணப்பட்டனவெனக்கொள்க" (அகத். 6.) என்னும் **நாற்கவிராயநம்பி** அகப்பொருளின் உரையாசிரியர் வாக்கியமும் வலியுறுத்துமாறறிக.

இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் முறையே மலைநாட்டுப் புலவரும் மலைநாட்டரசருமாதலால், **ஆதனவினி**யென் னுஞ் சேரனைத் தலைவனாகப்பெற்ற முதற்பத்தையுடைய **மருதம்** முதலிலும், **தொண்டிப்பத்தை**யுடைய நெய்தல் மருதத்தின் பின்னும் மலைநாட்டரசர்களைப் பாடி, மலைநாட்டிற் பெரும்பாலும் வதிந்து, மலைவளம் பாடுதலிற் புகழ்பெற்ற **கபிலர்** பாடிய குறிஞ்சி நெய்த லின் பின்னும் கோக்கப்பெற்றனவென்று இம்மூன்றற்கும் ஒரு வாறு முறை கூறலாமாயினும், பாலையும் முல்லையும் இவற்றின் பின்னர் முறையே அமைக்கப்பெற்றதற்குக் காரணம் ஒருவாற் றானும் விளங்கவில்லை. [தொண்டி - சேரநாட்டிற் கடற்கரைக் கண்ணதொரு நகரம்; இதனை, 'குட்டுவன்றொண்டி' (**ஐங்.** களஅ) என்பதனாலுணர்க.]

ஐங்குறுநூறுபோலவே ஐந்திணையொழுக்கங்களை மேற் கூறியவாறு பாகுபாடு செய்து தொகுத்துத் தனித்தனியே கூறும் வேறு பழைய நூல்களுள் இப்பொழுது தெரிந்தவை வருமாறு:—

* சிற்றடக்கமென்றும் பிரதிவேறுபாடுண்டு.

எட்டுத்தொகையுள் **கலித்தொகையும்,** பதினெண் கீழ்க்கணக்கினுள் **ஐந்திணையைம்பது, திணைமாலை நூற்றைம்பது, திணைமொழியைம்பது, ஐந்திணையெழுபது, கைந்நிலை**யென்பனவும், பத்துப் பாட்டுள் **மதுரைக்காஞ்சி** முதலியனவும், பழைய உரைகளிற் காணப்படுகின்ற சிற்றட்டகமென்பதுமாம்; சிற்றட்டகத் துள்ள சில பாக்கள் மட்டும் பழையவுரைகளிற் காணப்படுகின்றனவேயன்றி நூல் முழுவதும் காணப்படாமையின், அதனைப்பற்றி ஒன்றும் இப்பொழுது எழுதக்கூடவில்லை.

மேற்கூறிய இலக்கிய நூல்களிலும் தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களிலும் திணைகளைக் கோத்துள்ள முறை ஒரு படியாகவில்லை; அவை வருமாறு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | மரு | நெய் | குறிஞ் | பா | முல் |
| கலித்தொகை | பா | குறிஞ் | மரு | முல் | நெய் |
| ஐந்திணையைம்பது | முல் | குறிஞ் | மரு | பா | நெய் |
| திணைமாலை நூற்றைம்பது | குறிஞ் | நெய் | பா | முல் | மரு |
| திணைமொழியைம்பது | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| ஐந்திணை யெழுபது | குறிஞ் | முல் | பா | மரு | நெய் |
| கைந்நிலை | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| மதுரைக்காஞ்சி | மரு | முல் | குறிஞ் | பா | நெய் |
| பெருங்கதை | மரு | முல் | குறிஞ் | பா | ... |
| தொல். பொருளதிகாரவுரை | முல் | குறிஞ் | மரு | நெய் | ... |
| இறையனாரகப்பொருளுரை | குறிஞ் | நெய் | பா | முல் | மரு |
| நாற்கவிராயநம்பியகப்பொருளு | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| வீரசோழியம் [ரை | முல் | குறிஞ் | மரு | பா | நெய் |
| மாறனகப்பொருள் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |
| இலக்கணவிளக்கம் | குறிஞ் | பா | முல் | மரு | நெய் |

இந்நூலின் **பழையவுரை** பதவுரையுமன்று; பொழிப்புரையுமன்று; அகத்திணை நூல்களுக்கேயுரிய உள்ளுறையுவமம், இறைச்சிப்பொருள் முதலியவற்றைப் பெரும்பாலும் நலமுற விளக்கிச் சிலசில இடத்துமட்டும் திரிசொற்களின் பொருளைப் புலப்படுத்திச் சிறுபான்மை இலக்கணக் குறிப்பையும் சொன்முடிபு பொருண்முடிபுகளையும் பெற்றுள்ளது. ௪௬௯-ஆம் பாடலுக்கு மேலுள்ளவற்றிற்குக் கையெழுத்துப் பிரதியில் இவ்வுரை காணப்படவில்லை. இடையிடையே சிலசில பாடல்களுக்குமில்லை. ஆனாலும் கிடைத்த வரையிற் பாடல்களின் பொருள்களைத் தெரிந்துகொள்வதற்கு இவ்வுரை மிகச் சிறந்த கருவியாகவுள்ளது. இந்நூல்போலவே நடையாலும் பொருள் நுணுக்கத்தாலும் * இவ்வுரையும் மிகப்

* இவ்வரிய உரைப்பிரதியைத் தந்த உபகாரி ஆழ்வார்திருநகரி ஸ்ரீ. **தே. லக்ஷ்மண கவிராயரவர்கள்.**

பாராட்டற்பாலது. இவ்வுரை இல்லையாயின், இந்நூற் பாக்களி லுள்ள உள்ளுறையுவமம் முதலியனவும் மற்ற அருமை பெருமை களும் நன்கு புலப்படா. இவ்வுரையாசிரியர் இன்னரென்பது ஒருவாற்றானும் விளங்கவில்லை. ஆனாலும் நடையை உற்று நோக்கின், இவர் பேராசிரியர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலியவர்களுள் ஒருவரோ, அல்லது அவர்களைப்போன்ற வேறு ஒருவரோவென்று ஊகிக்கப்படுகிறார்.

தொல்காப்பியப் பொருளதிகாரம், இறையனாரகப்பொருள், நாற்கவிராயநம்பி அகப்பொருள் முதலிய நூல்களை உரையுடன் பன்முறை ஆராய்ந்தவர்களுக்கு இந்நூலின் நயன் நன்கு புலப் படும்; நடையும் தெற்றென விளங்கும்.

பழைய உரையில்லாத செய்யுட்களுக்கு உள்ளுறையுவமம் முதலியவற்றைப் புலப்படுத்தி ஏதோ ஒரு வகையாக உரை எழுதி இதனுடன் பதிப்பிக்கலாமென்ற விருப்பம் சில சமயம் எனக்கு நிகழ்ந்ததுண்டு; நிகழ்ந்தும் இந்நூலையும் இவ்வுரையையும் உற்று நோக்க அவ்விருப்பம் அடியோடே மாறிவிட்டது. இந்நூல் முழுமைக்கும் நான் எழுதிவைத்த அரும்பதவுரையை இதனுடன் பதிப்பியாமைக்குக் காரணமும் இதுவே.

சிலசில இடத்து மூலமட்டும் தனியேயுள்ள பிரதிகளின் பாடம் வேறாகவும், இந்நூல் பழைய உரையாசிரியர் கொண்ட பாடம் வேறாகவும், மேற்கோளாக எடுத்துக் காட்டியிருக்கும் நச்சினார்க்கினியர் முதலியோர்கள் கொண்ட பாடம் வேறாகவும் அவ்வப் பிரதிகளிற் காணப்பட்டன. அவை ஒருவாறு தொகுத்துப் பிரதிபேதமாக அவ்வப்பக்கங்களின் இறுதியிற் பதிப்பிக்கப்பட் டுள்ளன. பிரதிகளிலுள்ளவாறே பதிப்பித்திருத்தலால் அவற்றுட் சில பாடபேதங்களுக்குப் பொருள்கள் புலப்படா.

இந்நூலின் கஉக, கஙo-ஆம் செய்யுட்கள் ஒரு பிரதியிலும் காணப்படவில்லை. சகசு, சகூo-ஆம் செய்யுட்களின் இரண்டா மடிகளிற் சீர்கள் குறைந்துள்ளன; அவற்றை ஒரு பிரதியானும் நிரப்பக் கூடவில்லை.

மூலம், கருத்துரை, பழையவுரை என்னும் இம்மூன்றனுள் எழுத்துக்கள் சிதைந்துபோன பாகத்தை...இவ்வொற்றைப்புள்ளி நிரைகள் காட்டும்.

சில சொற்கள் பின்னுள்ளவாறு இந்நூற் கையெழுத்துப் பிரதிகளிற் காணப்பட்டன :—

அடும்பு (=அடம்பு)
அணுமை (=அணிமை)
அலம்வருதல் (=அலமருதல்)
அற்சிரம் (=அச்சிரம்)
இற்றி (=இத்திமரம்)
கலிழ்தல் (=கலுழ்தல்)
குருசில் (=குரிசில்)
துடக்கம் (=தொடக்கம்)
துடங்கின்று (=தொடங்கின்று)
நெருநை (=நெருநை)
பஞ்சாய் (=பைஞ்சாய்)
பழுநி (=பழுனி)
வல்லினை (=வல்லுனை)
வேணும் (=வேண்டும்.)

இதன் முதற்பதிப்பு 1903-ஆம் வருஷத்திற் பதிப்பிக்கப்பெற்றது. பின்பு கிடைத்த பழைய கையெழுத்துப் பிரதிகளால் அறிந்த பிரதிபேதங்களும் அரும்பதவகராதியில் பழைய நூலாராய்ச்சிக்கு இன்றியமையாத சில குறிப்புக்களும் இப்பதிப்பிற் சேர்க்கப்பெற்றுள்ளன.

திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவானும் என் ஆசிரியருமாக விளங்கிய திரிசிரபுரம் **ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய** கண்மணிபோன்ற முதன் மாணுக்கரும் பாடஞ்சொல்லுதல், செய்யுள் செய்தல், நூலாராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்றவரும், முன்பு கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருந்தவரும், வேறு கவலையின்றி நூலாராய்ச்சியையே செய்துகொண்டு காலங்கழிக்கும்படி வற்புறுத்திக்கூறி அவ்வாறே யான் நடத்தற்குக் கரும்பு தின்னக் கூலி கொடுத்தாற்போலத் தம்முடைய அரிய வேலையை அன்புடன் எனக்கு எளிதிற் கிடைக்கச் செய்தவரும், * "இரந்துபுன் மாக்கடமை யென்றுந் துதியா, வரந்தரவென் முன்னின்றவள்ள"லுமாகிய திரிசிரபுரம் வித்துவான் ஸ்ரீ **தியாகராச செட்டியாரவர்களுடைய** பேருதவி எழுமையும் மறக்கற்பாலதன்று. அவர்கள் செய்த மேற்கூறிய அரிய உதவியில்லையேல் எனக்கும் பழைய தமிழ் நூலாராய்ச்சிக்கும் இக்காலத்தில் யாதோரியையுமின்றென்பது திண்ணம். ஆதலால் இனியதும் அரியதுமான இந்நூற்பதிப்பை அவர்களிடத்துள்ள நன்றியறிவிற்கு அறிகுறியாக அவர்களுக்கு உரியதாக்குகின்றேன்.

இதனைப் பதிப்பிக்குங் காலத்துச் சலிப்பின்றி உடனிருந்து வழக்கம்போல் ஒப்புநோக்குதல் முதலிய பலவகை உதவிகள்புரிந்த பழைய மெய்யன்பர்கள்பால் மிக்க நன்றி பாராட்டுகின்றேன்.

---

* **வெங்கையுலா, கண்ணி,** 68.

உடனிருந்து உதவி செய்பவர்கள் முதலியோர் விஷயத்தில் எனக்குச் சிறிதும் பொருட்கவலை யுண்டாகாதபடி பேரன்புடன் பொருளுதவிசெய்து சில வருஷங்களாக ஆதரித்துவரும், ஸ்ரீஸேது ஸமஸ்தானாதிபதிகளும், மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர்களும், சென்னைச் சட்ட நிரூபண சபை அங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய ம-ா-ா-ஸ்ரீ **பா. இராஜராஜேசுவர ஸேதுபதியவர்களைப்** பாதுகாத்தருளும் வண்ணம் தமிழ்த் தெய்வத்தை இறைஞ்சுகின்றேன்.

---

## இந்நூற் பரிசோதனைக்குக் கிடைத்த கைமெழுத்துப் பிரதிகள்

### மூலமும் கருத்துரையுமுள்ளவை :

| | | |
|---|---|---|
| **திருவாவடுதுறையாதீனத்துப்** ... ... | **பிரதி** | க |
| ம-ா-ா-ஸ்ரீ **ஜே. எம். வேலுப்பிள்ளையவர்கள்** ... | ,, | க |
| திருமயிலை வித்துவான் **ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள்** | ,, | க |

### மூலமும் கருத்துரையும், பழையவுரையுமுள்ள பிரதி :

**ஆழ்வார் திருநகரி,**

| | | |
|---|---|---|
| **ஸ்ரீ தே. லக்ஷ்மண கவிராயரவர்கள்** கொடுத்த | **பிரதி** | க |

இவைகளன்றி ஒப்புநோக்குதற்கு அவ்வப்பொழுது கிடைத்த வேறு பிரதிகள் சில.

மேற்கூறிய யாவும் மிகப் பழமையானவைகளே.

இந்நூலின் பெருமையையும், எனது சிறுமையையும் நன்குணர்ந்த விவேகிகள் இப்பதிப்பிற் காணப்படும் பிழைகளைப் பொறுத்துக் கொள்வார்களென்று நம்புகிறேன்.

இப்படியே யான் எண்ணிய ஒவ்வொரு காரியமும் இடையூறின்றி இனிது நிறைவேறும்படி திருவருள் சுரக்கும்வண்ணம் எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளைச் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேன்.

**'தியாகராஜ விலாஸம்'**
திருவேட்டீசுவரம்பேட்டை,
15—11—1920

இங்ஙனம்,
**வே. சாமிநாதையன்**

# பாடினோர் முதலியவர்களின் வரலாறு



க. **பாரதம் பாடிய பெருந்தேவனார்** :—இந்நூலிற் கடவுள் வாழ்த் தியற்றிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். உரைநடை இயற்றுதலிலும் செய்யுள் செய்தலிலும் மிக்க ஆற்றலுடையவர். இவர் பிறந்த இடம் தொண்டைநாடு; இது,

"சீருறும் பாடல்பன் னீரா யிரமுஞ் செழுந்தமிழ்க்கு
வீரர்தஞ் சங்கப் பலகையி லேற்றிய வித்தகனார்
பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண்
மாருதம் பூவின் மணம்வீ சிடுந்தொண்டை மண்டலமே"

என்னும் **தொண்டைமண்டல சதகச்**செய்யுளால் விளங்குகின்றது.

பெருந்தேவனாரென்பது இவரது இயற்பெயர். இஃது இவ ரியற்றிய பாரதச்செய்யுளைத் **தொல்காப்பியப்** பொருளதிகார வுரையில் மேற்கோளாக எடுத்துக்காட்டும் இடங்களில் நச்சினார்க் கினியர், "இச்செய்யுள் பெருந்தேவனாரியற்றியது" என்று புலப் படுத்தியிருத்தலால் துணியப்படும். பாரதத்தை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக இயற்றியதனாற் பாரதம் பாடிய பெருந் தேவனாரென்றும் இவர் வழங்கப்படுவர். இவருடைய பாரதச் செய்யுட்கள் **தொல்காப்பியப்** பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரையிலன்றி **யாப்பருங்கலவிருத்தி** முதலியவற்றிலும் மேற் கோள்களாக அமைந்த பெருமை வாய்ந்தவை.

திருவள்ளுவ மாலையிலுள்ள 'எப்பொருளும் யாரும்' என்னும் வெண்பா இவர் இயற்றியதாகத் தெரிகிறது.

இவரியற்றிய கடவுள் வாழ்த்துக்களுள் **ஐங்குறுநூறு, அகநா னூறு, புறநானூறு** இவைகளிலுள்ளவைகள் சிவபெருமான் துதிக ளாகவும், **நற்றிணை**யிலுள்ளது திருமால் துதியாகவும், **குறுந்தொகை**யி லுள்ளது முருகக்கடவுள் துதியாகவும் உள்ளனவாதலால் இவ ருடைய கடவுள் வழிபாடும் கொள்கையும் இன்னவெனத் துணிந்து சொல்லக்கூடவில்லை.

இவருடைய கடவுள் வாழ்த்துக்கள் **நற்றிணை** முதலிய தொகை நூல்களின் முன்னர் வைக்கப்பெற்றிருத்தலும், ஐந்தா மறையாகிய **பாரதத்தை** இவரியற்றியிருத்தலும் இவருடைய முதன்மையையும் கல்விப்பெருமையையும் நன்கு விளக்கும்.

மேற்கூறிய கடவுள்வாழ்த்துச் செய்யுட்களையும், பாரத வெண்பாவையும், திருவள்ளுவமாலைச் செய்யுளையுமன்றி இவர் செய்தனவாக **அகநானூற்றில்** ஒரு செய்யுளும், **நற்றிணையில்** ஒன்றும் இப்பொழுது தெரிகின்றன.

உ. **ஓரம்போகியார்:** இந்நூலின் முதல் நூறாகிய மருதத்தைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவர். இவர் பெயர் ஓரம்போதியார் என்றும், ஓரேர்போகியார் என்றும், ஒன்னூர் உழவர் என்றும், காம்போதியார் என்றும் பிரதிகளில் வேறுபட்டுக் காணப்படுகின்றது. இவர் மருதத்திணையின் வளங்களை உள்ளுறை யுவமை இறைச்சி முதலிய நயங்கள் தோன்ற விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர்.

இவரால் பாடப்பெற்றவர் ஐவர். அவர்களுள் **முடிமன்னர்** மூவர்: (1) சேரமான்களில் ஆதன் அவினி என்பவன் (ஐங். முதற்பத்து), (2) வெல்போர்ச்சோழன் கடுமான் கிள்ளி (56, 78), (3) பாண்டியன் (54); **உபகாரிகள்** இருவர்: (1) *விராஅன் (58), (2) மத்தி (61.)

இவர் பாடலில் வந்துள்ள **ஊர்கள்** நான்கு: (1) தேனூர் (54-5, 57); (2) ஆமூர் (56); (3) இருப்பை (58), (4) கழார் (61). இவற்றுள் தேனூரை வேனிலாயினும் தண்புனல் ஒழுகும் தேனூரென்றும், பாண்டியன் தேனூரென்றும், கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும் தேனூரென்றும், வேள்விகள் மலிந்த தேனூரென்றும் மற்ற ஊர்களினும் சிறப்பாகப் பாராட்டுதலை நோக்கும்போது இவருக்கு இவ்வூரின்கண் ஏதேனும் நெருங்கிய பற்று இருக்கலாமென்று தோற்றுகிறது.

**நதிகளில்** காவிரி (42) யும், வையை (7) யும், இந்திர விழாவும் (62), தைந்நீராடும் விரதமும் (84) இவரால் குறிக்கப்பெற்றுள்ளன.

இவர் பாடியனவாக இப்பொழுது தெரிந்தவை: **ஐங்குறுநூற்**றில் முதல் நூறு, **நற்றிணை**யில் (20, 360) இரண்டு, **குறுந்தொகை**யில் (10, 70, 122, 127, 384) ஐந்து, **அகநானூற்**றில் (286, 316) இரண்டு, **புறநானூற்**றில் (284) ஒன்று ஆக 110 செய்யுட்களாகும்.

திருவள்ளுவரைப்போலவே இவர் நூலின் தொடக்கத்தில் இல்லறத்தை வைத்துச் சிறப்பிக்கிறார். இல்லறம் செவ்வனே நடைபெறுவதற்கும் கற்பொழுக்கம் குன்றுமலிருப்பதற்கும் அர

---

* புதுக்கோட்டையைச் சார்ந்த விராலிமலை இவன் மலையாகவும், அம்மலையைச் சார்ந்த இருப்பையூர் இவன் ஆட்சியிலிருந்த இருப்பையூராகவும் கருதப்படுகின்றன.

சனது காவல் இன்றியமையாததாகலின் முதற்கண் காவலனை வாழ்த்துகிறார். 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவல், இன்றெனினின்றால்' (**மணி.** 22 : 208-9) என்ற அடிகள் இங்கே கவனிக்கற்பாலன.

அரச வாழ்த்தோடு, 'பால்பல ஊறுக' (3), 'பார்ப்பாரோதுக' (4) என்று இவர் கூறியிருப்பது 'ஆபயன் குன்றும் அறுதொழி லோர் நூன்மறப்பர், காவலன் காவா னெனின்' என்ற திருக் குறளை நினைப்பூட்டுகிறது.

தலைவி மணம் நிகழ்ந்த பின்னர் அல்லாமற் றலைவனை எதிர்ப் பட்ட ஞான்றே கற்புப் பூண்டொழுகுகின்ற சிறப்பை(6)யும், தலைவனிடத்திற் புலத்தற்குரிய காரணமாயின உளவாகவும் தலைவி அவற்றை மனங்கொளாத சிறப்பை (**ஐங்.** 1, **குறுந்.** 10) யும் இவர் பாராட்டியிருப்பது தமிழ் மகளிரின் கற்பின் பெருமைக்கு ஒரு சான்றாகும். குலப்பெண்கள் தம் கணவரை அதிகமாகப் புலத்தலினால் வரும் தீமைகளை இவர் நன்கு விளக்கியுள்ளார்; **அகநா.** 316. 'தலைவி தலைவன் வீட்டில் கால்வைத்த நாள் முதல் தலைவனுக்குச் செல்வம் முதலிய நன்மைகள் பெருகின' என்பது தோன்ற அவளை, 'விழவு மூதாட்டி' (**குறுந்.** 10), 'தலைவன் செல்வம்பெற்று மகிழ்தற் குரியான்' என்று கூறு வதை நோக்க, 'ஏர் பிடித்தவன் என்ன செய்வான், பானை பிடித் தவள் பாக்கியம்' என்ற பழமொழி ஞாபகத்துக்கு வருகிறது. தலைவியை ஐம்புலன்களுக்கும் இன்பம் தருபவளென்று இவர் கூறியிருப்பது (**குறுந்.** 70) 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடியார் கண்ணேயுள' என்ற **திருக்குற ளுக்கு** இலக்கியமாகவுள்ளது.

இவ்வாசிரியர் கூறும் சில உவமைகள் படித்து இன்புறற் பாலனவாகும். தலைவன் மார்பு ஊரவர்க்கெல்லாம் பொதுவாகிய பழனம்போலாது தலைவிக்கே யுரித்தாதல் (4); தலைவன் மார்புக்குப் பழனத்தை உவமையாகக் கூறிப் பரத்தையின் மார்பு பலர்படிந் துண்ணும் தண்ணிய கயம் போன்றது என்றல் (84); இழிந்தோ ராகிய பரத்தையர் தோளுக்கு உயர்ந்த பொருளை உவமை கூறாது, கழுந்து தேய்ந்து வழுவழுப்பாகவும் பருத்ததாகவுமுள்ள உளுத் தங்காயை அடித்தற்குதவும் தடியை உவமை கூறுதல் (**குறுந்.** 384.)

உலகியல் தொடர்பான பல செய்திகளை இவர் அழகு தோன்றக் கூறுகிறார்: மகளிர், தாம் மகவைப் பெற்றதனால் தம் கணவருக்கு வேம்பாவதாக நினைப்பதை, 'தூயர் நறியர் நின்

பெண்டிர் பேய் அனையம்யாம் சேய்பயந்தோமே' (70) என்றல்; 'புதைத்தல் ஒல்லுமோ ஞாயிற்றதொளி' (71), 'சிறுவரின் இனைய செய்தி நகாரோ, பெரும, நிற்கண்டிசினோர்' (85); 'நும்மோ ரன்னோர் மாட்டும் இன்ன பொய்யொடு மிடைந்தவை தோன்றின் மெய்யாண்டுளதோ விவ் வுலகத்தானே' (அகம். 286.)

புறப்பொருட் செய்திகளாக இவர் கூறுவன, பகைவர் புல்லார்தலும் (4) மறக் குடியிற் பிறந்த ஒருவனது வீரத்தின் மேம்பாடுமே (**புறநா.** 284) யாகும். இவற்றுள் பகைவர் புல்லார்தல் புறப்பொருள்களைப்பற்றிக் கூறும் இலக்கண நூல்களில் யாண்டும் கூறப்படவில்லை. ஆனால் சங்க நூல்களில் **ஐங்குறுநூற்**றைத் தவிரத் தெரிந்தவரையில் **சிறுபஞ்சமூலத்**தில் மட்டும் இதற்கு இலக்கியம் அமைந்துள்ளது.

ங. **அம்மூவனார்** :—இந்நூலின் இரண்டாம்நூறாகிய நெய்தற்றிணையைப் பாடிய இவர் கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்; இவர்பெயர் இடுகுறியோ காரணக்குறியோ யாதும் புலப்படவில்லை. **நற்றிணை,** கஅ-ஆம் செய்யுளிலும், **புறநானூறு** உ0கூ-ஆம் செய்யுளின் பின்னுள்ள வாக்கியத்திலும் மூவனென்று ஓர் உபகாரியின் பெயர் வந்திருத்தலால், மூவனென்ற பெயரொன்று பண்டைக்காலத்தில் வழங்கிவந்ததென்று தெரிகிறது. இவர் நெய்தற்றிணையில் மிகப்பயின்றவர்; அதன் வளங்களை விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலையுடையவர். தமிழ்நாட்டரசர்களுள் **சேரன், பாண்டியன்** என்னும் முடியுடைவேந்தர் இருவராலும், திருக்கோவலூரையாண்ட **காரி**யென்னும் வள்ளலாலும் ஆதரிக்கப்பெற்றவர். சேரநாட்டுக் கடற்கரைப்பட்டினமாகிய **தொண்டிநகரமும்,** அந்நாட்டின் கண்ணதாகிய **மாந்தைநகரமும்,** பாண்டிநாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய **கொற்கைநகரமும்,** நடுநாட்டின் கண்ணதாகிய **கோவலூரும்** இந்நூலிலும் பிற தொகைநூல்களிலும் இவராற்பாராட்டப்பெற்றிருத்தலின், இவர் அந்நகரங்களில் இருந்தவரென்றும் இவர் காலத்தில் அவைகள் மிக விளக்கமுற்றிருந்தனவென்றும் கூறலாம். **அகநானூறு** ௩௫-ஆம் செய்யுளில் பெண்ணையாற்றை இவர் சிறப்பித்திருக்கிறார்.

எட்டுத்தொகையில் இவரியற்றிய செய்யுட்கள்-கஉஎ; (**நற்றிணை**-க0, **குறுந்தொகை** - கக, இந்நூலில் நெய்தல் - க00, **அகநானூறு** - கூ.) **நற்றிணை** முதலிய ஏனைத் தொகை நூல்களிலுள்ள உஎ - பாடல்களிலும் நெய்தற்குரியன பல.

கிழவற்குரைத்த கரு-ஆம் பத்தில் தலைவி மிக்க இளமை யுடையாள் என்றதற்கேற்ப அவளுடைய பேதைப்பருவத்து விளையாட்டுக்களிற் பலவற்றை அழகாகக் கூறியிருத்தல் படித்து இன்புறற்பாலது.

தலைவன் தன் நாட்டையும் கொடுத்துத் தலைவியை மணக்கத் துணிந்தனன் என்று தலைவியின் பெறற்கருமையை இவர் பாராட்டுகிறார்; **ஐங்.** கசஎ. இக்கருத்தே **அகநானூறு**, 280-ஆம் செய்யுளிலும் வந்துள்ளது.

'கடலினும் நட்பு பெரியது' (கஅச), எப்பொழுதும் மொழியத்தக்க சொற்கள், 'மெல்லிய இனிய மேவரு தகுந' (**குறுந்.** நஎகூ); 'நல்கூர்ந்தார்வயின் நயனில ராகுதல் தகாது' (**குறுந்.** நஉஎ) என்பன இவர் எடுத்துக்காட்டும் சில நீதிகளாகும்.

தொண்டிப்பத்து முழுவதையும் ஒரு செய்யுளின் ஈற்றடியிலுள்ள சொற்களைக்கொண்டு அதற்கடுத்த செய்யுளை இவர் தொடங்கிப் பாடியிருக்கும் நயம் படித்து மகிழ்வதற்குரியதாகும்.

**குறுந்தொகை**யில் பலவிடங்களில் இவர் பெயர் அம்மூவன் என்றே காணப்படுகிறது.

ச. **கபிலர்** :—இந்நூலின் மூன்றும் நூருகிய குறிஞ்சித்திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். கபிலரென்னும் பெயருள்ள முனிவர் சிலருண்டு; அவருள், எவருடைய பெயர் இவருக்கு இடப்பட்டதோ அது விளங்கவில்லை. இவர் பிறந்த ஊர் பாண்டிய நாட்டிலுள்ள **திருவாதவூர்**; இது, "நீதிமா மதூக நீழ *னெட்டிலையிருப்பையென்றோர், காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர், சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துளங்கக் காட்டும், வேதநாயகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்" (**திருவால:** உஎ : 4) என்பதனால் வெளியாகின்றது. இவர் அந்தணவருணத்தினர்; "யானே பரிசிலன் மன்னுமந்தணன்", "யானே, தந்தை தோழனிவரென் மகளிர், அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே' (**புறநா,** உ௦௦, உ௦க) எனத் தம்மைப் புலப்படுத்துவதற்காக இவர் கூறிய செய்யுட்களும், "புலனழுக்கற்ற வந்த ணாளன்" (**புறநா.** கஉகூ) என **மாறோக்கத்து நப்பசலையார்** இவரைப் பாராட்டிக் கூறிய செய்யுளும் இதனைப் புலப்படுத்தும்.

---

* "நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடாதாயிற் பீடுடைப் பிடியின், கோடேய்க் கும்மே வாடிலோ பைந்தலைப், பரதர் மனைதொறு முணங்கும், செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே" —**தமிழ் நாவலர்சரிதை.**

**வேள்பாரியின்** உயிர் நண்பரும் அவன் அவைக்களத்துப் புலவருமாக இவர் விளங்கினார். தன் மகளிரை மணஞ் செய்துகோடற்குத் தாம் விரும்பியபடி அவன் கொடாததுபற்றிச் சினந்து தமிழ் நாட்டு மூவேந்தரும் பெரும் போர் செய்ய நினைந்து நால்வகைச் சேனைகளோடும் அவன் மலையைச் சூழ்ந்தபோது அவர்களைச் சிறிதும் மதியாது அவனுடைய அருமைக் குணங்களைப் புலப்படுத்திப் பாடினர்; அவற்றைப் புறநானூற்றிற் காணலாம்; அவனிறந்தபின்பு, இவர் மனமுருகிப் பல செய்யுட்களாற் புலம்பி, அவன் புதல்வியரை அழைத்துச் சென்று மணஞ் செய்துகொள்ளும்படி இருங்கோவேள், விச்சிக்கோன் என்பவர்களை வேண்ட மறுத்தமைகண்டு அவர்களை வெறுத்துப் பின்பு அம்மகளிரைப் பார்ப்பார்க்கு வாழ்க்கைப்படுத்திவிட்டு வந்து தம்முடைய நட்புக்கடனைக் கழித்தனர்.

ஆரியவரசன் **பிரகத்தனைத்** தமிழறிவித்தற்குக் **குறிஞ்சிப்பாட்டை** இயற்றினர். **பதிற்றுப்பத்தில்** எ - ஆம் பத்தைப் பாடிச் **சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதனிடம்** நூறுயிரங் காணமும் அவன் நன்றுவென்னும் ஒரு மலைமீது ஏறிக் கண்டுகொடுத்த நாடும் பரிசிலாகப்பெற்றனர்.

பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்றாகிய **இன்னாநாற்பதும்**, **கலித்தொகையில்** இரண்டாவதாகிய குறிஞ்சியிலுள்ள கலிப்பாக்களும் இவர் இயற்றியனவே. இவர் குறிஞ்சித் திணையில் மிகப் பயின்றவரென்றும், அதன் வளங்களை விளங்கப் பாடுதலிற் பேராற்றலுடையவரென்றும் இவர் இயற்றிய செய்யுட்கள் புலப்படுத்தும்; இவரருளிச்செய்தனவாக 278-பாடல்கள் (**நற்.** 20; **குறுந்.** 29; **கலி.** 29; **ஐங்.** 100; **பதிற்.** 10; **அகநா.** 16; **புறநா.** 30; **குறிஞ்சி.** 1; "நெட்டிலை யிருப்பை" என்பது - 1; **திருவள்.** 1; **இன்னாநாற்பது,** 41) இப்பொழுது கிடைக்கின்றன. **பன்னிருபாட்டியலில்** இவர் பெயரினொடு சில சூத்திரங்கள் காணப்படுகின்றன. இவருடைய வாக்கில் விநாயகக் கடவுள், முருகக் கடவுள், சிவபெருமான், பலதேவர், திருமால் இவர்களுடைய துதிகள் வந்திருக்கின்றன. இதனால், இவர் சமயக்கோட்பாட்டிற் **பாரதம்பாடிய பெருந்தேவனாரைப்** போன்றவராக எண்ணப்படுகிறார்.

**எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு** என்னும் முத்தொகுதி நூல்களிலும் இவருடைய பாடல்களும் நூல்களும் கலந்திருத்தல் இவரது பெருமையை விளக்குகின்றது. "அரசவை பணிய வறம் புரிந்து வயங்கிய, மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின், உவலை கூராக் கவலையி

னெஞ்சின், நனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" (**பதிற்.** அரு) எனப் **பெருங்குன்றூர்கிழாரும்,** "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" (**புறநா.** ருங) எனப் **பொருந்திலிளங்கீரனும்,** "புலனழுக் கற்ற வந்த ணாளன், இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன், பொய்யா நாவிற் கபிலன்" (**புறநா.** கஉசு, களச) என **மாறோக்கத்துநப்பசலையாரும்** பாடியவற்றைப் பார்க்கையில் இவருடைய மன வாக்குக் காயங்களின் தூய்மையும் அறம்புரி கொள்கையும் பெரும்புலமையும் அன்புடைமையும் நட்பின் பெருமையும் நன்கு விளங்குகின்றன.

இவராற் பாடப்பட்டோர்: அகுதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதன், சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை, நள்ளி, மலையமான்திருமுடிக்காரி, மலையன், விச்சிக்கோன், வேள்பாரி, வையாவிக்கோப்பெரும்பேகன் என்பவர்கள். கொல்லிமலை, பறம்புநாடு, பறம்புமலை, மூள்ளூர் மலை, முள்ளூர்க்கானமென்பவைகள் இவராற்பாராட்டப்பெற்றிருத் தலின், அவைகள் இவர்காலத்தில் விளக்கமுற்றிருந்தனவென்றும், இவர் பழகிய இடங்களென்றும் சொல்லலாம். நட்பு, வண்மை, நன்றிமறவாமை என்பவைகளை இவருடைய செய்யுட்களிற் பரக்கக் காணலாம்.

பழைய இலக்கண உரைகளில் வந்துள்ள '**கபிலபரணர்**' என்பதனால் **பரணர்** என்பவருக்கும், "பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக்காட னென்போன்" (**திருவால.** உ○ : 1) என்னும் திருவிருத்தத்தால் **இடைக்காடருக்கும்** சிறந்த நட்பினராக இவர் எண்ணப்படுகிறார். இவர் வேறு; தொகை நூல்களிற் காணப்படும் **தொல்கபிலர்** என்பவர் வேறு. **வீரசோழியம்,** தொகைப் படலம், 6 - ஆம் கட்டளைக் கலித்துறையுரையால், பரணருடன் இவர் வாது செய்தனரென்பது வெளியாகின்றது. கக - ஆம் திருமுறையில் வந்துள்ள **மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி** என்னும் பிரபந்தங்கள் மூன்றையும் அருளிச்செய்த **கபிலதேவ நாயனார்** என்பவர் இவரேயென்று சிலர் கூறுவர். மேற்கூறிய திருவிளையாடற் புராணத்தில், இடைக்காடன் பிணக்குத்தீர்த்த திருவிளையாடல், 11 - ஆம் திருவிருத்தத்தில், "எனையந்தாதி சொன்னவன் கபிலன்" என்று சிவபெருமான் கட்டளையிட்டரு ளியதாக வந்திருத்தல் காண்க.

'முதலிற் கூறுஞ் சினையறி கிளவி' என்னும் **தொல்காப்பியச்** சூத்திரத்துக்கு **இளம்பூரணரும், சேனாவரையரும்** எழுதிய உரையால்

கபிலராற் செய்யப்பெற்றுக் **கபிலம்** என்னும் பெரிய நூலொன்று இருந்ததாகத் தெரிகிறது. இவருடைய விரிந்த வரலாற்றைப் **பத்துப்பாட்டுப்** பதிப்பிலுள்ள பாடினோர் வரலாற்றிற் காணலாம்.

ரு. **ஓதலாந்தையார்** :—இந்நூலின் நான்காநூறாகிய பாலைத் திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். ஆதன்தந்தையென்பது ஆந்தையென்று மருவியதென்பது பழைய உரையாசிரியர்களுடைய கொள்கை. பாலைத்திணை இயல்பை விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். **குறுந்தொகையில்** ரு-ம், இந்நூல் பாலையில் க௦௦-ம் இவரியற்றிய செய்யுட்கள்.

பாலைத் திணையில் பிரிதலும் பிரிதல் நிமித்தமுமே பயின்று வருவனவாயினும், 'தலைவி தலைவனை மணந்து அவனுடன் இனியளாய் இன்று வரும்' எனக் கேட்ட செவிலி அதனை நற்றாய்க்குக் கூறும் செய்யுளை ஈற்றில் அமைத்து இத் திணைக்கு மங்கல முடிபு கொடுத்திருத்தல் மிக அழகாயுள்ளது.

தாம் அன்பு வைத்துள்ளாருடைய அரிய பண்புகளை நினைக்குந் தோறும் ஒருவர்க்குற்ற வழிநடைத் துன்பம் முதலியன நீங்குமென்பதை இவர் 322, 325, 327 ஆங்கவிகள் முதலியவற்றில் வெளியிடுகிறார்.

ஒரு காதலி தான் கருதியவனையே கணவனாகக் கோடல் வேண்டுமென்று நினைப்பள் (371) என்றும் ஒரு தலைவியை அவள் விரும்பும் தலைவனுக்கு மணஞ்செய்து கொடுக்க விருப்பமற்ற தாயை 'அறனில் தாய்' (385) என்றும், தீவினையை 'அறனில் பால்' (376) என்றும், அந்தணர்க்குரிய கொள்கையைக் கூறுமிடத்து, 'அறம்புரி பெருமறை நவின்ற நாவிற், றிறம்புரி கொள்கை' (387) என்றும், அறத்தைச் செய்வோர் அன்பைக் கருதுவது தகாது என்பதை, 'அன்பில் அறனும்' (394) என்றும் இவர் கூறுவதிலிருந்து அறத்தை இவர் பல படியாகப் பாராட்டுகின்றவர் என்பது தெரிகிறது. இவர் செய்யுட்களில் சொல் நயம் பொருள் நயங்களை அதிகமாகக் காணலாம்; 380, 385, 391.

சு. **பேயனார்** :—இந்நூலின் ஐந்தாநூறாகிய முல்லைத் திணையைப் பாடிய இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். முல்லைத் திணைவளங்களை விளங்கப்பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். மற்றத் தொகைகளுள்ளே **குறுந்தொகையில்** மட்டும் ச - பாக்கள் இவர் செய்தனவாக உள்ளன. அவற்றுள், மூன்று செய்யுட்கள் முல்லைத் திணையைக் குறித்தனவே. பேயனென்றும், பேயாரென்றும் இவர் பெயர் பிரதிகளிற் காணப்படுகின்றது, **யாப்பருங்கல விருத்தியுரையில்,**

*"கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்
கரைத்திருந்த சாந்தைத் தொட் டப்பேய்
மறைக்குமோ மாட்டாது மற்றுந்தன் கையைக்
குறைக்குமாங் † கூர்ங்கத்தி கொண்டு"

என்னும் வெண்பாவை மேற்கோளாக எடுத்துக் காட்டிய அந்நூலுரையாசிரியர், 'இது **பூதத்தாரும்,** ‡ **காரைக்காற்பேயாரும்** பாடியது; இதுவும் இரண்டாமடி குறைந்து வந்தது கண்டுகொள்க' என்று எழுதியிருத்தலாற் காரைக்காற் பேயாரென்று ஒருவர் பண்டைக்காலத்தில் பாடும் வன்மையுள்ளவராக இருந்தாரென்றுமட்டும் தெரிகின்றது. அவரும் இவரும் ஒருவரோ வேறோ யாதும் புலப்படவில்லை.

எ. **புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்:**—இத்தொகை நூலைத் தொகுத்த இவர் மலைநாட்டின்கண்ணதாகிய கூடலூரை இருப்பிடமாக உடையவர்; வேளாண் மரபினர்; இவருடைய பாடல்கள் இன்சுவையைத் தருபவை; ஒரு விண்மீனின் வீழ்ச்சியைக்கண்டு கோச்சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்னும் அரசன் இன்ன நாளில் இறப்பானென்று முதலில் நிச்சயித்திருந்து அவ்வாறே அவன் இறந்ததுகண்டு ஒருவாற்றானும் பிரிவாற்றாது வருந்தினரென்று, "ஆடியலழற்குட்டத்து" (**புறநா.** உஉகூ) என்னும் பாடலாலும் அதன் பின்னுள்ள வாக்கியங்களாலும் தெரிதலால், இவர் கணிதத்திலும் வல்லவராகக் கருதப்படுகிறார்; இவர் மேற்கூறிய அரசனால் மிக ஆதரிக்கப்பெற்றவர்; அவன் வேண்டுகோளால் **ஐங்குறுநூ**றென்னும் தொகைநூலைத் தொகுத்தனர். இந்நூலின் இறுதி வாக்கியத்தில் 'புலத்துறைமுற்றிய கூடலூர் கிழார்' என ஆன்றோராற் சிறப்பித்துக் கூறப்பெற்றிருத்தலின், இவருடைய பெரும்புலமை நன்கு வெளியாகின்றது; இவர் காலத்துப் புலவர்கள் **குறுங்கோழியூர் கிழார், பொருந்தில் இளங்கீரனார்** என்பவர்கள். **முதுமொழிக்காஞ்சியை** இயற்றிய **மதுரைக் கூடலூர் கிழார்** என்பவர் வேறு; இவர் வேறு. இவரியற்றிய பாடல்கள் - 4: **குறுந்.** 3, **புறநா.** 1.

அ. **யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையார்:**—புலத்துறைமுற்றிய கூடலூர்கிழாரைக்கொண்டு இந்நூலைத் தொகுப்பித்தோ

---

* இவ்வெண்பா, மிக்க வேறுபாட்டுடன் **கம்பர்** பாடியதாகத் தனிப்பாடற்றிரட்டிற் காணப்படுகின்றது; † 'கூன்கத்தி' என்றும் பாடம்.

‡ காரைக்காற் பேயம்மையாரென்றும் பிரதிபேதமுண்டு.

ராகிய இவர் சேரநாட்டரசர்; சேர பரம்பரையிற் பிறந்தவர்; மகா வீரர்; பெருவண்மையை யுடையவர்; செங்கோலினர்; யானையினது பார்வைபோலும் பார்வையையுடையவர்; கொல்லி மலைக்குத் தலைவர்; விளங்கிலென்னும் ஊருக்குப் பகைவரான் வந்த துன்பத்தைத் தீர்த்தவர்; கபிலருடைய நண்பர்; கடற் கரையிலுள்ள தொண்டியென்னும் நகரத்தை ஆண்டவர்; ஒரு காலத்துப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு போர் செய்து அவனாற் பிணிப்புண்டிருந்து வலிதிற்போய்ச் சிங்காதனத்திலேறிக் குறுங்கோழியூர் கிழாராற் புகழ்ந்து பாடப்பெற்றார். **சோழன் இராயசூயம் வேட்ட பெருநற் கிள்ளி**யோடு போர் செய்தவர்; இவர் பெயர் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையெனவும், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை யெனவும், சேரன் மாந்தரஞ்சேர லிரும்பொறை யெனவும், மாந்தரஞ்சேரலிரும் பொறையெனவும், மாந்தரம் பொறையெனவும் தொகை நூல் களில் வழங்குகின்றது. சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை யென்பதனை ஒட்டுப்பெயரென்பர் (இ. வி. 38.)

**பரிமேலழகர்** ௩௫௫-ஆம் திருக்குறளின் விசேடவுரையில் இவர் பெயரை மேற்கோளாக எடுத்துக்காட்டிப் பொருள் எழுதி விளக்கியிருக்கிறார். சேர பரம்பரையில் மாந்தரனென்று ஓர் அரசன் மிக்க புகழ்பெற்றவனாக இருந்தானென்று **பதிற்றுப் பத்**தால் தெரிகின்றது. இவருடைய பெயர்த்தலையில், 'கோச் சேரமான்' என்ற அடைமொழி காணப்படாமையின், இவர் இந்நூலைத் தொகுப்பிக்குங் காலத்தில் இளவரசராக இருந்தா ரென்றும் தொகுப்பித்த பின்பே முடிபுனையப் பெற்றாரென்றும் தெரிகின்றன. கோவென்பது பண்டைக்காலத்தில் முடிபுனைந்த பின்பு குடிப்பெயரோடு கொடுக்கப்படும் பட்டப்பெயர்; கோச் சேரன், கோச்சோழன், கோப்பாண்டியன் என்பவற்றாலுணர்க. இவரிறந்த பின்பு பிரிவாற்றாது வருந்திப் புலம்பிய கூடலூர் கிழாருடைய "ஆடியலழற்குட்டம்" என்னும் செய்யுள் (**புறநா.** ௨௨௯) இவருடைய அருமைக்குண விசேடங்களை நன்கு புலப் படுத்தும்; இவரைப் பாடிய புலவர்கள் **குறுங்கோழியூர் கிழார்**, **பொருந்திலிளங்கீரனார்**, **கூடலூர் கிழார்**; இவர்களுள் இவரிறந்த பின்பும் இருந்தவர் **கூடலூர் கிழார்**.

---

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 43 | 16, 29 | என் தங்கை | எம் தங்கை |
| 65 | 34 | பெறுஞ்சினை | பெருஞ்சினை |
| 74 | 28 | நல்கி | நல்கின் |
| 78 | 13 | தவறை | தவற்றை |
| 82 | 28 | அம்வளை | அவ்வளை |
| 106 | 11 | நேரிரை | நேரிறை |
| 107 | 7 | தொய்யோ | தெய்யோ |
| 117 | 34 | வொறுத்தலொடு | வொருத்தலொடு |
| 126 | 13 | எதிர்பட்டு | எதிர்ப்பட்டு |
| 129 | 26 | குரவர் | குறவர் |
| 134 | 19 | மஞ்ஞைக்கு | மஞ்ஞைக்கும் |
| 141 | 16 | பொலங்கல் | பொலங்கல |
| 146 | 19 | தலைமகள் | தலைமகன் |
| 189 | 36 | மறையப | மறையப் |
| 207 | 18 | இளையன் | இளையள் |

உ

கணபதி துணை

# ஐங்குறுநூறு

[கடவுள் வாழ்த்து]

[1]நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே.

வாழ்த்து.
பாரதம் பாடிய பெருந்தேவனார்.

குறிப்பு. வாலிழை - தூய அணிகலங்களையுடைய உமாதேவியார். ஒருவன் - சிவபெருமான். முகிழ்த்தன - தோன்றின.

[தொல். செய். 157, பேர். ந.]

(மேற்கோளாட்சி) 'ஆசிரியப்பா மூன்றடியான் வந்தது'

(பிரதிபேதம்) [1] 'மாஅ மேனி', 'மாமலர் மேனி'

## 1. மருதம்

### (க) வேட்கைப் பத்து

1. வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க [1]வெனவேட் டேமே.

என்பது புறத்தொழுக்கத்திலே நெடுநாளொழுகி, 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடுகூடி ஒழுகாநின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது.

(பழையவுரை) 'காவற்பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற் பொருட்டு நெற்பல பொலிக; இரவலர்க்கு ஈதற்பொருட்டுப் பொன் மிக உண்டாகுக' என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகிய தல்லது பிறிது நினைத்திலள்; அவள் இத்தன்மையளாக, நீ ஒழுகிய ஒழுக்

கத்தால் நினக்கும் நின்னெழுக்கத்திற்குத் துணையாகிய பாணனுக்கும் தீங்கு வருமென்றஞ்சி, 'யாண ரூரன் வாழ்க, பாணனும் வாழ்க' என விரும்பி னேம் யாங்களென்றவாறு.

தலைவியை யாயென்றது புலத்தற்குக் காரணமாயின உளவாகவும் அவை மனங்கொள்ளாத சிறப்பை நோக்கி. தோழி யாங்களென உளப்படுத்தது ஆயத்தாரை நோக்கி யெனக் கொள்க. பூவும் புலாலும் ஒக்க விளையும் ஊரனென்றது குலமகளிரைப்போலப் பொது மகளிரையும் ஒப்பக்கொண் டொழுகுவானென்பதாம். **ஆதனவினி** யென்பான் சேரமான்களிற் பாட்டுடைத் தலைமகன்.

**குறிப்பு.** சிறக்க - மிகுக. நெல்லையும் பொன்னையும் சேர்த்துக் கூறுதல் மரபு: **புறநா.** 384 : 11; **பெருங்.** 1. 37 : 196; **சீவக.** 259, 2150. வேட்டோள் - விரும்பினள். யாய் - (இங்கே) தலைவி; **குறுந்.** 9 : 1, 10 : 1. 'தலைவியை யாயென்றது எதிர்ப்பட்ட ஞான்றே கற்புப்பூண்டொழுகுகின்ற சிறப்பை நோக்கி' (**ஐங்.** 6, உரை.) நனைய காஞ்சி - அரும்புகளையுடைய காஞ்சிமரம். சினைய - முட்டைகளையுடைய. பூவும் புலாலும் : **ஐங்.** 10 : 4; **புறநா.** 396 : 1-2. யாணர் - புது வருவாய். ஊரன் : மருதநிலத் தலைவன்.

சொல்லாடி - பேசி. திறம் - வகை. உளப்படுத்தது - சேர்த்துக்கொண்டது. பொதுமகளிர் - பரத்தையர்.

**(மேற்.)** அடி, 1. வாழ்த்தல் என்னும் மெய்ப்பாடு வந்தது; **தொல்.** மெய்ப். 12, **இளம்.** **(பி - ம்.)** 1 முதல் 10. [1] 'வெனவேட் டோமே' (க)

2. வாழி யாதன் வாழி யவினி
விளைக வயலே வருக விரவலர்
எனவேட் டோளே யாயே யாமே
பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்கும்
தண்டுறை யூரன் கேண்மை
[1]வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே.

இதுவுமது.

**(ப - ரை.)** தலைவி இல்லறமே நினைந்து ஒழுகினள்; யாங்கள் நின் காதல் அவள்மேற் சுருங்குகின்ற திறம் நோக்கி, 'நின் கேண்மை வழிவழிச் சிறக்க' என விரும்பினேம் எ-று.

சிறப்புடைய கருங்குவளையுடனே சிறப்பில்லாத நெய்தல் நிகர்க்கும் ஊரனென்றது குலமகளிருடனே பொதுமகளிர் இகலு மூரன் எ - று.

**குறிப்பு.** நெய்தல் - ஒருவகை நீர்ப்பூ. நிகர்க்கும் - ஒப்பாகும். நீலத்தினும் நெய்தல் இழிந்தது; **நாலடி.** 236. கேண்மை - நட்பு. வழிவழிச் சிறக்க - நாள்தோறும் பெருகுக; "வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்" **மதுரை.** 194.

**(பி - ம்.)** [1] 'வழிவழி சிறக்க' (உ)

3. வாழி யாதன் வாழி யவினி
பால்பல வூறுக பகடுபல சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
வித்திய வுழவர்[1] நெல்லொடு பெயரும்
பூக்கஞ லூரன் றன்மனை
வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை.) தலைவி இல்லறமே நினைந்து ஒழுகினள்; 'அவன் பொதுமனையில் வாழ்க்கையொழிந்து தன் மனையிலே வாழ்வானாக' என வேட்டேம் யாங்கள் எ-று.

மேல் விளைதற்கு வித்திய உழவர் முன்பு விளைந்த செறுவின் நெல்லோடு பெயருமென்றது பின்வரும் பரத்தையர்க்கு வருவாய் பண்ணி அக்காலத்து உளராகிய பரத்தையரோடு இன்பம் நுகர்வானென்பதாம்.

**குறிப்பு.** பால் பல ஊறுக - பசுக்கள் பால் பெரிதும் மிகுக; "என் பாராட்டைப் பாலோ சில" (**கலி.** 85 : 33) என்பதிற் சிலவென்பது சிறிதென்னும் பொருளில் வந்ததுபோல இங்கே பல என்பது மிகுதி யென்னும் பொருளில் வந்தது. பகடு - உழும் எருதுகள். வித்திய - விதைத்த. பூ கஞல் - பலவகைப் பூக்கள் நெருங்கிய. பூக்கஞலூரன் : **ஐங்.** 8 : 5, 16 : 3, 99 : 3 ; **சிறுபாண்.** 108. தன்மனை வாழ்க்கை - தன் வீட்டின்கண்ணே வாழ்தல்.

பொது மனை - பரத்தையர் வீடு. செறு - வயல்.

(**பி - ம்.**) [1] 'நெல்லொடு பேரும்' (௩)

4. வாழி யாதன் வாழி யவினி
[1] பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக
என்வேட் டோளே யாயே யாமே
பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு
பழன மாகற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை.) இவள் இல்லறமே விரும்பி ஒழுகினள்; 'அவன் மார்பு ஊரவர்க்கெல்லாம் பொதுவாகிய பழனம்போலாது இவட்கே யுரித்தாக' என விரும்பினேம் யாங்கள் எ-று.

பூத்துப் பயன்படாக் கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊரனென்றது ஈன்று பயன்படாப் பொதுமகளிரையும் மகப்பயந்து பயன்படும் குலமகளிரையும் ஒப்ப நினைப்பான் எ - று.

**குறிப்பு.** பகைவர் புல் ஆர்க - பகைவர் தோல்வியுற்றுப் புல்லைப் பறித்து உண்ணுக; புல்லார்தல் தோல்விக் குறிப்பு : "புன்மேய்வார்" (**சிறுபஞ்ச.** 41); **வி. பா.** 9-ம் போர். 5, 12-ம் போர். 12. ஓதுக - வேதத்தை ஓதுக.

காய்த்த - விளைந்து முதிர்ந்த. மருதநிலக் கருப்பொருள்களுட் சிறந்தமை பற்றிக் கரும்பும் நெல்லும் கூறப்பட்டன; "நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்" (நான்மணி. 9.) பழனம் - ஊரார்க்குப் பொதுவாகிய இடம். ஆகற்க - ஆகாதொழிக. (பி - ம்.) [1] 'பகையர்' (௪)

5. வாழி யாதன் வாழி யவினி
பசியில் லாகுக பிணிசே ணீங்குக
எனவேட் டோளே யாயே யாமே
முதலைப் போத்து முழுமீ னாரும்
தண்டுறை யூரன் றேரெம்
முன்கடை நிற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை.) இவள் இல்லறமே விரும்பி ஒழுகினள்; யாங்கள் 'அவன் தேர் பிறமகளிர் முன்கடை நிற்றலொழிந்து எம் முன்கடை நிற்க' என விரும்பினேம் எ-று.

'முதலை......ஊரன்' என்றது ஒருங்குவாழ்வாரைப் பழமை நோக்காது உயிர் கவர்வானென்பதாம்.

குறிப்பு. இல்லாகுக - இல்லையாகுக; ஐங். 9 : 2. பிணி - நோய். சேண் - நெடுந்தூரத்தில். பசியும் பிணியும் இல்லாதிருத்தல் : பதிற். 13 : 27. முதலைப் போத்து - ஆண் முதலை. முழுமீன் ஆரும் - பெரிய மீன்களை உண்ணும்.

பிறமகளிர் முன்கடை - பரத்தையர் வீட்டு வாயிலில். ஒருங்கு வாழ்வார் - உடன் வாழ்பவர். [(தொல். மரபு. 43, பேர்.)

(மேற்.) அடி, 4. போத்தென்னும் ஆண்பெயர் முதலைக்கு வரும் (ரு)

6. வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
எனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
எந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே.

து - து களவினிற் பலநாளொழுகி வந்து வரைந்துகொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் வரையாது ஒழுகுகின்றநாள் [1]நீயிர் இங்கு இழைத்திருந்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது.

(ப - ரை.) நின்னை எதிர்ப்பட்டவன்றே நீ வரைந்தாயெனக் கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது தலைவி பிறிதொன்றும் நினைத்திலள்; யாங்கள், 'அகன்ற பொய்கைக்கு அணியாகத் தாமரையை யுடைய ஊரனாதலால், அத்தண்டுறையூரன் மனைக்கு அணியாம்வண்ணம் இவளை வரைவானாக; எந்தையும் கொடுப்பானாக' என விரும்பினேம் எ-று.

ஈண்டுத் தலைவியை யாயென்றது எதிர்ப்பட்ட ஞான்றே கற்புப் பூண்டொழுகுகின்ற சிறப்பைநோக்கி.

**குறிப்பு.** யாண்டு பல நந்துக - அரசனுடைய வருடங்கள் பல பெருகுக; "ஆயிர வெள்ளம் வாழிய பலவே" (**பதிற்.** 21.) மலர்ந்த பொய்கை - அகன்ற பொய்கை. முகைதல் - அரும்புதல்; **குறுந்.** 186; **அகநா.** 177. வரைக - மணம் செய்துகொள்க. பாங்கி தலைவியின் தந்தையை எந்தை என்றாள் தலைவிக்கும் தனக்கும் உள்ள ஒற்றுமை பற்றி; **குறுந்.** 51 : 4 - 5; "எந்தை தன்னுள்ளம்" (**கலி.** 61.)

இழைத்திருந்த - செய்துகொண்டிருந்த. பொய்கைக்கு அணி தாமரை: 'குளத்துக் கணியென்ப தாமரை" (**நான்மணி.** 9.)

(**மேற்.**) மு. 'களவொழுக்கம் புலப்பட ஒழுகுதல் இல்லாத தலைவியைத் தலைவன் வரைந்து கோடல் குறித்துப் பரவிய தெய்வம் அதனை முடித்தலின் அப்பரவுக்கடன் கொடுத்தல் வேண்டும் எனத் தலைவற்குக் கூறுமிடத்துத் தோழிக்குக் கூற்று நிகழும்' என்பதனுள் 'கிழவோற் சுட்டிய' எனப் பாடங்கொண்டு மேற்கோள் காட்டுவர் (**தொல்.** கற்பு. 9, **இளம்.** **ந.**)

(**பி - ம்.**) [1] 'நீயிர் நினைத்திருந்த திறம்' (சு)

7. வாழி யாதன் வாழி யவினி
அறநனி சிறக்க வல்லது கெடுக
எனவேட் டோளே யாயே யாமே
உளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்கும்
தண்டுறை யூரன் [1]றன்னூர்க்
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(**ப - ரை.**) இவள் நின்னை எதிர்ப்பட்ட அன்றே வரைந்தாயெனக் கொண்டு இல்லறத்திற்கு வே............

**குறிப்பு.** அல்லது=அறமல்லது - பாவம். அறம் சிறக்க அல்லது கெடுக; **ஐங்.** 9 : 2; **புறநா.** 195. உளைப்பூ மருதம் - உள்ளே துய் உள்ள பூக்களையுடைய மருத மரம்; "உளைப்பூ மருதத்து" (**முருகு.** 28.) கிளைக்குருகு - இனத்துடன் கூடிய நாரை. நீர்த்துறையில் மருதமரம் கூறப்படுதல் : **ஐங்.** 31 : 3, 33 : 2, 74 : 3; **குறுந்.** 50, 258; **பதிற்.** 23 : 18-9; **பரி.** 7 : 83; **கலி.** 26 : 13; **அகநா.** 36 : 9-10; **புறநா.** 243 : 6; **சிலப்.** 14 : 72. அடி, 5-6 : **ஐங்.** 10 : 5-6. மதுரையில் வையையாற்றில் ஒரு துறை, 'திருமருத முன்றுறை' என்னும் பெயருடன் பண்டை நூல்களில் பயின்று வழங்கும்.

(**பி - ம்.**) [1] 'றன்னூர் கொண்டனன்' (எ)

8. வாழி யாதன் வாழி யவினி
அரசுமுறை செய்க களவில் லாகுக
எனவேட் டோளே யாயே யாமே

அலங்குசினை மாஅத் தணிமயி லிருக்கும்
பூக்கஞ லூரன் சூளிவண்
வாய்ப்ப தாக வெனவேட் டேமே.

இதுவுமது.

**குறிப்பு.** முறை - அறநூலும் நீதி நூலும் சொல்லும் நெறி; **குறள்.** 388, **பரிமேல்.** அலங்கு சினை மாஅத்து - அசைகின்ற கிளைகளையுடைய மாமரத்தில்; மாஅத்து : **ஐங்.** 10 : 4, 61 : 1; **குறுந்.** 8 : 1. பூக்கஞலூரன் : **ஐங்.** 3 : 5, அடிக். சூள் - நின்னை விரைவில் மணம் செய்துகொள்வேன் என்று தெய்வம் சுட்டிக் கூறிய உறுதிமொழி. வாய்ப்பதாக - நிச்சயமாகப் பலித்திடுக; விரைவில் மணந்துகொள்வானாக என்றபடி. (அ)

9\. வாழி யாதன் வாழி யவினி
நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக
எனவேட் டோளே யாயே யாமே
கயலார் நாரை போர்விற் சேக்கும்
தண்டுறை யூரன் கேண்மை
அம்ப லாகற்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை.) 'இன்பம் நுகர்ந்தவன் செல்வமனைக்கண்ணே வைகும்வண்ணம் வரையுந்துணையும் அவன்கேண்மை அம்பல் ஆகாதொழிக' என விரும்பினேம் யாங்கள் எ-று.

**குறிப்பு.** நன்று - அறம்; **குறள்.** 1072. தீது - பாவம். கயல் ஆர் நாரை - கயல் மீனை உண்ணும் நாரை. போர்வு - நெற்போர்; **ஐங்.** 58 : 1, 153 : 4; **சீவக.** 58. இப்பெயர் போர்பு, போர் எனவும் வழங்கப்படுகிறது. சேக்கும் - தங்கும். அடி, 4: **புறநா.** 24 : 20. அம்பல் - சிலர் அறிந்து கூறும் பழிமொழி; 'சொல் நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்வது' (**இறை.** 22, உரை) என்பர். (கூ)

10\. வாழி யாதன் வாழி யவினி
மாரி வாய்க்க வளநனி சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்
தண்டுறை யூரன் றன்னொடு
கொண்டனன் செல்க வெனவேட் டேமே.

இதுவுமது.

(ப - ரை.) இவள் நின்னை எதிர்ப்பட்டவன்றே வரைந்தாயெனக் கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகினாள்; யாங்கள் 'அவன் வரைந்துகொள்ள நினையானாயின், பூத்த மாவினையும் புலாலஞ்சிறு மீனையுமுடைய ஊரனாதலால், அதற்கேற்ப, எம்மூர்க்கண் அறத்தொடுநிலை

வகையாற் கற்புடைமையும் எதிர்ப்பாட்டினுல் அலரும் இளைப்பவாயினும் உடன்கொண்டு செல்வாஞக ' என விரும்பினேம் எ - று.

குறிப்பு. மாரி வாய்க்க - மழை பருவம் பொய்யாமற் பெய்க. வளம் - செல்வம். பூத்த மாமரங்களையும் புலால் நாற்றம் வீசும் சிறு மீன்களையும் உடைய. பூவும் புலாலும் : ஐங் 1 ; 4, அடிக். அடி, 5–6 : ஐங் 7 : 5–6. (கo)

(க) வேட்கைப்பத்து முற்றிற்று.

## (உ) வேழப்பத்து

11. மனை [1]நடு வயலை வேழஞ் சுற்றும்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
அல்ல னென்னுமென் றடமென் ருேளே.

ஏ - து பாணன் முதலாயினர்க்குத் தலைமகன் கொடுமை கூறி வாயில் மறுத்த தலைமகள் கழறிய பாங்கற்கு வாயில்நேர்வாள் சொல்லியது ; 'தலைவன் எவ்வாறு தப்பியொழுகினும் அவன் கொடுமை நின்ஞற் [2]புலப்படுதல் தகாது ' என்று கழறிய பாங்கிக்குத் தலைமகள் சொல்லிய தூஉமாம்.

(ப - ரை.) மனைக்கண் வயலை புறத்து வேழம் சுற்றுமூரனென்றது மண மனைக்கண்ணே வைகுஞான்றும் பரத்தையர் திறமே சூழ்வானென்பதாம்.

குறிப்பு. நடுவயலை - நட்டு வளர்க்கப்பட்ட பசலைக்கொடி ; எழுவாய். வேழம் - கொறுக்கைச்சி ; கொறுக்காந்தட்டையெனவும் வழங்கும். சுற்றும் - கொழு கொம்பாகச் சுற்றிப்படரும். துறைகேழூரன் கொடுமை : ஐங். 12 : 2. கொடுமை என்றது பரத்தைமையை. என்றும் - என்று சொல்லுவோம். அல்லன் - நல்லவன் அல்லன். உண்டி குறைதலால் உடம்பு நனிச் சுருங்கித் தொடி நெகிழ்தலின், 'தோள் அல்லன் என்னும்' என்ருள். தலைவி தன்னையும் தோளையும் வேறுபடுத்திக் கூறல் : குறுந். 77 : 6 ; 121 : 5-6.

கழறிய - இடித்துக் கூறிய. புலப்படுதல் - பிறர் அறிதல்.

(மேற்.) அடி, 2. கெழு என்னும் சாரியை உகரக் கேடும் எகரநீட்சியும் பெற்றது (தொல். குற்றியலுகரப். 76, ந.) மு. கற்பின்கண் தலைவனை நீங்கி மிகத் தனிமையுற்று அலமரல் பெருகிய காம மிகுதியின்கண் தலைவிக்குக் கூற்று நிகழும் (தொல். கற்பு. 6, இளம்.) 'இதனுள் முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றும் கூறலின் நாடக வழக்கும், தலைவனைத் தலைவி கொடுமை கூறல் உலகியலாதலின் உலகியல் வழக்கும் உடன் கூறிற்று' (தொல். அகத். 53, ந.) ; இ. வி. 378.

(பி - ம்.) [1] 'நெடு வயலை' [2] 'புலப்படுத்தற்காகாது' (க)

12. கரைசேர் வேழங் கரும்பிற் பூக்கும்
துறைகேழ் ஊரன் [1]கொடுமை நன்றும்
ஆற்றுக தில்ல யாமே
தோற்க தில்லவென் றடமென் றோளே.

**எ - து** உழையர் [2]நெருங்கிக் கூறியதிறமும் தனது ஆற்றாமையும் நினைந்து வாயில்நேரக் கருதிய தலைமகள் பரத்தையர்க்குப் பின்பும் அவன் சிறப்புச் செய்தானென்பது கேட்டுப் பொறாளாய்க் கருத்தழிந்து தன்னுள்ளே சொல்லியது.

**(ப - ரை.)** கரைமருங்குநிற்கும் வேழம் வயலகத்து விளைக்கும் தீங் கரும்புபோலப் பொலியுமூரனென்றது பொதுமகளிர்க்குக் குலமகளிரைப் போலச் சிறப்புச்செய்கிற்பான் எ - று.

**குறிப்பு.** கரைசேர் வேழம் : ஐங். 13 : 2, 20 : 3-4. கரும்பின் - கரும்பைப் போல. வேழம் கரும்பைப்போலப் பூத்தல் ; "வேழம், கரும்பி னலமருங் கழனி" (ஐங். 18 : 1-2.) நன்றும் ஆற்றுக தில்ல - பெரிதும் பொறுப்பேமாக ; உம் : அசைநிலை ; தில் : விழைவுப் பொருளில் தன்மைக்கண் வந்தது ; **தொல்.** இடை. 12 ; **குறுந்.** 57. தோற்க - மெலிக ; தொடிகள் முதலியவற்றை இழக்க எனினுமாம். தில்ல : அசை. யாம், என் என்பன பன்மை ஒருமை மயக்கம்.

உழையர் - பக்கத்துள்ளோர். வாயில் - தூது.

**(மேற்.)** அடி, 1-2. கருப்பொருள்தானே உவமமாய் நின்று உள்ளுறைப் பொருள் தந்தது (**தொல்.** அகத். 46, **ந.**) **மு.** 'என்பது பயவுவமப்போலி; இதனுள் தலைமகன் கொடுமை கூறியதல்லது அக்கொடுமைக்கு ஏதுவாகியதொன்று விளங்கக் கூறியதிலளாயினும் இழிந்த வேழம் உயர்ந்த கரும்பிற் பூக்குமெனவே அவற்றிற்கும் இழிவு உயர்வா மென்ப தொன்றில்லை, எல்லாரும் இன்பங் கோடற்குரியர் தலைமகற்கு என்றமையின் யாமும் பரத்தையரும் அவற்கு ஒத்தனம் என்றமையின் அவை கூறினள் என்பது' (**தொல்.** உவம. 25, **பேர்.**) இம்மேற்கோளில் **ஐங்.** 11-ம் பாட்டின் பின் இரண்டடிகள் 12-ம் பாட்டின் பின் இரண்டடிகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**(பி - ம்.)** [1] 'கொடுமை நாணி' [2] 'நெருக்கிக்' (உ)

13. [1]பரியுடை நன்மான் பொங்குளை யன்ன
அடைகரை வேழம் வெண்பூப் பகரும்
தண்டுறை யூரன் பெண்டிர்
[2]துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே.

**எ - து** வாயிலாய்ப் புக்கார்க்குத் தலைமகள், 'அவன் பெண்டிர் நள்ளென் யாமத்தும் துயிலார் ; அவர் அறியாமல் அவன் வருந்திறம் யாது ?' எனச்சொல்லி வாயில் மறுத்தது.

**(ப - ரை.)** பரியுடைநன்மான் தலைக்கணிந்த வெண்கவரிபோல வேழம் வெண்பூவைக் கொள்வாரைக்குறித்துக் கொடுக்குமூரனென்றது நன்றுபோலக் காட்டித் தம் நலத்தினை விற்பார் வாழும் ஊரன் எ - று.

**குறிப்பு.** பரி - நடை. மான் - குதிரை. பொங்குதல் - மேன்மேற் கிளர்தல். உளை - குதிரையின் தலையில் அணியப்படும் சாமரை. உளையன்ன வேழவெண்பூ : "வேழ வெண்பூ வெள்ளுளை" (ஐங். 19 : 3.) பகரும் - கொள்வாரைக் குறித்துக் கொடுக்கும். தண்டுறையூரன் : ஐங். 21 : 3, 83 : 4, 88 : 2. பெண்டிர் என்றது பரத்தையரை. துஞ்சூர் யாமத்தும் : ஊர் துஞ்சு யாமத்தும் என மாற்றுக ; ஊர்துஞ்சு யாமம் - ஊரார் துயிலும் நள்ளிரவு ; நற். 262 : 3 ; குறுந். 302 : 7 ; அகநா. 360 : 12 ; கலி. 65 : 3.

(மேற்.) மு. இஃது ஊடல் நிமித்தம் என்பது (தொல். அகத். 14, ந.)

(பி - ம்.) [1] 'புரியிடை', 'புரிவுடை' [2] 'துஞ்சும் யாமத்தும்' (கூ)

14. கொடிப்பூ வேழந் தீண்டி யயல
வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கும்
மணித்துறை யூரன் மார்பே
[1]பனித்துயில் செய்யு மின்சா யற்றே.

**எ - து** தலைமகள் புணர்ச்சிவேட்கையைக் குறிப்பினான் உணர்ந்த தோழி, 'அவன் கொடுமை நினையாது அவன் மார்பை நினைந்து ஆற்றாயாகின்றது என்னை ?' என்றாட்கு 'அவன் கொடியனே யாயினும், அவன் மார்பு குளிர்ந்த துயிலைச் செய்யும் இனிய சாயலையுடைத்து, ஆதலாற் காண்' எனச் சொல்லியது.

(ப - ரை.) நீண்ட பூவினையுடைய வேழம் தீண்டுதலான் வடுக்கொண் மாத்து வண்டளிர் நுடங்குமென்றது பரத்தையரால் தமக்கு உளவாகிய மெலிவு கூறியவாறு.

**குறிப்பு.** கொடி - ஒழுங்கு ; "கொடிக்கரும்பு" (சீவக. 1184) ; நீட்சியுமாம் ; "ஒழுகுபொற்கொடிமூக்கு" (சீவக. 165.) தீண்டி - தீண்ட ; எச்சத்திரிபு. அயல - பக்கத்திலுள்ள. வடு - பிஞ்சு. மாஅத்து வண்டளிர் - மாமரத்தினது வளவிய தளிர். பனித்துயில் - குளிர்ச்சியையுடைய துயில். இன்சாயற்று - இனிய மென்மையையுடையது. தலைவனது மார்பு துயிலுதற்கு இனிய சாயலை உடையது என்றபடி ; ஐங். 4 : 5-6 ; குறுந். 68 : 4 ; அகநா. 328 : 15. தலைவி தலைவன் மார்பில் துஞ்சுதல் ; ஐங். 205 : 4-5 ; நற். 20 : 2, 171 : 11.

(மேற்.) மு. தோழியிடத்துத் தலைவி தலைவனை உவந்து கூறியது (தொல். கற்பு. 6, ந.) (பி - ம்.) [1] 'பணித்துயில்' (௪)

15. மணலாடு [1]மலிர்நிறை விரும்பிய [2]வொண்டழைப்
புனலாடு மகளிர்க்குப் புணர்துணை யுதவும்
வேழ மூதூ ரூரன்
ஊர னாயினு மூரனல் லன்னே.

**எ - து** சேணிடைப்பிரிந்துவந்து உடன் உறைகின்ற தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாகின்றதென்று குறிப்பினான் உணர்ந்து தலைமகள் வேறு

பட்டாளாகத் தோழி அதனையறியாது, 'அவன் உடனுறையவும் வேறுபடு கின்றது என்னை?' என்றாட்கு அவள் சொல்லியது.

(ப - ரை.) புனலாடு மகளிர்க்குப் புணர்ந்த [3]துணையை உதவுகின்ற வேழத்தையுடைய ஊரனுதலாற் புனலாடும் பரத்தையர்க்கு வேழஞ்செய் வனவெல்லாம் செய்வானென்பதாம்.

**குறிப்பு.** மலிர்நிறை - நீர்வெள்ளம். மலிரும் பிசிர் என்பதற்கு ஊற்று நீர் எனப் பொருள் கொள்வர் (பரி. 6 : 83, உரை.) மணலாடு மலிர் நிறை : பரி. 10 : 4. மலிர்நிறை : ஐங் : 42 : 3, 72 : 4 ; குறுந். 99 : 4 ; பதிற். 50 : 5; அகநா. 166 : 15. தழை - மலர்களாலும் தளிர்களாலும் செய்யப்படும் ஒருவகை உடை ; மகளிர் அணிவது ; ஐங். 72 : 1 ; நற். 96, 123, 170. துணை யென்றது துணையாக உதவும் பொருளை. வேழம் புணையாக உதவுதல் : 'வேழ வெண்புணை தழீஇ'', ''கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப், புனலாடு கேண்மை'' (அகநா. 6, 186.) அல்லன் என்னும் மறை உட னுறைவானாயினும் தலைவன் சிறிதும் அன்பிலனென்னும் பொருளைத் தந்து நின்றது ; ''எமக்கு, நீயுங் குருசிலை யல்லை'' (ஐங். 480 : 2.)

(பி - ம்.) [1]'மலர்நிறை' [2]'வெண்டழை' [3]'துணைமை' (ரு)

16. ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்
சிறுதொழு மகளி ரஞ்சனம் பெய்யும்
பூக்கஞு லூரனை யுள்ளிப்
பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே.

எ - து வாயிலாய்ப் புகுந்தார்க்குத் தோழி, 'அவன் வரவையே நினைத்து இவள் கண்ணும் பசந்தன ; இனி அவன் வந்து பெறுவது என்னை ?' எனச் சொல்லி வாயில்மறுத்தது.

(ப - ரை.) 'ஓங்குபூ...லூரன்' என்றது இழிந்தார்க்குப் பயன்படு மூரன் எ - று.

**குறிப்பு.** தூம்புடைத் திரள்கால் - உட்டுளையையுடைய திரண்ட தண் டில்; ''தூம்புடை வேழம்'' (ஐங். 20 : 3.) சிறு தொழுமகளிர் - சிறிய தொழில் செய்யும் மகளிர். அஞ்சனம் - மையை. பெய்யும் - பெய்து வைக் கும். பூக்கஞுலூரன் : ஐங். 3 : 8, அடிக். பூப்போல் உண் கண் - தாமரை மல ரைப் போன்ற மையுண்ட கண் ; ஐங். 101 : 4 ; முல்லை. 23; நற். 20 : 6 ; குறுந். 101 : 4. பொன் போர்த்தன - பசலையுற்றன ; பசலையாவது பிரிவாற் றாமையால் கண் முதலியவற்றில் உண்டாவதொரு நிறவேறுபாடு. கண் பசத்தல் : ஐங். 21 : 4, 34 : 4, 36 : 4-5, 37 : 2, 45 : 4, 169 : 5, 170 : 4, 264 : 4, 477 : 1, 500 : 1; குறுந். 13 : 5. கண் பொன் போல் பசத்தல் ; ''உண்கட்கு மெல்லாம், பெரும்பொன்னுண்டு'', ''பொன்னெனப் பசந்த கண்'' (கலி. 64 : 21-2, 77 : 12.)

(மேற்.) அடி, 4. ''துன்பு பசப்பூருங் கண்ணிழ றன்னைத், திருமல ரெடுத்துக் கொன்றை காட்ட'' (கல். 21, மயிலேறு.) (சா)

17. புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
விசும்பாடு குருகிற் றோன்று மூரன்
புதுவோர் மேவல னாகலின்
வறிதா கின்றென் மடங்கெழு நெஞ்சே.

**ஏ - து** தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி, 'இவ்வாறு ஒழுகுதலும் ஆடவர்க்கு இயல்பன்றே ; நீ இதற்கு நெஞ்சு அழிகின்றது என்னை ?' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**(ப - ரை.)** புறத்தொழுக்கம் உளதாகிய துணையேயன்றி நாள்தோறும் கனவில் வந்து வருத்துதலும் உடையனாதலால் என்னெஞ்சு பெருமையிழந்து மெலிகின்றதென்பதாம். புதன்மிசையே நுடங்கும் வேழவெண்பூக் கரிதான விசும்பின்கண்ணே பறக்கும் குருகுபோலத் தோன்று மூரன் என்றது தன்மை தோன்றாது ஒழுகுவாரையுடையான் எ - று.

**குறிப்பு.** புதல் = புதர் - சிறுதூறு. நுடங்கும் - அசைகின்ற. குருகின் - நாரையைப் போல. விசும்பாடு குருகு : **குறுந்.** 260 : 1. அடி, 1-2 : **அகநா.** 235. புதுவோர் - வம்பப் பரத்தையரை. மேவலன் - விரும்புதலையுடையான் ; "வதுவை மேவல னாகலின்" (**அகநா.** 206 : 12.) வறிதாகின்று - வறுமையை யுடையதாயிற்று ; அஃதாவது உணர்ச்சி இழந்து நினைப்பொழிந்து நின்றது என்றபடி.

துணை - அளவு.

**(மேற்.)** மு. தலைவனைப் பிரித்தற்கண் தோழியிடத்துத் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது (**தொல்.** கற்பு. 6, **ந.**) (எ)

18. இருஞ்சா யன்ன [1]செருந்தியொடு வேழம்
கரும்பி னலமருங் கழனி யூரன்
பொருந்துமல ரன்னவென் கண்ணழப்
பிரிந்தன னல்லனோ பிரியலெ னென்றே.

**ஏ - து** பரத்தையிற்பிரிந்துவந்து தெளித்துக் கூடிய தலைமகற்குப் பின் அவ்வொழுக்கம் உளதாயவழி அவன் வரவிடுத்த வாயில்கட்குத் தலைமகள் சொல்லியது.

**(ப - ரை.)** செருந்திப் பூவொடு வேழம் கரும்புபோல அலமரும் ஊரனென்றது தம் சேடியரோடு பொதுமகளிர் குலமகளிரைப் போலத் தருக்கியொழுகுமூரன் எ - று.

**குறிப்பு.** சாய் - பஞ்சாய்க் கோரை ; மரவிசேடமுமாம் ; இது செருந்திக்கு உவமை. செருந்தி - ஒருவகைக் கோரை ; இது நெட்டிக்கோரை யென்றும் வாட்கோரை யென்றும் தண்டான்கோரை யென்றும் பழையவுரைகளில் வழங்கப்படுகிறது ; **மதுரை.** 172 ; **பட்.** 243 ; இதன் பூவைப் பாவை யென்றலும் அதனை மகளிர்க்கு உவமை கூறலும் மரபு. வேழத்திற்குக் கரும்பு : **ஐங்.** 12 ; 1. அலமரும் - சுழன்றாடும். மலரன்ன கண் என்றது பட்டாங்கு கூறியது. கண் அழப் பிரிதல் : **ஐங்.** 32, 38, 40, 334.

தெளித்து - தெளியச் செய்து. **(பி. ம்.)** [1] 'செந்தியொடு' (அ)

19. எக்கர் மாஅத்துப் புதுப்பூம் பெருஞ்[1]சினை
புணர்ந்தோர் மெய்ம்மணங் கமழுந் தண்பொழில்
வேழ வெண்பூ வெள்ளுகை [2]சீக்கும்
ஊர னாகலிற் கலங்கி
மாரி மலரிற் கண்பனி யுகுமே.

**எ - து** 'பன்னாள் அவன் [3]சேணிடைப் பிரியவும் ஆற்றியுளையாகிய நீ சின்னாள் அவன் புறத்தொழுகுகின்ற இதற்கு ஆற்றாயாகின்றது என்னை?' என்ற தோழிக்கு 'எதிர்ப்பாடின்றி ஒரூர்க்கண்ணே உறைகையினாலே ஆற்றேனாகின்றேன்' எனத் தலைமகள் சொல்லியது. வாயிலாய்ப்புகுந்தார் கேட்டு நெருங்காது மாறுதல் கருத்து.

**(ப - ரை.)** மாங்கொம்பு பூத்து வதுவைமகளிர் மெய்ம்மணம் கமழக் கடவ பொழிலை அம்மலர் அரும்பாகிய பருவத்தே வேழங்களின் பூத் துடைக்கும் ஊரன் என்றது சேணிடைப் பிரிந்துவந்து தன்னுடனாய் நிகழ்கின்ற பருவத்து இன்பங்கள் நுகராமல் இடையே விலக்குகின்ற பரத்தையர்களை யுடையான் எ - று.

**குறிப்பு.** எக்கர் மாஅத்து - மணல் மேட்டிலுள்ள மாமரத்தினது. பூம்பெருஞ்சினை - பூவினது பெரிய அரும்பு. புணர்ந்தோர் மெய்ம்மணம் கமழும் - தலைவரைப் புணர்ந்த மகளிரது மெய்யின் மணம் போலக் கமழ்கின்ற; "பொறிகிளர் ாகம் புல்லத் தோள்சேர், பறுகாற் பறவை யளவில மொய்த்தலிற், கண்கோ ளாக நோக்கிப் பண்டும், இனையை யோவென வினவினள் யாயே" (**நற்.** 55 : 4-7); **சீவக.** 853. பூவாகிய உளை; பூவிலுள்ள வெள்ளிய துய் எனலுமாம். சீக்கும் - துடைக்கும். பொழிலரும்பை உளை சீக்கும். மாரி மலரின் - மழையிற்பட்ட மலரைப்போல. கண்பனி உகும் - கண்ணீர்த்துளி விழும்.

**(பி. ம்.)** [1] 'சினைப்புணர்ந்தோர்' [2] 'சீய்க்கும்' [3] 'சேயிடைப்' (கக)

20. அறுசில் கால வஞ்சிறைத் தும்பி
நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்கும்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்துத்
[1]துறைநணி யூரனை யுள்ளியென்
[2]இறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே.

**எ - து** தலைமகளை வாயில் நேர்வித்தற்பொருட்டாக, 'காதலர் கொடுமை செய்தாராயினும் அவர்திறம் மறவாதொழியல்வேண்டும்' என்று முகம் புகுகின்ற தோழிக்கு, 'என் கைவளை நில்லாதாகின்றது அவரை நினைந்ததன் பயனன்றே; இனி அமையும்' எனத் தலைமகள் சொல்லியது.

**(ப - ரை.)** தாமரைப்பூவகத்துளதாகிய தும்பிச்சினையை வேழம் சீக்கும் என்றது தன்மாட்டு என்புதல்வன் உறைதலையும் விலக்குவாராகிய பொது மகளிரையுடையான் எ-று.

'சினைச்சேக்கும்' என்று பாடமோதுவார் தும்பிச்சினை வருந்த வேழும் தங்குமென்று பொருளுரைப்ப.

குறிப்பு. அறுசில் கால - ஆறு சிறிய கால்களையுடைய. அஞ்சிறை - உள்ளிடத்தே சிறகையுடைய. தும்பி - ஒருவகை வண்டு; இது வண்டினுள் உயர்ந்த சாதி; சீவக. 892, ந. அஞ்சிறைத் தும்பி : முருகு. 76; குறுந். 2 : 1; கலி. 46 : 2. நூற்றிதழ்த் தாமரைப்பூ - நூறு மடல்களையுடைய தாமரை மலர்; "சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ், நூற்றிதழ் அலர்" (புறநா. 27.) சினை - முட்டைகளை. பூவிலுள்ள தும்பிச்சினையைச் சீக்கும்; சீக்கும் - துடைக்கின்ற. காம்பு கண்டன்ன - மூங்கிலைக் கண்டாற்போன்ற. தூம்பு - உட்டுளை. நணி - அணிமை. இறையேர் எல்வளை - முன்கையிற் பொருந்திய ஒளியையுடைய வளைகள்; இறை : ஆகுபெயர். நெகிழ்பு ஓடும் - நெகிழ்ந்து ஓடாநிற்கும். ஓடும்மே : விரிக்கும்வழி விரித்தல். தலைவனை உள்ளி இறை வளை நெகிழ்ந்தோடல் : ஐங். 27 : 3, 54 : 3, 136 : 2, 140. 3; நற். 236 : 7; குறுந். 289; கலி. 3, 121, 125, 127, 132; குறள். 1157; கைந்நிலை, 55.

முகம் புகுதல் - நோக்கிற்கு எதிர்சென்று புகுதல் : நாலடி. 303.

(பி. ம்.) [1] 'துறைநணி' [2] 'நிறையே போல்வளை' (௨௦)

(உ) வேழப்பத்து முற்றிற்று.

## (ந) [1]கள்வன் பத்து

21. முள்்ளி நீடிய முதுநீ ரடைகரைப்
புள்ளிக் கள்வ னாம்ப லறுக்கும்
தண்டுறை யூரன் றெளிப்பவும்
உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து 'புறத்தொழுக்கம் எனக்கு இனியில்லை' என்று தலைமகன் தெளிப்பவும் 'அஃது உளது' என்று வேறுபடும் தலைமகட்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) 'முள்ளி நீடிய......லறுக்குமூரன்' என்றது தனக்கு உரித்தாகிய இல்லின்கண் ஒழுகிப் பரத்தையரோடு தொடர்ச்சி அறுப்பான் எ-று.

குறிப்பு. முள்ளி - நீர்முள்ளிச்செடி. நீடிய - உயர்ந்து ஓங்கிய. நீரடைந்த கரையின்கண். புள்ளிக் கள்வன் - பொறியையுடைய நண்டு; "பொறியலவன்" (சிலப். 7 : 31.) தெளிப்பவும் - தனக்குப் புறத்தொழுக்கம் இல்லை என்று கூறித் தெளிவிக்கவும். உண்கண் - மையுண்ட கண்கள். பசப்பது - பொன்னிறங்கொள்வது; ஐங். 16, அடிக். எவன் கொல் - யாது? அன்னாய் - அன்னையே; என்றது தலைவியை. தோழி தலைவியை அன்னை யென்றல் : "அன்னை யென்னை" (தொல். பொருள். 52.)

(மேற்.) அடி, 4. இறுதியடி இடையடி போன்று நிற்கும் அகப்பாட்டு வண்ணத்துக்கு மேற்கோள் (தொல். செய். 224, பேர்.) மு. 'ஆய் என்று இற்ற ஆசிரியம்' (யா. வி. செய். 16); இ. வி. 732. (பி. ம்.) [1] 'களவன்'

22. அள்ள லாடிய புள்ளிக் கள்வன்
முள்ளி வேரளைச் செல்லு மூரன்
நல்ல சொல்லி மணந்தினி
நீயே னென்ற தெவன்கொ லன்னாய்.

எ - து களவினிற் புணர்ந்து பின்பு வரைந்துகொண்டு ஒழுகாநின்ற தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றாக, ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'நல்ல......அன்னாய்' என்றது இக்காலத்து இங்ஙனம் ஒழுகுகின்றான் அக்காலத்து அங்ஙனங்கூறியதென்கொல் எ-று.

சேறாடிய கள்வன் முள்ளிவேரளைச் செல்லுமென்றது பிறர் கூறும் அலர்அஞ்சாது பரத்தையர் மனைக்கட் செல்வானென்பதாம்.

குறிப்பு. அள்ளல் - சேற்றின்கண். ஆடிய - விளையாடிய. அளை - வளை. முள்ளி வேரளை : ஐங். 23. நீயேன் - விட்டு நீங்கேன்; "நீயா நினைவ" (பரி. 3 : 84); 'நீயாதும் அகலாது முறைதல்' (இறை. 43, உரை.) என்றது - என்று களவொழுக்கத்திற் சூளுரைத்தது. எவன் கொல் - என்ன ஆயிற்று ? (உ)

23. முள்ளி வேரளைக் கள்வ னாட்டிப்
பூக்குற் றெய்திய புனலணி யூரன்
தேற்றஞ் செய்துநப் புணர்ந்தினித்
தாக்கணங் காவ தெவன்கொ லன்னாய்.

இதுவுமது.

(ப - ரை.) தன்னூர் விளையாட்டுமகளிர் அளையின்கண் வாழும் அலவனை அலைத்துப் பூக் குற்று விளையாடினாற்போலத் தன் மனைக்கண் வாழும் நம்மை வருத்திப் புறத்துப்போய் இன்பம் நுகர்வான் எ - று.

குறிப்பு. கள்வன் ஆட்டி - நண்டை அலைத்து விளையாடி ; இஃது இள மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று; "இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி" (ஐங். 197); பட். 101 ; "அலவ னாட்டுவோள்" (நற். 363 : 10) ; குறுந். 303 : 7. பூக் குற்று - மலர்களைப் பறித்து ; "சுனைப்பூக் குற்று" (நற். 173 : 1) ; குறுந். 142 : 1. ஆட்டுதலும் குறுதலும் மகளிர் தொழில். தேற்றம் செய்து - தெளிவித்து. நப்புணர்ந்து - நம்மைக் கலந்து ; நம் : தனித் தன்மைப் பன்மை ; நம் புணர்ந்து என மெல்லெழுத்துப் பெறுதற்குரியது வல் லெழுத்துப் பெற்றது ; தொல். தொகை. 15, ந. ; நற். 165 : 7 ; அகநா. 311 : 5. இனி - இப்பொழுது ; புறநா. 243 : 1 ; " இனி யறிந்தேன்" (குறள். 1083.) தாக்கணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம் ; குறள். 1082. (ங)

24. தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவனூர்
எய்தின னாகின்று கொல்லோ மகிழ்நன்
பொலந்தொடி[1] தெளிர்ப்ப முயங்கியவர்
நலங்கொண்டு துறப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து பரத்தையருள்ளும் ஒருத்தியைவிட்டு ஒருத்தியைப் பற்றி ஒழுகு கின்றானென்பது கேட்ட தோழி வாயிலாய் வந்தார் கேட்பத் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) 'தாய்சாப் பிறக்கும்......அவனூர்' என்றது தொன்னலம் சாம் வண்ணம் பிறக்கும் பொய்யுடனே செய்தன சிதையத்தோன்றும் அருளின்மையையும் உடையான் எ - று.

குறிப்பு. தாய் சாப்பிறக்கும் - தாய் சாவப் பிறக்கின்ற. நண்டு தன் தாய் சாவப் பிறத்தல்: "கூற்றமா நெண்டிற்குத் தன்பார்ப்பு" (சிறுபஞ்ச. 11); "நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்திற், கொண்ட கருவழிக்கும்" (நல்வழி); "புத்தன்றாய் நண்டிப்பி வாழை புனமூங்கில், கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி - இத்தனையும், வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட, சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு" (நீல. குண்டலகேசிவாதச். 41, மேற்.) பிள்ளை - (இங்கே) முதலையின் பார்ப்பு. முதலைத்து - முதலையையுடையது. முதலை தன் பிள்ளையைத் தின்னுதல்: "தன் பார்ப்புத் தின்னு மன்பின் முதலை" (ஐங். 41 : 1.) ஆகின்றுகொல் - ஆகின்றமைதானோ. மகிழ்நன் என்பது மருதநிலத் தலைவன் பெயர். பொலந்தொடி தெளிர்ப்ப - பொன்னாலாகிய வளை ஒலிக்க; "இலங்குவளை தெளிர்ப்ப" (ஐங். 197 : 1); "பொலங் கலந் தெளிர்ப்ப" (பதிற். 18 : 3.) முயங்கியவர் - கலந்த மகளிர். நலம்-அழகு. துறப்பது - நீங்குதல்.

தொன்னலம் - பழைய அழகு.

(மேற்.) அடி, 1-2. 'தலைமகன் கொடுமை கூறினமையின் உள்ளுறை யுவமம் துனியுறுகிளவியாயிற்று'; 'தவழ்பவற்றின் இளமைக்குப் பிள்ளை யென்னும் பெயர் உரியது' (தொல். உவம. 28, மரபு. 5, பேர்.) 'தோழி காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாற்றால் உள்ளுறை உவமம் கூறியது' (தொல். உவம. 31, ந.)

(பி. ம்.) [1] 'தெளிப்ப', 'தெழிப்ப' (ச)

25. அயல்புறந் தந்த புனிற்றுவளர் பைங்காய்
வயலைச் செங்கொடி கள்வ னறுக்கும்
கழனி யூரன் மார்புபலர்க்
கிழைநெகிழ் செல்ல லாகு மன்னாய்.

இதுவுமது.

(ப - ரை.) 'அயல்புறந்தந்த......அறுக்கும்' என்றது, எம் புதல்வன் வருந்துவதும் உணராது நம்மை வருத்துவான் எ - று.

குறிப்பு. புறந்தந்த - பாதுகாத்த. புனிறு - ஈன்ற அணிமை; தொல். உரி. 78. வயலைச்செங்கொடி - வயலையினது செவ்விய கொடியை. பலர்க்கு - பல மகளிர்க்கு. மார்பு: எழுவாய். இழை நெகிழ் செல்லலாகும் - இழை நெகிழ்தற்குக் காரணமான துன்பத்தைச் செய்வதாகும். 3-4: "மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்" (அகநா. 22 : 3.) (ரு)

26. கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து கள்வன்
வள்ளை மென்கா லறுக்கு மூரன்
எம்மும் பிறரு மறியான்
[1]இன்ன னாவ தெவன்கொ லன்னாய்.

எ - து தலைமகற்கு வாயிலாகப் புகுந்தார், 'நின் முனிவிற்கு அவன் பொருந்தா நின்றான்' என்றவழித் தலைமகட்குத் தோழி, 'அவன்பாடு அஃ தில்லை' என்பதுபடச் சொல்லியது.

(ப - ரை.) 'துணை துறந்து.........மூரன்' என்றது தான் துணையாகக் காதலித்து ஒழுகுகின்ற பரத்தையையும் நீங்கி எம்மையும் வருத்தி ஒழுகு வான் எ-று.

(வேறுரை.) 'கரந்தையஞ் செறுவிற் றுணை துறந்து' என்றது நின்னைத் துறந்து எ-று. 'வள்ளைமென் காலறுக்கும்' என்றது பரத்தையருள்ளும் ஒருத்தியை விடுவதும் ஒருத்தியைப் பற்றுவதுமாகி அவர்களை வருத்து கின்றான் எ - று.

'எம்மும் பிறரு மறியான்' என்றது எம்மையும் பிறரையும்...

குறிப்பு. கரந்தையஞ்செறுவில் - கொட்டைக்கரந்தையை உடைய வயலில். கொட்டைக்கரந்தை வயலில் தோன்றுவதொரு பூடு; கொட்டாங் கரந்தை யெனவும் வழங்கும்; பதிற். 40 : 5; அகநா. 226:6. துணை - பெண் நண்டை. வள்ளை - ஒருவகை நீர்க்கொடியினது. மென்கால் - மெல்லிய தண்டை. எம்மும் பிறரும் அறியான் - நம்மையும் பரத்தையரையும் அறி யாதவனாகி. இன்னன் ஆவது - இத்துணைத் தீச்செயலை உடையனாதல்; குறுந். 181 : 2; நாலடி. 205.

அவன்பாடு - அவனிடத்தில்.

(பி. ம்.) [1] 'இன்னா னவது' (சு)

27. [1]செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு கள்வன்
தண்ணக மண்ணளைச் செல்லு மூரற்
கெல்வளை நெகிழச் சாஅய்
அல்ல லுழப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து தலைமகன் மணைக்கண் வருங்காலத்து வாராது தாழ்த்துழி, 'புறத்தொழுக்கம் உளதாயிற்று' [2]எனக்கருதி வருந்தும் தலைமகட்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. செறுவில் - வயலில். கதிர் - நெற்கதிரை. தண்ணகமண் அளை - தண்மையாகிய உள்ளிடத்தையுடைய மண்ணாலாகிய வளையுள்;

**ஐங்.** 30 : 2. எல்வளை - ஒளிபொருந்திய வளைகள். சாஅய் - மெலிந்து ; "ஒண்டொடி நெகிழச் சாஅய்" (**ஐங்.** 28 : 3); **குறுந்.** 50 : 4, 125:1 ; **அகநா.** 127:1. அல்லல் உழப்பது - துன்பத்தால் வருந்துவது.

**(மேற்.)** மு. 'புறத்தொழுக்கத்தை உடையவனாகிய தலைவன் மாட்டு மனம் வேறுபட்ட தலைவியை, புறத்து ஒழுக்கமின்றி நின்மேல் அவர் அன்புடையரென அவ்வேறுபாடு நீங்கத் தோழி நெருங்கிக் கூறியது. இதன் உள்ளுறையாற் பொருள் உணர்க' (**தொல்.** கற்பு. 9, **ந.**) 'கதிர்...செல்லு மூரன்' என்பதற்கு உள்ளுறைப் பொருளாவது வேண்டிய பொருள்களைத் தொகுத்துக்கொண்டு இல்லிற்கு வருவான் என்பது.

**(பி. ம்.)** [1] 'செங்நெற் செறுவின்' [2] 'எனமாட்டக்கருதி' (எ)

28. உண்டுறை யணங்கிவ ளுறைநோ யாயின்
தண்சேறு கள்வன் வரிக்கு மூரற்
கொண்டொடி நெகிழச் சாஅய்
மென்றோள் பசப்ப தெவன்கொ லன்னாய்.

**எ - து** இற்செறிவித்தவிடத்துத் தலைமகட்கு எய்திய வேறுபாடு கண்டு, 'இது தெய்வத்தினான் ஆயிற்று' என்று தமர் வெறியெடுப்புழி அதனை விலக்கக் கருதிய தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது.

**குறிப்பு.** உண் துறை அணங்கு - நீருண்ணும் துறையிலுள்ள தெய்வம். நீர்த்துறையில் அணங்குளதாதல் : **ஐங்.** 53 : 1 ; **முருகு.** 224 ; **அகநா.** 156:15, 240 : 8. உறை நோய் - இவள் வேறொரு செயலுமின்றி உறைதற்குக் காரணமாகிய நோய். இவளுறைநோய்க்குக் காரணம் அணங்காயின் என்க. வரிக்கும் - கோலஞ் செய்யும். கள்வன் வரித்தல்: **குறுந்.** 351 : 2-3. தொடி - ஒருவகை வளை ; தோள் மெலிதலால் தொடி நெகிழ்ந்தது; **ஐங்.** 27 : 3 ; "தொடிநெகிழ்ந் தனவே தோள்சா யினவே" (**குறுந்.** 239 : 1.) பசப்ப-பசலைநிறம்கொள்ள. தோள் பசத்தல் : **ஐங்.** 452 : 4-5, 459 : 1 ; "தாம் பசந் தனவென் றடமென் றோளே" (**குறுந்.** 121 : 6) ; "பீர்நீர்மை கொண்டன தோள்" (**ஐந்.** **ஐம்.**2.)

வெறி - வெறியாடல் ; தெய்வ பூசை. அறத்தொடு நிற்றல் - களவு வெளிப்படுத்தி நிற்றல். (அ)

29. மாரி கடிகொளக் காவலர் கடுக
வித்திய வெண்முளை கள்வ னறுக்கும்
கழனி யூரன் [1]மார்புற மரீஇத்
திதலை யல்கு னின்மகள்
பசலை கொள்வ தெவன்கொ லன்னாய்.

**எ - து** வரைவெதிர் கொள்ளார் தமர் அவண் மறுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை.) ‘மாரி கடிகொள......கடுக’ என்றது மாரிநின்ற யாமத்துக் காவலரைத் தப்பி அவன் தலைவியை எதிர்ப்பட்டமை உணர்த்தியதெனக் கொள்க. இஃது உண்மைசெப்பலென்னும் அறத்தொடுநிலை.

குறிப்பு. கடிகொள - மிக. கடுகல் - விரைந்து அணுகல். வித்திய வெண் முளை - விதைத்த வெண்மையான நெல்முளைகளை. மரீஇ - மருவி. கடிகொள, கடுக, மரீஇ என்க. திதலை - தேமல்; திதலை யல்குல் : **ஐங்** : 72 : 2; **நற்.** 6 : 4; **குறுந்.** 27 : 5, 294 : 5; **அகநா.** 54 : 21.

எதிர்கொள்ளார் - ஏற்றுக்கொள்ளார். உண்மை செப்பல் என்பது அறத்தொடு நிற்றல் எழுவகையினுள் ஒன்று; **தொல்.** பொருள். 13. ‘வித்திய ...அறுக்கும்’ என்றது தலைவன் வரைவைத் தமர் அறியாமல் விலக்குவர் என்றவாறு.

(**பி - ம்.**) [1] ‘மார்புற வரீஇ’ (௯)

30. வேப்புநனை யன்ன நெடுங்கட் கள்வன்
தண்ணக மண்ணளை நிறைய நெல்லின்
இரும்பூ வுறைக்கு மூரற் கிவள்
பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்.

இதுவுமது.

(ப - ரை.) அலவன் மண்ணளை நிறைய நெல்லின்பூ உறைக்கும் ஊர னென்றது தலைவன் மனையிடத்து உளவாகிய வருவாய்ச்சிறப்புக் கூறியதெனக்கொள்க.

குறிப்பு. வேப்பு நனை - வேம்பின் அரும்பு. நண்டின் கண்ணுக்கு வேம்பு நனை : “வேப்புநனை யன்ன விருங்கணீர் ஞெண்டு” (**அகநா.** 176 : 8.) நண்டினுடைய வளை நிறையும்படி. உறைக்கும் - உதிரும்.

(**மேற்.**) மு. மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தது; தோழி அறத்தொடு நின்றது (**தொல்.** அகத். 12, ந.) (௰)

(ங) கள்வன்பத்து முற்றிற்று.

## (ச) தோழிக்குரைத்த பத்து

31. அம்ம வாழி தோழி மகிழ்நன்
கடனன் றென்னுங் கொல்லோ நம்மூர்
முடமுதிர் மருதத்துப் பெருந்துறை
உடனா டாயமோ டுற்ற சூளே.

**எ - து** முன்னொருநாள் தன்னோடு புதுப்புனலாடுழி, ‘இனிப் புறத் தொழுக்கம் விரும்பேன்’ என ஆயத்தாரோடு சூளுற்ற தலைமகன் பின்பும் பரத்தையரோடு புனலாடத் தொடங்குகின்றான் என்பது கேட்ட தலைமகள் அவனுழையர் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. அம்ம வாழி தோழி - தோழி ஒன்று சொல்லுவேன் கேட்பாயாக; **ஐங்.** 31-40. இத்தொடர் சங்க நூல்களிற் பலவிடங்களிற் பயின்று

வரும்; அம்ம : கேட்பிக்கும் கிளவி; வாழி : அசை. கடன் - கடப்பாடு. என்னுங் கொல்லோ - என்பானோ? முடம் - வளைவு; பொருந. 189. பெருந் துறை - பெரிய நீர்த்துறையின்கண். பெருந்துறை மருது : ஐங். 7 : 4, அடிக். உடன் - கூட. சூள் - சத்தியம். மகிழ்நன் உற்ற சூள் கடனன்று என்னுங் கொல்லோ?

உழையர் - பக்கத்திலுள்ளார்.

(மேற்.) அம்ம என்ற சொல் கேட்பித்தற் பொருளில் வரும் : தொல். இடை. 29, இளம். சே. ந.; நன். 437-8, மயிலை., விருத்தி; இ. வி. 274. (க)

32. அம்ம வாழி தோழி மகிழ்நன்
ஒருநா ணம்மில் வந்ததற் கெழுநாள்
அழுப வென்பவவன் பெண்டிர்
தீயுறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே.

எ - து வாயில்வேண்டிப் புகுந்தார் கேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. நம் வீட்டில் தலைவன் ஒரு நாள் வந்ததற்கு; நம் : தனித்தன்மைப் பன்மை. அழுப - அழுவார். என்ப - என்பார்; அசையுமாம். ஒன்றுக்கு ஏழு கூறல் மரபு : குறுந். 24 : 4, 172 : 5-6; குறள். 1269. அவன் பெண்டிரென்றது பரத்தையரை. தீ உறு மெழுகின் - நெருப்பையுற்ற மெழுகுபோல; ஞெகிழ்வனர் - நெகிழ்ந்து; "மெழுகெரி முகந்த தொக்குந் தாய் மெலிவு" (சீவக. 2095.) ஞெகிழ்வனர் அழுப என முடிக்க. (உ)

33. அம்ம வாழி தோழி மகிழ்நன்
மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறைப்
[1]பெண்டிரொ டாடு மென்பதன்
தண்டா ரகலந் தலைத்தலைக் கொளவே.

இதுவுமது.

குறிப்பு. மருதுயர்ந் தோங்கிய துறை : ஐங். 7 : 5-6, அடிக். பெண்டிர் - பரத்தையர். ஆடும் - ஆடுவான். அகலம் - மார்பை. தலைத்தலைக்கொள - ஒவ்வொருவரும் தெப்பமாகத் தத்தமிடத்தே கொள்ளும்படி; "ஆர்கலி வெற்பன் மார்புபுணை யாக......அருவி யாடுத லினிதே" (குறுந். 353 : 1-3); "வவ்வுவல் லார்புணை யாகிய மார்பினை" (பரி. 6 : 80); "பெருமலை நாடன் மார்புபுணை யாக, ஆடுகம் வம்மோ" (அகநா. 312 : 7-8.) தண்டாரகலம் என்றாள் ஊற்றின் இனிமை கருதி.

(பி - ம்.) [1] 'பெண்டிரொடு மாடும்' (ங)

34. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கைப் பூத்த புழைக்கா லாம்பல்
தாதேர் [1]வண்ணங் கொண்டன
[2]ஏதிலா ளர்க்குப் பசந்தவென் கண்ணே.

இதுவுமது.

**குறிப்பு.** புழைக்கால் ஆம்பல் - உள்ளே துளை பொருந்திய தண்டினை யுடைய ஆம்பற்பூ; "நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கால்" (நற். 6 : 1); "தூம்புடைத் திரள்கால், ஆம்பல்" (குறுந். 178 : 2-3.) ஆம்பல் தாதின் நிறம் பசலைக்கு உவமை; ஏர் - உவமவுருபு. வண்ணம் - நிறம். ஏதிலாளர் என்றது தலைவனை; இது புலந்து கூறியது. என் கண்கள் வண்ணத்தைக் கொண்டன.

(பி - ம்.) [1] 'வண்ணங்கொண்ட' [2] 'ஏதிலார்க்கு' (௪)

35. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கை யாம்ப லநாருரி மென்கால்
நிறத்தினு நிழற்றுதன் மன்னே
இனிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

**ஏ - து** வாயிலாய்ப் புகுந்தார் தலைமகன் குணங் கூறியவழி, 'அவனுக்கு இல்லாதனவே கூறுதலால், இப்பொழுதுகாண் என் மேனி பசந்தது' எனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**குறிப்பு.** ஆம்பல் நார் உரி மென்கால் - ஆம்பற் கொடியின் நாரை உரித்த மெல்லிய தண்டின். நிறத்தினும் நிழற்றுதல் மன்னே - நிறத்தைக் காட்டிலும் ஒளிவீசுதலையுடையதாயிருந்தது முன்பு; இப்பொழுது அது கழிந்தது; மன் கழிவிரக்கப் பொருளது. "நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கால், நாருரித் தன்ன மதனின் மாமை" (நற். 6 : 1-2.) இனி - இப் பொழுது. பசந்தன்று - பசந்தது. மாமைக்கவின் - மேனியின் பேரழகு; எழுவாய். மாமைக்கவின் நிழற்றுதல் மன்னே, இனிப் பசந்தன்று. மாமைக்கவின் : ஐங். 103 : 4, 134 : 3. மாமை நிறம் பசத்தல் : குறுந். 27 : 4-5. அடி, 4 : ஐங். 144 : 3. (௫)

36. அம்ம வாழி தோழி யூரன்
நம்மறந் தமைகுவ னாயி னாமறந்
துள்ளா தமைதலு மமைகுவ மன்னே
கயலெனக் கருதிய வுண்கண்
பயலைக் கொல்கா வாகுதல் பெறினே.

**ஏ - து** தான் வாயினேருங் குறிப்பினளானமை யறியாது தோழி வாயில் மறுத்துழி அவள் நேரும் வகையால் அவட்குத் தலைமகள் சொல்லியது.

**குறிப்பு.** நம் மறந்து - நம்மை மறந்து. அமைகுவனாயின் - பரத்தைய ரிடத்துப் பொருந்துவானாயின். உள்ளாது - நினையாமல். அமைதலும் அமைகுவம் - அமைதலும் செய்வேம். கயலெனக் கருதிய உண்கண் என்பது பட்டாங்கு கிளந்தது; உண்கண் - மையுண்ட கண். ஒல்காவாகு தல் - தளராதிருத்தலை. பெறின் அமைகுவம். கண் பசத்தல் : ஐங். 34 : 4, 37 : 2; குறுந். 13 : 5. (௬)

37. அம்ம வாழி தோழி மகிழ்நன்
நயந்தோ ருண்கண் [1]பயந்துபனி மல்க
வல்லன் வல்லன் பொய்த்தல்
தேற்று னுற்ற சூள்வாய்த் தல்லே.

ஏ - து தலைமகளைச் சூளினல் தெளித்தானென்பது கேட்ட காதற் பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்பத் தன்தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. மகிழ்நன் - மருதநிலத் தலைவன். நயந்தோர் - தன்னை விரும்பிய மகளிருடைய. பயந்து - பசலை பூத்து. பனி மல்க - நீர் நிறையும் படி. வல்லன் வல்லன் என்ற அடுக்கு இடைவிடாமைப் பொருட்கண் வந்தது. தேற்றன் - அறியான்; தன்வினைப் பொருளில் வந்தது; "தேற்றாய் பெரும பொய்யே" (புறநா. 59 : 4.) சூள் வாய்த்தல் - சூளின்படி நடத்தலை. மகிழ்நன், பொய்த்தல் வல்லன், சூள் வாய்த்தல் தேற்றன்.

காதற் பரத்தை : சேரிப் பரத்தையின் மகளாகித் தலைவனையே விரும்பிப் பிறரை விரும்பாதிருப்பவள். (பி - ம்.) [1] 'பசந்து' (எ)

38. அம்ம வாழி தோழி மகிழ்நன்
தன்சொ லுணர்ந்தோ ரறியல னென்றும்
தண்டளிர் வெளவு மேனி
ஒண்டொடி முன்கை யாமழப் பிரிந்தே.

ஏ - து தலைமகன் மனைவயிற்போகக் கருதினனென்பது சொல்லிய தன்தோழிக்குப் பரத்தை சொல்லியது.

குறிப்பு. உணர்ந்தோரை அறியலன். மேனி - நிறம்; "நீல மேனி நெடியோன் கோயிலும்" (சிலப். 5 : 172, அடியார்.) தளிர் மேனிக்கு உவமை; "துளிதலைத் தலைஇய தளிரன் னேளே" (குறுந். 222 : 7); "தண்டளிர் வியப்பத் தகைபெறு மேனி" (தொல். உவம. 16, பேர். மேற்.) ஒள்ளிய தொடிகளை அணிந்த முன்கையையுடைய யாம். தளிர் மேனியும் தொடி முன் கையும் : "கோலமை குறுந்தொடித் தளிரன் னேளே" (குறுந். 356:8.) பிரிந்து - பிரிதலால்; எச்சத் திரிபு. பிரிதலால் அறியலன். (அ)

39. அம்ம வாழி தோழி யூரன்
வெம்முலை யடைய முயங்கி நம்வயின்
[1]திருந்திழைப் பணைத்தோண் ஞெகிழப்
பிரிந்தன னாயினும் பிரியலன் மன்னே.

ஏ - து ஒருஞான்று தலைவன் தன்மனைக்கட் சென்றது கொண்டு அவன் பெண்மை நலமெல்லாம் துய்த்துக் காதல் நீங்கிப் பிரிந்தானென்பது தலைவி கூறினளெனக்[2]கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பத் தன் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. வெம்முலை - விருப்பத்தைத் தரும் முலை. அடைய முயங்கி - முற்றக் கலந்து. நம்வயின் - நம்மிடத்திலிருந்தும். பிரிவால் தோள் ஞெகிழ்

தல் : குறுந். 87 : 5, 210 : 5. புறத்துப் பிரிந்தனன் போல் தோற்றின னாயினும் உள்ளத்தால் பிரிந்தில னாதலின் 'பிரிந்தனனாயினும் பிரியலன்' என்றாள் ; "என், நெஞ்சிற் பிரிந்ததூஉ மிலரே" (தொல். களவு. 20, ந. மேற்.)

(பி - ம்.) [1] 'திருந்திழை பணைத்தோள்' [2] 'கேட்டு அப் பரத்தை' (கூ)

40. அம்ம வாழி தோழி மகிழ்நன்
ஒண்டொடி முன்கை யாமழப் பிரிந்துதன்
பெண்டி ரூரிறை கொண்டன னென்ப
கெண்டை பாய்தர வவிழ்ந்த
வண்டுபிணி யாம்ப னுடுகிழ வோனே.

எ - து உலகியல்பற்றித் தலைவன் தன்மனைக்கண் ஒருஞான்று போனதே கொண்டு அவ்வழிப் பிரியாது உறைகின்றானென்று அயற் பரத்தையர் பலரும் கூறினரென்பது கேட்ட காதற்பரத்தை அவர் பாங்காயினார் கேட்பத் தன்தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. தொடி யணிந்த முன்கையையுடைய யாம் ; ஐங். 38, அடிக். பெண்டிர் - இற்பெண்டிர் ; தலைவி. இறை கொண்டனன் - தங்கினன். என்ப - என்று கூறுவர். பாய்தர - பாய. அவிழ்ந்த ஆம்பல். கிழவோன் பிரிந்து இறைகொண்டனன் என்ப. (௪0)

(௪) தோழிக்குரைத்த பத்து முற்றிற்று.

## (௫) புலவிப் பத்து

41. தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத்[1] தவனூ ரென்ப, அதனால்
தன்சொ லுணர்ந்தோர் மேனி
[2]பொன் போற் செய்யு மூர்கிழ வோனே.

எ - து கழறித்தெருட்டற் [3]பாலராகிய அகம்புகன் மரபின் வாயில்கள் புகுந்துழித் தலைவனையும் பாணன் முதலாகிய பக்கத்தாரையும் இகழ்ந்து தலைவி கூறியது.

(ப - ரை.) அன்பில்லாத முதலையென்றது தலைவனை நோக்கியதெனவும், பொய்கையில் வெண்பூ வென்றது புறத்தொழுக்கத்திற்குத் துணையாகிய அறிவிலாதாரை நோக்கியதெனவும் கொள்க.

குறிப்பு. பார்ப்பு - பிள்ளையை. அன்பில் - அன்பில்லாத. தன் பார்ப்பை முதலை தின்னுதல் : ஐங். 24 : 2, அடிக். வெண்பூ - ஆம்பற்பூ. தன்சொல் உணர்ந்தோர் - தன்சொல்லை நினைந்து தேறியிருப்பவராது. பொன்போல் செய்யும் - பொன்னைப் போலப் பசலை பெறச் செய்யும்.

பொய்கையை யுடையது அவனூர் ; அதனால் ஊர்கிழவோன் தன்சொல் உணர்ந்தோர் மேனியைப் பொன்போற் செய்யும்.

(மேற்.) அடி, 3-4. போல என்பது உருவுவமத்திற்குரிய சொல்லாம் (தொல். உவம. 16, இளம்.) மு. உள்ளுறையுவமத்தில் தலைவன் கொடுமையும் தலைவி பேதைமையும் உடனுவமங்கொள்ள நின்றது ; வினையுவமமும் உருவுவமமும் ஒரு செய்யுளுள்ளே தொடர்ந்து வந்தன ; பார்ப்பென்னும் இளமைப்பெயர் தவழ்வனவற்றிற்கும் உரித்து ; தொல். பொருள். 36, ந., உவம. 25, மரபு. 5, பேர்.

(பி - ம்.) [1] 'தவனூரேயதனால்', 'தவரூரேயதனால்' [2] 'பொன் போலச் செய்யும்' [3] 'பாலாராகிய' (க)

42. மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ
யாண ரூரநின் மாணிழை யரிவை
காவிரி மலிர்நிறை யன்னநின்
மார்புநனி [1]விலக்க றொடங்கி யோளே.

எ - து தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தலைவன் பிறபரத்தையருடன் ஒழுகினனென்று புலந்தாளாக, அதனையறிந்த தலைவி அவன் [2]தன்னில்லத்துப் புகுந்துழித் தானறிந்தமை தோன்றச் சொல்லியது.

குறிப்பு. மகிழ் மிக - மதுமயக்கம் மிக. யாணர் - புதுவருவாய். மாணிழை யரிவை என்றது பரத்தையை. காவிரி மலிர்நிறை யன்ன - காவிரியாற்றின் வெள்ளம் போன்ற ; அகநா. 166 : 14-5, 341 : 4 ; "செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறை, காவிரி" (பதிற். 50 : 5-6.) நின் அரிவை நின் மார்பை விலக்கல் தொடங்கியோள், ஆகையால் மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ ; தொடங்கியோள் - தொடங்கினாள். கொழுநன் மார்பைக் காத்தல் : குறுந். 80 : 7.

(மேற்.) மு. இச்செய்யுள் தோழி தலைவியை உயர்த்துக் கூறியது. 'இதனுள் காவிரிப் பெருக்குப் போலத் தலைவியை நோக்கி வருகின்ற மார்பினைத் தான் விலக்குமாறு என்னையெனத் தலைவியை உயர்த்துக் கூறியவாறு காண்க' (தொல். பொருள். 46, ந.)

(பி - ம்.) [1] 'விலங்க' [2] 'தன்னில்லகத்து' (உ)

43. அம்பணத் தன்ன யாமை யேறிச்
செம்பி னன்ன பார்ப்புப்பல துஞ்சும்
யாண ரூர நின்னினும்
பாணன் பொய்யன் பலசூ ளினனே.

எ - து பாணன் வாயிலாகப் புகுந்து தெளிப்ப மறுத்த தலைமகள் பாணனோடு தலைவன் புகுந்து தெளித்துழிச் சொல்லியது.

(ப - ரை.) யாமைப்புறத்து ஏறிப் பார்ப்புப்பல துஞ்சும் ஊரவென்றது மார்பில் துயில்கின்ற புதல்வரையுடையாய் எ - று.

மகப்பெற்று வாழ்வார்க்குப் பொய்கூறல் ஆகாதென்பதாம்.

குறிப்பு. அம்பணம் - மரக்கால்; பதிற். 66 : 8, 71 : 5; சிலப். 14 : 209. யாமை - ஆமை. யாமைக்கு அம்பணம் உவமை. செம்பினன்ன - செம்பினையொத்த. பொய்யன் - பொய்கூறுபவன். சூளினன் - சூள் மொழிகளை யுடையவன். (௩)

44. தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்
தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்
கதுவே [1]யையநின் மார்பே
அறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே.

எ - து பரத்தையர் மனைக்கண்ணே பன்னாள் தங்கித் [2]தன்மனைக் கண்ணேவந்த தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) நின்மார்பாற் கொள்ளும் பயனின்றிக் காட்சியெய்தவும் பெறுகின்றிலளெனப் புலந்து கூறியவாறறிக.

குறிப்பு. தீம் பெரும் பொய்கை - இனிய பெரிய பொய்கையில். தாய் மூகம் நோக்கி - தாய்முகத்தைப் பார்த்து. வளர்ந்திசினாங்கு - வளர்ந்தாற் போல; இசின் படர்க்கைக்கண் வந்தது; புறநா. 11 : 9. யாமைப் பார்ப்பைக் காமத்துக்கு உவமை கூறுதல் : குறுந். 152 : 4-5. அறனுமார் அதுவே : மார் அசைநிலை; ஐங். 46 : 1, 50 : 4, 152.

(பி - ம்.) [1] 'யையன் மார்பே' [2] 'தம்மனை' (௪)

45. கூதி ராயிற் றண்கலிழ் தந்து
வேனி லாயின் மணிநிறங் கொள்ளும்
யாறணிந் தன்றுநின் னூரே
பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே.

எ - து நெடுநாள் பரத்தையரிடத்தனாய் ஒழுகிய தலைமகன் மனைவயிற் சென்றுழித் தோழி சொல்லியது.

(ப - ரை.) கலங்குதலும் தெளிதலும் உடைத்தாகிய யாற்றியல்பும் பெருது என்றும் பசந்தே ஒழுகுகின்றாள் இவளென்பதாம்.

குறிப்பு. கூதிர் - கூதிர்காலம். தண் கலிழ்தந்து - குளிர்ந்த கலங்கிய நீரைத் தந்து. மணி நிறம் - நீலமணியின் நிறத்தை. யாறு அணிந் தன்று - ஆற்றை அணிந்தது. நின்னூர் யாறு அணிந்தன்று; என் கண் பசப்பணிந்தன. என் கண் என்றாள் ஒற்றுமைபற்றித் தோழி தலைவி உறுப் பினைத் தன்னுறுப்பென்றல் மரபாதலின்; தொல். பொருள். 27; நற். 28. (௫)

46. நினக்கே யன்றஃ தெமக்குமா ரினிதே
நின்மார்பு நயந்த நன்னுத லரிவை
வேண்டிய குறிப்பினை யாகி
ஈண்டுநீ யருளா தாண்டுறை தல்லே.

**ஏ - து** மனைக்கண் வருதல் பரத்தை விலக்க விலங்கிப் பின்பு உலகியல் பற்றி அவள்குறிப்பினோடும் வந்தமை அறிந்த தோழி தலைமகனைப் புலந்து சொல்லியது.

**(ப - ரை.)** இவ்வாறு வருதலின் வாராமையே இனிதென்பதாம்.

**குறிப்பு.** நயந்த - விரும்பிய. நன்னுதலரிவை என்றது பரத்தையை. மார்பு நயந்த அரிவை : **குறுந்.** 73 : 1. குறிப்பினையாகி - குறிப்பையுடைய வனாகி. ஈண்டு நீ அருளாது - இங்கு வந்து எங்களை அருள் செய்வதொழித்து. ஆண்டு உறைதல் - அப் பரத்தையின் இல்லிலேயே தங்கியிருத்தல். ஆண்டு உறைதல் எமக்கும் இனிது.

**(மேற்.)** மு. பிறள்மாட்டுத் தங்கிய ஒழுக்கத்துக் கிழவனைத் தாழ்ந்து எங்கையர்க்கு உரையென வேண்டிக் கோடற்கண்ணும் தலைவிக்குக் கூற்று நிகழும் (**தொல்.** கற்பு. 6, **இளம்.**); பரத்தையர் மாட்டு ஒழுகிக் கொடுமை செய்த தலைவன் தலைவியடிமேல் வீழ்ந்து வணங்குழி எங்கையர் காணின் இது நன்றெனக் கொள்ளார் எனக் குறிப்பால் இகழ்ந்து கூறிக் காதலமைந்து மாறிய வேறுபாட்டின்கண் தலைவிகூற்று நிகழும் (**தொல்.** கற்பு. 6. **ந.**) (சா)

47. முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர
மாணிழை யாய மறியுநின்
பாணன் போலப் பலபொய்த் தல்லே.

**ஏ - து** பாணற்கு வாயில்மறுத்த தலைமகள் பின் அப்பாணனோடு தலைமகன் புகுந்து தன்காதன்மை கூறியவழிச் சொல்லியது.

**(ப - ரை.)** மாணிழையாயம் அறியுமென்ற கருத்து : நீகூறும் காதன்மை பொய்யென்பது ஆயமெல்லாம் அறியும்; நான் இதனை மெய் யென்று கொள்ளினும் அவர் பொருரென்பதாம்.

கெடிறு சொரிந்த வட்டி நிறைய மனையோள் பயறுநிறைக்கும் ஊரவென்றது நீ நின்காதல் சொல்லி விடுத்து அவர் சிறந்த காதல் சொல்லி வரவிடப் பெறுவாய் எ - று.

**குறிப்பு.** முள் எயிற்றுப்பாண்மகள் - முள்ளைப்போலக் கூரிய பற்களை யுடைய பாண்மகளது ; முள் எயிறு : **குறுந்.** 262 : 4. கெடிறு - ஒருசாதிமீன்; **ஐங்.** 167 : 2; **புறநா.** 18 : 10; **பெருங்.** 4 ; 10 : 101 ; இது கெளிறெனவும் வழங்கும். அகன் பெருவட்டி - அகன்ற பெரிய கடகப்பெட்டி ; வட்டி : **ஐங்.** 48 : 2 ; **மலைபடு.** 152 ; **குறுந்.** 155 : 2. பாண்மகள் வட்டியில் மீன் சொரிதல் : **ஐங்.** 48 : 1-2 ; **நற்.** 210 : 3-4. மனையோள் - இல்லாள். அரிகாற் பெரும்

பயறு - அரிந்த தாள்களையுடைய இடத்தில் தோன்றி விளைந்த பெரும்பயறு. ஆயம் - பாங்கியர். நீ பொய்த்தலை ஆயம் அறியும். (எ)

48. வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்
யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர
வேண்டேம் பெருமநின் பரத்தை
யாண்டுச்செய் குறியோ[1] டீண்டுநீ வரலே.

எ - து பரத்தையர்மாட்டு ஒழுகாநின்று [2]தன்மனைக்கட்சென்ற தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. வலைவல் பாண்மகன் - மீன்களைப்பிடிக்க வலைவீசுதலில் வல்ல பாணன்; பெரும்பாண். 284. வாலெயிற்று மடமகள்: குறுந். 267: 4; குறள். 1121. வரால் - வரால்மீன். யாண்டு கழி வெண் நெல் என்றது பழைய நெல்லை; மீன் சொரிந்து நெல்லைப் பெறுதல்: ஐங். 49: 1-2; புறநா. 343: 1. ஈண்டு நீ வரலை வேண்டேம்.

(பி - ம்.) [1] 'டீண்டு வரலே' [2] 'தம் மனைக்கட்' (அ)

49. அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்
யாண ரூரநின் பாண்மகன்
யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே.

எ - து பாணன்வாயிலாகப் பரத்தையோடு கூடினனென்பது கேட்ட தலைமகள் தனக்கும் பாணனாற் காதன்மை கூறுவிப்பான் புக்க தலைமகற்குச் சொல்லியது.

குறிப்பு. அம் சில் ஓதி -அழகிய சிலவாகிய கூந்தலையுடைய. அசைநடை - சுமையால் ஒய்ந்த நடையையுடைய. பாண்மகள் மீன்சொரிந்து நெல்லைப் பெறுதல்: ஐங். 48, அடிக். நலம் - அழகு. பொய்க்குமோ - பொய்சொல்வானோ. எல்லோரும் அவனது பொய்ம்மையை அறிந்தனர் என்பதாம். (கூ)

50. துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்
வஞ்சி யோங்கிய யாண ரூர
தஞ்ச மருளாய் நீயேநின்
நெஞ்சம் பெற்ற விவளுமா ரழுமே.

எ - து மனையின் நீங்கிப் பரத்தையிடத்துப் பன்னாள் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. துணையோர் - ஆயத்தார். யாம் என்றது தோழி. வஞ்சி - ஒருவகைமரம்; மருதத்துக்குரியது. தஞ்சம்: எளிது என்னும் பொருளை உணர்த்தும் ஓரிடைச் சொல். நின்னை நெஞ்சத்திற் பெற்ற இவளும் அழும், செல்வமும் யாமும் வருந்துதும், அருளாய். (க0)

(ரு) புலவிப்பத்து முற்றிற்று.

## (ரு) தோழிகூற்றுப் பத்து.

51\. நீருறை கோழி நீலச் சேவல்
கூருகிர்ப் பேடை[1] வயாஅ மூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த [2]மார்பிவள் வயாஅ நோய்க்கே.

**எ - து** வாயில் பெற்றுப் புகுந்துபோய்ப் புறத்தொழுக்கம் ஒழுகிப் பின்பும் வாயில் வேண்டும் தலைமகற்குத் தோழி மறுத்தது.

**குறிப்பு.** நீரில் உறைகின்ற நீலச் சேவற்கோழியை. கூருகிர்ப்பேடை - கூரிய நகங்களையுடைய பெட்டை. வயாஅம் - விரும்பும்; வயா என்பதன் அடியாகப் பிறந்த வினை; **மலைபடு.** 476. வயாஅ நோய் - கருப்பம் தாங்கிய பின் வருத்தமுற்று நுகரப்படும் பொருள்கள்மேற் செல்லும் வேட்கை; **கலி.** 8, மயிலேறு. அன்று மலர்ந்த நின்மார்பு இவள் வயா நோய்க்குப் புளிங்காய் வேட்கைத்து. புளிங்காய் வேட்கை வயாக்குறிப்பு; **குறுந்.** 287 : 4–5; **பிரபு.** மாயை. 27; "தண்கயத்துத் தாமரைநீள் சேவலைத் தாழ்பெடை, உண்கயத் துள்ளும் வயலூர—வண்கயம், போலுநின் மார்பு புளிவேட்கைத் தொன்றிவண், மாலுமா றுநோய் மருந்து" (**திணைமாலை.** 142.)

(**மேற்.**) அடி, 3. புளிங்காய் என அம்முச்சாரியை பெறாது மெல்லெழுத்துப் பெற்று முடிந்தது (**தொல்.** உயிர்மயங்கு. 44, **ந.**) மு. இச்செய்யுளைப் பயவுவமப் போலிக்கு உதாரணமாகக் காட்டியதன்றி, "நீருறை கோழி நீலச் சேவலை அதன் கூருகிர்ப் பேடை நினைந்து கடுஞ்சூலான் வந்த வயாத்தீர்தற் பயத்தவாகு மதுபோல நின் மார்பை நினைந்து தன் வயவு நோய் தீரும் இவளும் எ - று. 'புளிங்காய் வேட்கைத்து' என்பது நின் மார்பு தான் இவளை நயவாதாயினும் இவள் தானே நின்மார்பை நயந்து பயன் பெற்றாள் போலச் சுவைகொண்டு சிறிது வேட்கை தணிதற்பயத்தளாகும்; புளியங்காய் நினைய வாய் நீரூறுமாறுபோல" என்று பொருளை விளக்கினர் **பேராசிரியர்**; **தொல்.** உவம. 25. (**பி - ம்.**) [1] 'வயாவு மூர' [2] 'மார்பிவண்' (க)

52\. வயலைச் செங்கொடிப் பிணைய றைஇச்
செவ்விரல் சிவந்த சேயரி மழைக்கண்
செவ்வாய்க் குறுமக ளினைய
எவ்வாய் முன்னின்று மகிழ்நநின் றேரே.

**எ - து** வாயில் பெற்றுக் கூடியிருந்த தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.

**குறிப்பு.** பிணையல் தைஇ - மாலை புனைந்து. செவ்விரல் சிவந்த - இயற்கையாகச் செம்மையுள்ள விரல் மிகச் சிவந்த; "செவ்விரல் சிவப்பூர" (**கலி.** 76 : 6.) இனைய - வருந்த. எவ்வாய் - எவ்விடத்தை. முன்னின்று - கருதியது. (உ)

53. துறையெவ னணங்கும் யாமுற்ற நோயே
சிறையழி புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கிக்
கழனித் தாமரை [1]மலரும்
பழன வூரநீ யுற்ற சூளே.

**எ - து** தலைவி தன்னுடன் போய்ப் புனலாடியவழி, 'இது பரத்தையருடனாடிய துறை' எனநினைந்து பிறந்த மெலிவை மறைத்தமையை யுணர்ந்த தலைமகன் மனைவயிற் புகுந்துழி, 'தெய்வங்கள் உறையும் துறைக்கண்ணே நாம் ஆடினவதனாற் பிறந்ததுகொல் நினக்கு இவ்வேறுபாடு' என்று வினவிய தற்கு அவள் சொல்லியது.

**குறிப்பு.** துறை - துறைத்தெய்வம். எவன் அணங்கும் - யாது வருத்தும்? சிறை - அணை. சிறையழி புதுப்புனல் : **ஐங்.** 78 : 3. பாய்ந்தென - பாய்ந்ததாக. யாமுற்ற நோய்க்குக் காரணம் நீயுற்ற சூளே. தலைவன் துறையில் உற்ற சூள் : **குறுந்.** 53 : 5–7. (**பி - ம்.**) [1] 'மல்கும்' (௩)

54. திண்டேர்த் தென்னவ னன்னாட் டுள்ளதை
வேனி லாயினுந் தண்புன லொழுகும்
[1]தேனூ ரன்னவிவ டெரிவளை நெகிழ
வூரி னூரனை நீதர வந்த
[2]பஞ்சாய்க் கோதை மகளிர்க்
கஞ்சுவ லம்ம வம்முறை வரினே.

**எ - து** வாயில் வேண்டிவந்த தலைமகற்குத் தலைமகள் குறிப்பறிந்த தோழி அவன் கொடுமைகூறி வாயில் மறுத்தது.

**குறிப்பு.** தென்னவன் - பாண்டியன். உள்ளதை : ஐ, சாரியை. தேனூர் - மதுரைக்கு அருகிலுள்ள ஓரூர். தலைவி தேனூரன்னள் : **ஐங்.** 55 : 2. ஊரின் - பரத்தையர் சேரியிடத்தே செல்வாயாயின். ஊரனை : ஐகாரம் முன்னிலையை விளக்கி நின்றது ; **புறநா.** 5, உரை ; அசைநிலையாக்கி விளியாகக் கொள்ளலுமாம் ; ௸. 40, உரை. பஞ்சாய்க் கோதை - தண்டான் கோரையின் நாராற் புனைந்த மாலை ; "பஞ்சாய்க் கூந்தல்" என்பர் பின்னும் ; **ஐங்.** 76 : 1. மகளிர் - பரத்தையர். அம்முறை யென்றது பிரிவால் பரத்தையர்க்கு வளைநெகிழ்தலை. வரின் அஞ்சுவல். (**பி - ம்.**) [1] 'தேனூறு' [2] 'பைஞ்சாய்' (௪)

55. கரும்பி னெந்திரங் களிற்றெதிர் [1] பிளிற்றும்
தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவள்
நல்லணி நயந்துநீ துறத்தலிற்
பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே.

**எ - து** வரைந்த அணிமைக்கண்ணே புறத்தொழுக்கம் ஒழுகி வாயில் வேண்டிவந்து தன்மெலிவு கூறிய தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது

(ப - ரை.) 'களிற்றெதிர் பிளிற்றும்' என்றது நீ கூறுகின்ற மெலிவுக்கு மேலே மெலிவு கூறுகின்றது இவள் நுதலென்பதாம்.

**குறிப்பு.** கரும்பின் ஆலை முழக்கிற்கு யானை முழக்கம் உவமை : "வேழம் கதழ்வுற்றாங்கு, எந்திரம் சிலைக்கும்" (**பெரும்பாண்.** 259–60.) கரும்பின் எந்திரம் : **புறநா.** 322 : 7. கோமான் - பாண்டியனது. துறத்தலின் - தலைவியைப் பிரிதலின். பசந்தன்று - பசந்தது.

(**மேற்.**) அடி, 2. தலைவி அவனூரனையாளென வந்தது ; **தொல்.** உவம. 25, **பேர்.** மு. தலைவன் அறம் செயற்கும், பொருள் செயற்கும், இசையும் கூத்துமாகிய இன்பம் நுகர்தற்கும், தலைவியை மறந்து ஒழுகுதற்கும், தோழி அலர் கூறுதற்கும் உதாரணமாகக் கூறப்பட்டது (**தொல்.** கற்பு. 9, 21, **ந.**)

(**பி - ம்.**) [1] 'பிளிறும்' (ரு)

56. [1] பகல்கொள் விளக்கோ [2]டிரானா ளறியா
[3] வெல்போர்ச் சோழ ராமூ ரன்னவிவள்
நலம்பெறு சுடர்நுத றேம்ப
எவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே.

**எ - து** புறத்தொழுக்கம் உளதாகியதறிந்து தலைமகள் மெலிந்துழி, 'அஃதில்லை' என்று தேற்றும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) 'தேம்ப' என்றது தேம்பாநிற்க எ - று. 'பகல்கொள்விளக்கோடு......அன்ன' என்றது ஒருநாளும் மெலிவறியாத இவள் மெலிவறிய ஒழுகினாய் எ - று.

**குறிப்பு.** பகல் - ஒளி. விளக்கோடு - விளக்கால். ஆமூர் - சோழநாட்டின் மேல்பாலுள்ள ஓரூர் ; நலம் - அழகு. தேம்ப - அழகுகெட. எவன் பயம் செய்யும் - என்ன பலனை அளிக்கும்?

(**மேற்.**) அடி, 2. வினைத்தொகைக்கு உதாரணம் (**தொல்.** எச்ச 20, **ந.**) மு. சூள் நயத்திறத்தால் சோர்வுகண்டு அழியுமிடத்துத் தோழி கூற்று நிகழும் என்பதற்கு இச்செய்யுள் உதாரணமாயதன்றி இதனுள் இவள் நுதல் தேம்பும்படி நீ தேற்றிய சொல்லெனவே சோர்வு கண்டழிந்தாளென்பதுணர்ந்தும் இப்பொய்ச்சூள் நினக்கு என்ன பயனைத்தருமெனத் தோழி தலைவனை நோக்கிக்கூறியவாறு காண்கவென்று பொருளும் விளக்கப்பட்டது ; **தொல்.** கற்பு. 9, **ந.** (**பி - ம்.**) [1] 'பகல்கொல்' [2] 'டிரா நன்றறியா' [3] 'வென்வேற் சோழனன்மூர்' (சு)

57. பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயின்
ஆம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன
இவணலம் புலம்பப் பிரிய
[1] அனைநல முடையளோ மகிழ்நநின் பெண்டே.

**எ - து** தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றென்பது கேட்ட தோழி அவனை வினயது.

(ப - ரை.) வேள்வித்தீயினையும் ஆம்பலஞ்செறுவினையுமுடைய தேனூ ரென்றது மனத்தொழுக்கத் தூய்மையு...........கூறியவாறு.

குறிப்பு. பகலில் தோன்றும் தீயைப்போல இவள் நலம் கெட; "பக லெரி சுடரின் மேனி சாயவும்" (நற். 128 : 1.) ஆம்பல் - செவ்வல்லி. தேனூர் : 'தேனூர் வெற்றிலையும் மானூர்ச் சுண்ணாம்பும்' என்பது ஒரு பழமொழி. புலம்ப - வருந்த அணிநலம் - அவ்வளவு நலம். பெண்டு - மனைவி; ஐங். 83: 4, 89 : 4, 113 : 3. பெண்டு உடையளோ.

(மேற்.) மு. 'பிழைத்து வந்திருந்த தலைமகனை நெருங்கித் தலையளிக்கு மாறு கூறித் தலைமகள் மாட்டாக்கிக் கொடுத்தற் கண்ணும் தோழிக்குக் கூற்று நிகழும்' (தொல். கற்பு. 9, இளம்.) வணங்கியன் மொழியால் வணங் கற்கண் தோழி கூற்று நிகழும் (தொல். கற்பு. 9. ந.) (பி - ம்) [1] 'அனநலம்'

(எ)

58. விண்டு வன்ன வெண்ணெற் போர்விற்
கைவண் [1] விராஅ னிருப்பை யன்ன
இவளணங் குற்றனை போறி
பிறர்க்கு மனையையால் வாழி நீயே.

எ - து உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் புலந்த தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) 'கைவண் விராஅன் இருப்பையன்ன' என்றது நினது இல்வாழ்க்கைக் குரியவாகிய குணங்களால் உயர்ந்தாள் எ - று.

குறிப்பு. விண்டு - மலை. போர்வு : ஐங். 9 : 4, அடிக். விராஅன் - ஓர் உபகாரி; இவன் மலை விராலிமலை என்று வழங்குகின்றது; இருப்பை இவனுடைய ஊர்; நற். 260 : 7, 350 : 4. இவள் - இவளால். அணங்குற் றனை - துன்பமுற்றாய். போறி - போன்று இருந்தாய். பிறர்க்கும் - பிற பெண்டிரிடத்தும்; உருபு மயக்கம்.

உணர்ப்பு வயின் வாரா ஊடல் : தொல். கற்பு. 15.

(பி - ம்.) [1] 'விராவினிருப்பை' (அ)

59. கேட்டிசின் வாழியோ [1]மகிழ்ந வாற்றுற
மைய னெஞ்சிற் கெவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
இவட்குமருந் தன்மை நோமெ னெஞ்சே.

எ - து தலைமகள் ஆற்றாளாம் வண்ணம் மனைக்கண் வரவுசுருங்கிய [2]தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாகியவழி ஆற்றாளாகிய தோழி சொல் லியது.

குறிப்பு. கேட்டிசின் : சின் முன்னிலையசைச்சொல். ஆற்றுற - ஆறு தல் அடைய. எவ்வம் - துன்பம். நினக்கு மருந்தாகிய யானென்றது களவுக் காலத்துத் தோழியிற் கூட்டம் முதலியவற்றிற்குத் தான் உதவியாக இருந்த தைக் கருதித் தோழி கூறியது. மருந்தன்மை - மருந்தல்லாமையால். நோம் - வருந்தும். (கூ)

(மேற்.) மு. பரத்தையர் மனைக்கண் தங்கி வந்திருந்த தலைமகனை நெருங்கித் தலையளிக்குமாறு கூறித் தலைமகள் மாட்டாக்கிக் கொடுத்தற்கண் தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். கற்பு. 9, இளம். ந.)

(பி - ம்.) [1] 'மகிழ்ந வாற்றும்' [2] 'தலைமகற்குத் தேற்றத் தேருது'

60. பழனக் கம்புள் [1]பயிர்ப்பெடை யகவும்
கழனி யூரநின் மொழிவ லென்றும்
துஞ்சுமனை நெடுநகர் வருதி
அஞ்சா யோவிவ ளுந்தைகை வேலே.

எ - து வரையாதொழுகும் தலைமகன் இரவுக்குறி வந்துழித் தோழி சொல்லியது.

குறிப்பு. கம்புள் - சம்பங்கோழி. பயிர்ப்பெடை - ஒலிக்கின்ற பெடைப் பறவையை. அகவும் - அழைக்கும். நின்மொழிவல் - உன்னிடம் சொல்வேன்; ஐங். 77 : 1. வருதி - வருகின்றாய். வேலை அஞ்சாயோ.

(மேற்.) மு. திணைமயக்குறுதலுள் மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தது (தொல். அகத். 12, ந.); நம்பி. ஒழிபு. 42.

(பி - ம்.) [1] 'பயிர்பெடை', 'பயிற்பெடை' (கo)

(சு) தோழிகூற்றுப்பத்து முற்றிற்று.

## (எ) கிழத்திகூற்றுப் பத்து

61. நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்
கைவண் மத்தி கழாஅ ரன்ன
நல்லோர் நல்லோர் நாடி
வதுவை யயர [1]விரும்புதி நீயே.

எ - து 'வதுவையயர்ந்தா னொருபரத்தையைச் சின்னாளில்விட்டு மற்றொரு பரத்தையை வதுவையயர்ந்தான்' என்பதறிந்த தலைமகள் அவன் மனைவயிற் புக்குழிப் புலந்தாளாக, 'இது மறைத்தற்கரிது' என உடன்பட்டு 'இனி என்னிடத்து இவ்வாறு நிகழாது' என்றாற்கு அவள் சொல்லியது.

குறிப்பு. நறு வடி மாத்து - மணமுள்ள வடுவையுடைய மாமரத்தினின்றும்; நறுவடிமா : நற். 243 : 3; குறுந். 331 : 5-6. விளைந்துகு தீம்பழம் : குறுந். 8 : 1. துடுமென : புறநா. 243 : 9. மாம்பழம் பொய்கையில் வீழ்தல் : நற். 280 : 1-3; குறுந். 8 : 1-2. மத்தி : ஓர் உபகாரி; கழார் - அவனுடைய ஊர்; இது சோழநாட்டிலுள்ளது என்று தெரிகிறது. நல்லோர் நல்லோர் நாடி - நல்ல நல்ல மகளிரைத் தேடி. வதுவையயர - மணம்புணர. விரும்புதி - விரும்புகின்றாய்.

(பி - ம்.) [1] 'வருமதி நீயே' (க)

62. இந்திர விழவிற் பூவி னன்ன
புன்றலைப் பேடை வரிநிழ லகவும்
இவ்வூர் [1]மங்கையர்த் தொகுத்தினி
எவ்வூர் நின்றன்று [2]மகிழ்நநின் றேரே.

இதுவுமது.

குறிப்பு. இந்திர விழவு : மருத நிலத்துக்குத் தெய்வமாகிய இந்திரனைக் குறித்துச் செய்யப்படும் விழா ; இவ்விதம் செய்தல் அந்நிலத்தார் வழக்கம் ; இது தொல். அகத். 5, ந. உரையாலும், சிலப். இந்திரவிழவூரெடுத்த காதையாலும் அறியப்படும். பூவினன்ன புன்றலை - பூவைப்போலச் சிவந்த தலை. வரிநிழலில் அகவும். நின்தேர் எவ்வூரில் நின்றன்று? நின்றன்று - நின்றது ; ஐங். 52 : 4.

(பி - ம்.) [1] 'மங்கையைத் தொகுத்து' [2] 'மகிழ்ந்த நின்' (உ)

63. பொய்கைப் பள்ளிப் புலவுநாறு [1]நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூர
எந்நலந் தொலைவ தாயினும்
துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த மார்பே.

எ - து பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து கூறியது.

குறிப்பு. பள்ளி - இடம். புலவுநாறு நீர்நாய் - புலால் நாற்றம் பொருந்திய நீர்நாய். வாளை நாளிரை பெறும் - வாளைமீனை நாட்காலை உணவாகப் பெறுகின்ற. நீர்நாய் ஊரன் : குறுந். 364 : 1-2 ; அகநா. 336 : 4-5. 386 : 1-2 ; புறநா. 283 : 2. எம்நலம் - எம்அழகு. தொலைவதாயினும் - கெடுவதாக இருந்தாலும். துன்னலம் - பொருந்தமாட்டோம். பிறர் - பிறபெண்டிரை ; பரத்தையரை. மார்பு துன்னலம் ; "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண்ணேன் பரத்தநின் மார்பு" (குறள். 1311.)

(மேற்.) மு. 'இது பிறப்புவமப் போலி ; நல்லகுலத்திற் பிறந்தும் இழிந்தாரைத் தோய்ந்தமையான் அவர் நாற்றமே நாறியது, அவரையே பாதுகாவாய், மேற்குலத்துப் பிறந்த எம்மைத் தீண்டலென்பாள் அஃதெல்லாம் விளங்கக் கூறுது பொய்கைப் பள்ளிப் பிறந்த நீர்நாய் முன்னாள் தின்ற வாளைமீன் புலவுநாற்றத்தோடும் பின்னாளும் அதனையே வேண்டும் ஊரன் என்றமையிற் பரத்தையர் பிறப்பு இழிந்தமையும் தலைவிபிறப்பு உயர்ந்தமையும் கூறி அவன் பிறப்பின் உயர்வும் கூறினமையின் இது பிறப்புவமப் போலியாயிற்று. இவையெல்லாம் கருதிக் கூறிற் செய்யுட்குச் சிறப்பின்றெனவும், வாளாது நீர்நாய் வாளைபெறூஉமூர என்றதனன் ஒரு பயனின்றெனவுங் கொள்க' (தொல். உவம. 25, பேர்.)

(பி - ம்.) [1] 'நீர்வாய்' (ங)

64. அலமர லாயமோ டமர்துணை தழீஇ
நலமிகு புதுப்புன லாடக் கண்டோர்
ஒருவரு மிருவரு மல்லர்
பலரே தெய்யவெம் மறையா தீமே.

எ - து தலைமகன் பரத்தையரோடு புனலாடினு னென்பதறிந்த தலைமகள் அவன்மறைத்துழிச் சொல்லியது.

குறிப்பு. அலமரல் ஆயம் - சுழலுகின்ற ஆயத்தார். அமர்துணை - அமர்ந்த பரத்தையரை. பலரே - பல பரத்தையரே. தெய்ய : அசைச்சொல். எம் மறையாதீமே - எம்மை ஒளியாதே. (சு)

65. கரும்புநடு [1]பாத்தியிற் [2]கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வனை [3]யீன்றவெம் மேனி
முயங்கன்மோ [4]தெய்யநின் மார்புசிதைப் பதுவே.

எ - து ஆற்றுமையே வாயிலாகப் புக்க தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. கரும்பு நடு பாத்தியில் - கரும்பு நட்ட பாத்தியில்; **குறுந்**. 180 : 3, 262 : 7; **பதிற்**. 13 : 3. கலித்த - செழித்த. முயங்கன்மோ - முயங்காதே. நின் மார்பு சிதைப்பதுவே - உன்மார்பினது நறுநாற்றத்தை அது சிதைப்பதாகும்.

**(மேற்.)** மு. " இது வினையுவமப்போலி; என்னை? தாமரையினை விளைப்பதற்கன்றிக் கரும்பு நடுதற்குச் செய்த பாத்தியுள் தானே விளைந்த தாமரை சுரும்பின் பசி தீர்க்கு மூரன் என்றாள். இதன் கருத்து : அது காதற் பரத்தையர்க்கும் இற்பரத்தையர்க்குமென்று அமைக்கப்பட்ட கோயிலுள் யாமுமுளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகின்றனம் அதுபோல வென்பதாகலான் உவமைக்குப் பிறிதொரு பொருள் எதிர்ந்து உவமஞ் செய்யாது ஆண்டுப் பிறந்தனவற்றோடு நோக்கிக் கருத்தினுற் கொள்ள வைத்தலின் இஃது உள்ளுறை யுவமமாயிற்று. அவற்றுள்ளும் இது சுரும்புபசி களையும் தொழிலோடு விருந்தோம்புதற் றொழில் உவமங்கொள்ள நின்றமையின் வினையுவமப்போலியாயிற்று. இங்ஙனங் கூறவே இதனை இப்பொருண்மைத் தென்பதெல்லாம் உணருமாறென்னையெனின் முன்னர் ' துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே ' எனல் வேண்டியது இதன் அருமை நோக்கி யன்றே யென்பது. அல்லாக்காற் கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை, சுரும்புபசி களையும் பெரும்புன லூர என்பது பயமிலவென்பது கூறலாமென்பது " (**தொல்**. உவம. 25, **பேர்**.) புதல்வன் தோன்றிய நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறுமாறு பண்ணிச் செறிவு நீக்கிய இளிவந்த நிலையின்கண் தலைவிக்குக் கூற்று நிகழும் (**தொல்**. கற்பு. 6, **இளம்**.) புதல்வற் பயந்தகாலத்துப் பிரிவு பற்றித் தலைவி கூறியது (**தொல்**. கற்பு. 6, **ந**.) பரத்தையினது இல்லிலிருந்து தலைவனது வரவைப் பாங்கி கூற அதையுணர்ந்த தலைவி தலைவனொடு புலந்தது (**நம்பி**. கற்பு. 7.)

(பி - ம்.) [1] 'பாத்திக் கலித்த' 'பாத்தி கலித்த' [2] 'கதித்த வாம்பல்' [3] 'யீன்றதென் மேனி', 'யீன்றவென் முயங்கல்' [4] 'வதுவே தெய்யநின் மார்பு' (ரு)

66. உடலினே னல்லேன் பொய்யா துரைமோ
யாரவண் மகிழ்ந [1]தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வெளவி யோளே.

எ - து புதல்வனைப் பிரியாதவன் பிரிந்து புறத்துத்தங்கி வந்தானாக, அவனோடு புலந்து தலைமகள் சொல்லியது.

குறிப்பு. உடலினேன் - பகைத்தேன். உரைமோ - சொல்வாயாக. தளர்நடைப்புதல்வன்: ஐங். 403 : 5; "குறுகுறு நடந்து" (புறநா. 188 : 3); "குழவி தளர்நடை காண்ட லினிதே" (இனியது. 15.) உள்ளி - நினைந்து. மனைக்கண் வருதலும். வெளவியோள் - இங்கு வாராதிருக்க உன்னைப்பற்றி னவள். வெளவியோள் ஆகிய அவள் யார்?

(மேற்.) மு. புதல்வனை நீங்கியவழித் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.)

(பி - ம்.) [1] 'தானைத் தேரொடு' (சு)

67. மடவ ளம்மநீ யினிக்கொண் டோளே
தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப்
பெருநலந் தருக்கு மென்ப விரிமலர்த்
தாதுண் வண்டினும் [1]பலரே
ஓதி யொண்ணுதல் பசப்பித் தோரே.

எ - து தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை புறனுரைத்தாளெனக் கேட்ட தலைவி தலைமகன் வந்துழி அவள் திறத்தாராய் நின்று ஒழுகும் வாயில்கள் கேட்பச் சொல்லியது.

குறிப்பு. மடவள் - அறிவில்லாதவள். இனி - இப்பொழுது. கொண்டோள்: காதற்பரத்தை. கொண்டோள் மடவள். நிகரா - மாறுபடாத. நிகரி - மாறுபட்டு. தருக்கும் - மனச் செருக்குக் கொள்வாள். வண்டு தாதுண் மலர் என மாறுக; தலைவனுக்கு வண்டு: ஐங். 90. ஓதி ஒண்ணுதல்: குறுந். 34 : 7; கம்ப. மந்தரைசூழ்ச்சி. 86. நுதல் பசத்தல்: குறுந். 48 : 5, 87 : 4. பசப்பித்தோர் பலர். கொண்டோள் தருக்கும் என்ப, அதனால் மடவள்.

(மேற்.) மு. 'காமக்கிழத்தியர் நலம் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின்கண் தலைவி கூற்று நிகழும்; இதனுள், இப்பொழுது கிடையாதது கிடைத்ததாக வரைந்து கொண்ட பரத்தை தன்னொடு இளமைச் செவ்வி ஒவ்வா என்னையும் தன்னொடு ஒப்பித்துத் தன் பெரிய நலத்தாலே மாறுபடுமென்பவென அவள் நலத்தைப் பாராட்டியவாறும், நீ பசப்பித் தோர் வண்டு தாதுண்ட மலரினும் பலரெனத் தீமையின் முடித்தவாறும் காண்க' (தொல். கற்பு. 6, ந.)

(பி - ம்.) [1] 'பலர்நீ' (எ)

68. கன்னி விடியற் [1]கணைக்கா லாம்பல்
தாமரை போல மலரு மூர
பேணு ளோநின் பெண்டே
[2] யான்ற னடக்கவுந் தானடங் கலளே.

எ - து பரத்தை தான் தலைமகளைப் புறங்கூறிவைத்துத் தன்னைத் தலைமகள் புறங்கூறினளாகப் பிறர்க்குக் கூறினமைகேட்ட தலைவி தலைமகற்குச் சொல்லியது.

குறிப்பு. கன்னி விடியல் - மிக்க இளமையான காலைநேரம்; குமரியிருட்டுப் போல நின்றது. கணைக்கால் - திரண்டகாலையுடைய. ஆம்பல் - சேதாம்பல்; சிலப். 2 : 14. பேணுளோ - அடக்கத்தைப் பாதுகாவாளோ. பெண்டு - காதற் பரத்தை. யான் தன் அடக்கவும் - யான் ஒன்றும் கூறாது அடக்கிக் கொள்ளவும். அடங்கலள் - அடங்கவில்லை; அடக்கம் கொள்ளாது என்னைப் பற்றிப் புறங்கூறினள் என்பது கருத்து.

(பி - ம்.) [1] 'கணைக்கா லாம்பல்' [2] 'யாந்தன்' (அ)

69. கண்டனெ மல்லமோ மகிழ்நநின் பெண்டே
பலராடு பெருந்துறை மலரொடு வந்த
தண்புனல் வண்ட லுய்த்தென
உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

எ - து தலைமகன் பெதும்பைப் பருவத்தாள் ஒரு பரத்தையைக் களவில் மணந்து ஒழுகுகின்றதனை அறிந்த தலைமகள் தனக்கில்லையென்று அவன் மறைத்துழிச் சொல்லியது.

குறிப்பு. கண்டனெம் - பார்த்தேம். பெண்டு - காதற்பரத்தை. வண்டல் - மணலாற் செய்யப்பெற்ற சிற்றில். உய்த்தென - கொண்டுசென்றதென்று. உண்கண் - மையுண்ட கண்கள். அழுது நின்றோளாகிய நின் பெண்டைக் கண்டனெமல்லமோ?

(மேற்.) மு. காமஞ்சாலா இளமையோளைக் களவின்கண் மணந்தமையறிந்தேனெனத் தலைவனை நோக்கித் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.) ()

70. பழனப் பன்மீ னருந்த நாரை
கழனி மருதின் சென்னிச் சேக்கும்
மாநீர்ப் பொய்கை யாண ரூர
தூயர் நறியர்நின் பெண்டிர்
[1]பேஎ யணையமியாஞ் சேய்பயந் தனமே.

எ - து பரத்தையரோடு பொழுதுபோக்கி [2]நெடிது துய்த்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

குறிப்பு. அருந்த - அருந்திய; குறுந். 114 : 4; அருந்தச் சேக்கும் எனினுமாம். மருதின் சென்னிச் சேக்கும் - மருத மரத்தின் உச்சியில் தங்கும். சேக்கும் ஊர, நறியர் - நறுமணம் பொருந்தியவர். பேயனை

யம் - பேயைப் போன்றுள்ளேம். சேய் - புதல்வனை. யாம் சேய் பயந்தனம், அதனால் பேயனையம், நின் பெண்டிர் தூயர் நறியர், அங்குச் செல்க என முடிக்க.

(பி - ம்.) [1] 'பேஎ, யனையம் யாஞ்சேய் பயந்தனை சென்மே' [2] 'நெடிதுய்த்து' (கo)

(எ) கிழத்திகூற்றுப்பத்து முற்றிற்று.

## (அ) புனலாட்டுப் பத்து

71. சூதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து
நின்வெங் காதலி தழீஇ [1]நெருநை
ஆடினை யென்ப புனலே யலரே
மறைத்த லொல்லுமோ மகிழ்ந
புதைத்த லொல்லுமோ ஞாயிற்ற தொளியே.

எ - து பரத்தையரோடு புனலாடினு னெனக்கேட்டுப் புலந்த தலைமகள் தலைமகன் அதனை இல்லை யென்று மறைத்துழிச் சொல்லியது.

குறிப்பு. சூதுஆர் - உட்புரை பொருந்திய. சூர் - அச்சம். நுடக்கம் - அசைதல். சூரமை நுடக்கம்: குறிஞ்சி. 169; குறுந். 52 : 2, 105 : 3-5; பெருங். 1 : 44 : 22-4. நெருநை - நேற்று. புனல் ஆடினை என்ப. அலர் - பழிமொழி. ஒல்லுமோ - இயலுமோ; இயலாது என்றபடி. ஞாயிற்றொளியைப் புதைத்தல் ஒல்லுமோ; புதைத்தல் - மூடுதல். "ஞாயிற்றைக் கைமறைத்த லில்" (பழமொழி.) அலரை மறைக்க முடியாமை: குறுந். 139 : 5.

(பி - ம்.) [1] 'நெருனை' (க)

72. வயன்மல [1]ராம்பற் கயிலமை நுடங்குதழைத்
திதலை யல்குற் றுயல்வருங் கூந்தற்
குவளை யுண்க ணேஎர் மெல்லியல்
மலரார் மலிர்நிறை வந்தெனப்
புனலாடு புணர்துணை யாயின ளெமக்கே.

எ - து தலைமகள் புலவி நீக்கித் தன்னோடு புதுப்புனல் ஆட வேண்டிய தலைமகன் களவுக்காலத்துப் புனலாட்டு நிகழ்ந்ததனை அவள்கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. வயலில் மலர்ந்த ஆம்பல். கயில் - மூட்டுவாய். ஆம்பல் தழையை உடுத்தல்: "வெள்ளாம்பல்......அலைப்ப" (குறுந். 293 : 5–6); "அளிய தாமே சிறுவெள் ளாம்பல், இளைய மாகத் தழையா யினவே" (புறநா. 248 : 1-2); "ஆம்ப லணித்தழை" (திணை. ஐம். 40.) திதலை யல்குல்: ஐங். 29, அடிக். துயல்வரும் - அசைகின்ற. ஏர் - அழகிய. மெல்லியல்

என்றது தலைவியை. மலிர்நிறை - வெள்ளம். வந்தென - வந்ததாக. புணர்துணை - கூடிய துணை; ஐங். 15 : 2. எமக்கு மெல்லியல் துணையாயினள்.

களவுக்காலத்துப் புனலாடுதல் : குறுந். 353 : 1-3, ஒப்பு.

(பி - ம்.) [1] 'ராம்பற் கயலமை' (உ)

73. [1]வண்ண வொண்டழை நுடங்க வாலிழை
ஒண்ணுத லரிவை பண்ணை பாய்ந்தெனக்
[2]கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே.

இதுவுமது.

குறிப்பு. அரிவை - தலைவி. பண்ணை பாய்ந்தென - விளையாட்டிடத்தே பாய; ஒரு சொல் நீர்மையன; ஐங். 74 : 4. குவளை நாறி - குவளைப் பூப் போல மணங்கமழ்ந்து. தண்ணென்றிசின் - தண்ணென்றது; இசின் : அசை.

(மேற்.) அடி, 4. 'முற்றுச்சொல் அசைக்கண் படுதல்' (தொல். இடை. 47, ந.) மு. 'இஃது உருவுவமப் போலி; நீ புனலாடிய ஞான்று பரத்தை பாய்ந்தாடிய புனலெல்லாம் தண்ணென்றதெனக் கூறியவழி, அத்தடம் போல இவள் உறக்கலங்கித் தெளிந்து தண்ணென்றாளென்பது கருதியுணரப்பட்டது, அவளோடு புனல் பாய்ந்தாடிய இன்பச் சிறப்புக்கேட்டு நிலையாற்றாளென்பது கருத்து' (தொல். உவம. 25, பேர்.)

(பி - ம்.) [1] 'வண்ண வெண்டழை' [2] 'கண்ணுறுங் குவளை', 'தண்ணென் குவளை' (ந)

74. விசும்பிழி தோகைச் சீர்போன் றிசினே
பசும்பொ னவிரிழை பைய நிழற்றக்
கரைசேர் மருத மேறிப்
பண்ணை பாய்வோ டண்ணறுங் கதுப்பே.

இதுவுமது.

குறிப்பு. விசும்பிழி தோகை - வானிலிருந்து இறங்குகிற மயிலது. சீர் போன்றிசின் - அழகு போன்றது. இழை - ஆபரணம். நிழற்ற - ஒளியைச் செய்ய. கரைசேர் மருதம்; ஐங். 7, அடிக். பண்ணை பாய்வோள் - நீர் விளையாட்டிடத்தே பாய்வோளது. கதுப்பு - கூந்தல். கதுப்பு தோகைச் சீர் போன்றிசின். கதுப்புக்குத் தோகை : நற். 264 : 3-5; குறுந். 225 : 6-7; புறநா. 146 : 8-9.

(மேற்.) அடி, 1. முற்றுச்சொல் அசைக்கண்படுதல் (தொல். இடை. 47, ந.) மு. 72-4. 'தலைவி புலவி நீங்கித் தன்னொடு புனலாடல் வேண்டிய தலைவன் முன் புனலாடியதனை அவள் கேட்பத் தோழிக்கு உரைத்தது' (தொல். கற்பு. 50, ந.) (ச)

75. பலரிவ ணொவ்வாய் மகிழ்ந வதனால்
அலர்தொடங் கின்றா லூரே மலர
தொன்னிலை மருதத்துப் பெருந்துறை
நின்னோ டாடின டண்புன லதுவே.

எ - து பரத்தையோடு புனலாடிவந்த தலைமகன் அதனை மறைத்துக் கூறியவழித் தோழி கூறியது.

குறிப்பு. பலர் ஒவ்வாய் - பலரை நீ ஒத்திராய்; பரத்தையுடன் புனலாடிக் கூடியதனால் அலர் ஏற்றமையின். ஊர் அலர் தொடங்கின்று. மலர - பூக்களையுடைய. நின்னோடு தண்புனலாடினாள், ஊர் அலர் தொடங்கின்று, அதனால் இவண் பலரை ஒவ்வாய். (ரு)

76. [1]பஞ்சாய்க் கூந்தற் பசுமலர்ச் சுணங்கிற்
றண்புன லாடித்தன் னலமேம் [2]பட்டனள்
ஒண்டொடி மடவர னின்னோ
டந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே.

இதுவுமது.

குறிப்பு. பஞ்சாய்க் கூந்தல் - தண்டான்கோரை நாரால் புனைந்த மாலையை அணிந்த கூந்தல்; ஐங். 54 : 5. மலர்ச்சுணங்கு - வேங்கை மலரைப் போன்ற தேமல். மடவரல் - பரத்தை. அந்தரமகளிர்க்கு - வான மங்கையர்க்கு. கூந்தலையும் சுணங்கினையுமுடைய மடவரல் நின்னோடு புனலாடித் தெய்வம் போன்று மேம்பட்டனள்.

(பி. ம்.) [1] 'பைஞ்சாய்' [2] 'பட்டன, வொண்டொடி' (சு)

77. அம்ம வாழியோ மகிழ்நநின் மொழிவல்
பேரூ ரலரெழ நீரலைக் கலங்கி
நின்னொடு தண்புன லாடுதும்
எம்மொடு சென்மோ செல்லனின் மனையே.

எ - து முன்னொரு ஞான்று தலைவியோடு புனலாடினா னெனக்கேட்டு இவனுடன் இனி ஆடேனென உட்கொண்ட பரத்தை, 'புதுப்புனல் ஆடப்போது' என்ற தலைமகற்குச் சொல்லியது.

குறிப்பு. நின்னை மொழிவல். நீர் அலைக்கலங்கி-நீரலைத்தலால் கலங்கி; நெடுநல். 6, ந. ஆடுதும் - ஆடுவோம். சென்மோ - வருவாயாக; மோ முன்னிலையசை. செல்லல் - செல்லாதே. நின் மனை செல்லல், எம்மொடு சென்மோ, புனலாடுதும். (எ)

78. கதிரிலை நெடுவேற் [1]கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையிற் [2]கதழ்புநெறி வந்த
சிறையழி புதுப்புன லாடுகம்
எம்மொடு கொண்மோவெந் தோள்புரை புணையே.

இதுவுமது.

குறிப்பு. கதிர் - ஒளி. கடுமான் - வேகம் மிக்க குதிரையையுடைய. கிள்ளி - சோழனது. யானையின் - யானையைப்போல. புதுப்புனலுக்கு யானை ; சீவக. 41 ; திருவிளை. வையையழைத்த. 78. கதழ்பு - விரைந்து. தோள் புரை புணை - தோளை யொத்த தெப்பம் ; குறுந். 168 : 5. எம்மொடு புணை கொண்மோ, புனல்ஆடுகம். இனி தலைவியோடு புணைகொள்ளலாகாது என்பது கருத்து.

(மேற்.) மு. 'காமக்கிழத்தி நின் மனைவியோடன்றி எம்மொடு புணை கொள்ளின் யாமாடுதுமென்று புனலாட்டிற்கு இயைந்தாள் போல மறுத்தது' (தொல். கற்பு. 50, ந.)

(பி - ம்.) [1] 'கதிமான் கிள்ளி' [2] 'கதவுநெரி தந்த' (அ)

79. புதுப்புன லாடி யமர்த்த கண்ணள்
யார்மக ளிவளெனப் பற்றிய மகிழ்ந
யார்மக ளாயினு மறியாய்
நீயார் மகனையெம் பற்றி யோயே.

எ - து தன்னொடு கூடாது தனித்துப் புனலாடுகின்றான் எனக்கேட்டுத் தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தானும் தனியேபோய்ப் புனலாடினளாக, அவளை ஊடல் தீர்த்தற் பொருட்டாகத் தலைமகன் சென்று தான் அறியான்போல நகையாடிக்கூறிக் கைப்பற்றியவழி அவள் தோழி சொல்லியது.

குறிப்பு. அமர்த்தகண்ணள் - போரைச் செய்கின்ற கண்ணையுடைய பரத்தை. அறியாய் - அறியமாட்டாய். மகனை : ஐ சாரியை. எம் என்றது பரத்தையை உளப்படுத்தியது. எம் பற்றியோய் நீ யார் மகன் ? (கூ)

80. புலக்குவே மல்லேம் பொய்யா துரைமோ
நலத்தகு மகளிர்க்குத் தோட்டுணை யாகித்
தலைப்பெயற் செம்புன லாடித்
தவநனி சிவந்தன மகிழ்நநின் கண்ணே.

எ - து தன்னையொழியப் புதுப்புனலாடித் தாழ்த்துவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

குறிப்பு. புலக்குவேமல்லேம் - புலவி கொள்ளமாட்டோம். மகளிர்க்கு - பரத்தையர்க்கு. தோள்துணையாகி - தோளுக்குத் தெப்பமாகி. தலைப்பெயல் செம்புனல் - முதல் மழையால் வந்த சிவந்த நீரில். தவநனி சிவந்தன - மிகவும் சிவந்தன. புனலாட்டாற் கண்சிவத்தல் : "நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்" (குறுந். 354 : 1) ; அகநா. 278 : 7-11, 312 : 4-8. (கo)

(அ) புனலாட்டுப்பத்து முற்றிற்று.

## (௯) புலவி விராய பத்து

81. குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை
அரிப்பறை [1]வினைஞ ரல்குமிசைக் கூட்டும்
மலரணி வாயிற் பொய்கை யூரநீ
என்னை நயந்தனெ னென்றிநின்
மனையோள் கேட்கின் வருந்துவள் பெரிதே.

எ - து தன்னைக் கொடுமைகூறினாள் தலைமகளென்பது கேட்ட பரத்தை தலைமகன்வந்து தன்மேல் அன்புடைமை கூறினானாக அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

(ப - ரை.) குருகுடைத்துண்ட யாமை மிச்சிலை வினைஞர் உணவிற் கூட்டும் ஊரவெனவே நாங்கள் நுகர்ந்துகழித்த மார்பை நுகர்வாளென்று தலைமகளைப் பழித்தவாறும்.

குறிப்பு. குருகு - நாரை. உடைத்து உண்ட. வெள்ளகட்டியாமை - வெளுத்த வயிற்றினையுடைய ஆமையினது இறைச்சியை. அரிப்பறை - அரித்தெழும் ஓசையையுடைய பறை; மதுரை. 262; குறிஞ்சி. 193; புறநா. 396 : 4. அல்குமிசை - இட்டுவைத்து உண்ணும் உணவோடு; புறநா. 236 : 2; 384 : 9. கூட்டும் ஊர. மலரணிவாயிற் பொய்கை - மலரால் அழகு பெற்ற இடங்களையுடைய பொய்கை. நயந்தனென் - விரும்பினேன். என்றி- என்று கூறுகிறாய். மனையோள் - தலைவி. பெரிது வருந்துவள்.

(பி - ம்.) [1] 'வினைஞர் நல்கு' (க)

82. வெகுண்டன ளென்ப பாணநின் றலைமகள்
மகிழ்நன் மார்பி னவிழிணர் நறுந்தார்த்
தாதுண் பறவை வந்தெம்
போதார் கூந்த லிருந்தன வெனவே.

எ - து மனைவயிற் புகுந்த பாணற்குத் தலைமகன் கேட்குமாற்றால் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) 'இதுவும் பொறுதவள் நீ ஈண்டு வருதல்பொருள், கடிதிற் செல்' என்பதாம்.

குறிப்பு. நின் தலைமகள் என்றது பரத்தையை. அவிழ் இணர் - மலர் கின்ற இதழ்; கலி. 90 : 15-6, ந. தார் - மாலையினது. தாது உண்பறவை - வண்டு; ஐங். 67 : 4; கலி. 22 : 7; அகநா. 4 : 11. போது - மலர். பறவை எம் கூந்தல் இருந்தன என நின் தலைமகள் வெகுண்டனள் என்ப. (உ)

83. மணந்தனை யருளா யாயினும் [1]பைபயத்
தணந்தனை யாகி யுய்ம்மோ நும்மூர்
ஒண்டொடி முன்கை யாயமும்
தண்டுறை யூரன் பெண்டெனப் படற்கே.

ஏ - து [2]வரைந்த அணுமைக்கண்ணே தலைமகற்குப் புறத்தொழுக்க முண்டாகியவழி அதனையறிந்த தலைவி அவனோடு புலந்து சொல்லியது.

குறிப்பு. அருளாயாயினும் - அருள் செய்யாவிடினும். பைபய = பையப் பைய - மெல்லமெல்ல; நற். 199 : 10; குறுந். 215 : 1. தணந்தனையாகி - பிரிகின்றவனாகி. உய்ம்மோ - செல்வாயாக. ஆயம் என்றது பரத்தையரை. ஊரன் பெண்டு எனப்படற்கு - ஊரனாகிய உன்னுடைய மனைவி என்று சொல்லும்படி. படற்கு, பைபய உய்ம்மோ.

(பி - ம்.) [1] 'பையத்' [2] 'வரைந்தணுமைக்கண்ணே' (ந)

84. செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து வெகுள்வோள்
கண்ணிற் காணி னென்னா குவள்கொல்
நறுவீ யைம்பான் மகளி ராடும்
தைஇத் தண்கயம் போலப்
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே.

ஏ - து பரத்தையர் மனைக்கண் தங்கிப் புணர்ச்சிக்குறியோடு வாயில் வேண்டிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. சொல்லிறந்து - சொற்கு அடங்காதபடி. வெகுள்வோள் - சினங்கொள்பவள்; என்றது தலைவியை. நறு வீ - மணம் பொருந்திய மலர்கள். தைஇ - தை மாதத்தில். ஐம்பால் - கூந்தல். மகளிராடும் கயம் போல; பண்டைக் காலத்தில் தைத்திங்களின் நாட்காலையில் மகளிர் நோன்பு கருதி நீராடி வந்தனர்; நற். 80 : 7; குறுந். 196 : 4; கலி. 59 : 13; புறநா. 70 : 6. உண்ணும் - துய்க்கும். பரத்தை மார்பு - பரத்தைமையுடைய மார்பை. மார்பைக் கண்ணிற் காணின் என்னாகுவள்கொல். (ச)

85. [1]வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலும்
[2]மறுவில் யாணர் மலிகே [3]ழூரநீ
சிறுவரி னினைய [4]செய்தி
நகாரோ பெருமநிற் கண்டிசி னோரே.

ஏ - து தலைமகன் பரத்தையர்மேற் காதல்கூர்ந்து நெடித்துச்செல்வுழி மனையகம் புகுந்தானைத் தலைவி கூறியது.

(ப - ரை.) கம்புட்பேடை சேவலொழியக் கிளையுடனே ஆலுமூர என்றது 'கிளையுடனே வாழ்கின்ற எமக்கு நின்னினீங்கிய மெலிவு உள தாகக் கூறுகின்றேமல்லேம்; நின் குலத்தொழுக்கத்துக்குத் தகாது' எனக் கழறியதாம்; "தாய்போற் கழறித் தழீஇக் கோட, லாய்மனைக் கிழத்திக் குரித்தென மொழிப" என்றதூஉம் இத்திறனோக்கியெனக்கொள்க.

குறிப்பு. கம்புள் - சம்பங்கோழி. அரிக்குரல் - இனிய குரலையுடைய. கிளையோடு - தன் கூட்டத்தோடு. ஆலும் - ஆடுகின்ற. மறு - குற்றம். யாணர் - புதுவருவாய். சிறுவரின் - சிறுவரைப்போல. இனைய - இத்

தன்மையான செயல்களை. செய்தி - செய்கிறாய். நிற் கண்டிசினோர் - நின்னைக் கண்டோர். கண்டிசினோர் நகாரோ.

"தாய்போற்...மொழிப" என்பது **தொல்.** கற்பு. 32.

**(மேற்.)** மு. 'தலைவன், மகனும் ஆற்றாமையும் வாயிலாக வந்துழித் தலைமகள் எதிர் கோடல்' (**நம்பி.** கற்பு. 8.)

**(பி - ம்.)** [1] 'வெண்டலைக்' [2] 'மறிவில்' [3] 'வூர நின்' [4] 'செய்திமை' (ரு)

86. வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குரல்
நீள்வய னண்ணி யிமிழு மூர
எம்மிவ ணல்குத [1]லரிது
நும்மனை மடந்தையொடு தலைப்பெய் தீமே.

எ - து புதல்வன் கூறிய மாற்றம் தலைமகட்குப் பாங்காயினர் கூறக் கேட்டான் என்பதறிந்த பரத்தை அதற்குப் புலந்து தலைமகற்குச் சொல்லியது.

**(ப - ரை.)** குருகின் பார்ப்பு அழைக்கும் குரல் வயல் நண்ணி இமிழுமூர என்றது நின்புதல்வன் கூறிவிடுத்தல் நீ கேட்டமை சேரியெல்லாம் அறிந்தது; நின்னால் மறைத்தல் அரிதென்பதாம். பார்ப்பினம் மெல்விதாகப் பறத்தல் பற்றி மென்பறையென்று ஆகுபெயராற் கூறியதெனக்கொள்க.

குறிப்பு. குருகின் - குருகினது. பறை - பறத்தல்; **கலி.** 78 : 10; **அகநா.** 40 : 3; **சீவக.** 2537. எம் இவண் நல்குதல் - எம்மை இங்கே பாதுகாத்தல். மனை மடந்தை - தலைவி. தலைப்பெய்தீமே - கலப்பாயாக.

**(பி-ம்.)** [1] 'லறிதும்' (சு)

87. பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்
கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்
யாண ரூரநின் மனையோள்
யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனோ.

எ - து தலைமகள் தன்னைப் புறங்கூறினாள் எனக்கேட்ட காதற் பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பத் தலைமகனோடு புலந்து சொல்லியது.

**(ப - ரை.)** கரும்பு குணிலா மாங்கனியுதிர்க்கு மூர என்றது யாங்கள் பழித்தேமென்று அவட்கு இனியசொற்கூறி அவள் எங்களைப் பழித்துக் கூறும் சொற்களை நினக்கு இனியவாகப் பெறுவாய் எ - று.

குறிப்பு. பகன்றைக் கண்ணி - சிவதைப் பூவாலாகிய மாலை; **ஐங்.** 97 : 1; **குறிஞ்சி.** 88. பல்லான் கோவலர் - மிக்க பசுக்களையுடைய இடையர். பகன்றைமலரைச் சூடுதல்: **மலைபடு.** 459; **பதிற்.** 76 : 12-3. குணில் - குறுந்தடி. புலக்கும் - பிணங்குவாள். (எ)

88. வண்டுறை நயவரும் [1]வளமலர்ப் பொய்கைத்
தண்டுறை யூரனை யெவ்வை யெம்வயின்
வருதல் வேண்டுது மென்ப
தொல்லேம் போல்யா மதுவேண் டுதுமே.

**ஏ - து** தலைமகனை நயப்பித்துக் கொள்கையில் விருப்பில்லாதாள்போல அவ்வாறு கோடலையே விரும்புவாள், அது தனக்கு முடியாதெனத் தலைமகள் புறனுரைத்தாள் எனக் கேட்ட பரத்தை அவட்குப் பாங்காயினார்க்குச் சொல்லியது.

**(ப - ரை.)** இவ்வாறு என்னைக் கூறுகை தவிராளாயின் அதனை முடியச் செய்துவிடுகின்றேனென்பதாம். வள்ளிய துறைகளின்கண்ணே எல்லாரும் கொள்ளும்வண்ணம் நயந்து பூக்கின்ற மலர்களையுடைய பொய்கை யூரன் என்றது மகளிரெல்லார்க்கும் பொதுப்பட்டிருப்பான் எ - று.

**குறிப்பு.** வண்துறை - வளம்பொருந்திய துறை. நயம்வரும் - எல்லோரும் விரும்புகின்ற. எவ்வை - என்தங்கை; பு. வெ. 315; என்றது தலைவியை. தொல்லேம் போல் - முன் இருந்ததைப்போலவே. வேண்டுதும் - விரும்புகின்றோம்.

**(பி - ம்.)** [1] 'வளர்மலர்' (அ)

89. அம்ம வாழி பாண வெவ்வைக்
கெவன்பெரி தளிக்கு மென்ப பழனத்து
வண்டுதா தூது மூரன்
[1]பெண்டென விரும்பின் றவடன் பண்பே.

**ஏ - து** தலைமகன் தலைமகளைப் போற்றி யொழுகாநின்றான் [2]என்பது கேட்ட காதற்பரத்தை அவன் பாணனுக்குச் சொல்லுவாளாய் அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

**(ப - ரை.)** அவன் ஆங்கு ஒழுகுகின்றது அவள் பண்புடைமை யல்லது வேறு காரணம் இல்லையென இகழ்ந்து கூறியவாறும்.

**குறிப்பு.** எவ்வை - என் தங்கை; என்றது தலைவியை; ஐங். 88 : 2. எவன் - யாது? அளிக்கும் - அருள்செய்யும். விரும்பின்று - விரும்பியது. அவள்தன் - அத்தலைவியினுடைய. அவள் தன் பண்பே, அளிக்கும் என்ப, எவன்.

**(பி - ம்.)** [1] 'வேண்டென விரும்பின்று' [2] 'என்பது காதற்பரத்தை.()

90. மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்
வண்டின் மாண்குண மகிழ்நன்கொண் டான்கொல்
அன்ன தாகலு மறியாள்
எம்மொடு புலக்குமவன் புதல்வன் றாயே.

எ - து தலைமகன் தன்மனைக்கண் செல்லாமல் தான் விலக்குகின்றாளாகத் தலைமகள் கூறினாளென்பது கேட்ட காதற்பரத்தை தலைமகன் கேட்குமாற்றால் அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

குறிப்பு. மாண்குணம் - மாட்சிபொருந்திய குணத்தை. அவன் புதல்வன் தாய் என்றது தலைவியை. தலைவன் தலைவியையும், பரத்தை தலைவியையும், தலைவி மாற்றாளையும் பரத்தையையும், இவர்களைப் பிறரும் தனித்தனி இன்னாளென்று கூறாமல் புதல்வன்தாய் என்றாவது மகன்தாய் என்றாவது கூறுதல் மரபு; ஐங். 405 : 4, 442 : 5 ; குறுந். 8 : 6 ; அகநா. 6 : 13, 16 : 19. வண்டு பல மலரிடத்தும் சென்று தாதருந்துதல் போலத் தலைவனும் என்னைத் தவிர வேறு பல மகளிரிடத்தும் சென்று இன்பம் துய்க்கின்றான் ; எம்மிடம் மாத்திரம் தலைவி புலத்தல் முறையன்று என்று புலந்து கூறினாள். (கo)

(கூ) புலவி விராய பத்து முற்றிற்று.

## (கo) எருமைப்பத்து

91. நெறிமருப் பெருமை நீல விரும்போத்து
வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்கும்
கழனி யூரன் மகளிவள்
[1]பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.

எ - து குறைவேண்டிப் பின்னின்றுவந்த தலைமகற்குத் தோழி, 'இவள் இளையள் விளைவிலள்' எனச் சேட்படுத்தது.

(ப - ரை.) நாற்றங்கொள்ளப்படாத கரும்பின் பூவாற் செய்யப்பட்ட நெடிய மாலையையுடையளென்பதனாற் பேதையென்றவாறு அறிக. எருமைப்போத்து வெறிமலர்ப் பொய்கை ஆம்பன் மயக்கும் ஊர் என்றது நல்ல தன்மையை ஆராயாது கெடுக்குமூராதலால் நினக்கு ஈண்டுவருதல் பொருந்தாதென்பதாம். பழனவெதிரென்பது கரும்பு.

குறிப்பு. நெறிமருப்பு எருமை - நெறிந்த கொம்பையுடைய எருமை ; பதிற். 67 : 15 ; சீவக. 44. எருமைப்போத்து - எருமைக்கிடா. வெறி - வாசனை. மயக்கும் - கெடுக்கும் ; ஐங். 99 : 2. ஊரன் - ஊரனது. பழனவெதிரின் கொடிப்பிணையலள் - கரும்பின் மணமில்லாத பூமாலையையணிந்தவள் ; குறுந். 85 : 4-5 ; நாலடி. 199.

(மேற்.) 'திணை மயக்குறுதலுள் மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தது ; இஃது இளையள் விளைவிலள் என்றது' (தொல். அகத். 12, ந.)

(பி - ம்.) [1] 'பழநல் வெதிரின்' (க)

92. [1]கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கும்
நுந்தை நும்மூர் வருதும்
ஒண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே.

எ - து நினக்கு வரைந்துதருதற்குக் குறை நின்தமர் அங்குவந்து கூறுமையேயெனத் தோழி கூறினளாக, தலைமகள் முகநோக்கி இவள் குறிப்பினாற் கூறினளென்பது [2]அறிந்த தலைமகன், 'வரைவு மாட்சிமைப் படின் நானே வருவல்' எனத் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) எருமைப் புனிற்றுத் தன் குழவிக்கு ஊறுமுலை மடுக்கு மென்றது அவள்பொருட்டு உற்றார்பக்கல் தான் பெறுவனவும் கூறியவாறு.

குறிப்பு. எருமைப் புனிற்று - ஈன்ற அணிமையையுடைய எருமை. காதற் குழவிக்கு - அன்புசிறந்த தன் கன்றுக்கு. எருமைக்குழவி : பட். 14 ; நற். 120 : 1 ; குறுந். 181 : 3-4. ஊறுமுலை மடுக்கும் - பால் ஊறுகின்ற முலையை உண்பிக்கும். நுந்தை நும்மூர் - உன்தந்தையுடையவாகிய உங்கள் ஊரிடத்து ; புறநா. 78 : 11, உரை. யாம் நின்னைப் பெறின் வருதும்.

(மேற்.) மு. "கிழவோன் சொல்லும் உள்ளுறை யுவமம் தன்னுடைமை தோன்றச் சொல்லப்படும் ; 'கருங்கோட்டு .....பெறினே' என்றவழி, தாய்போன்று நும்மைத் தலையளிப்பலெனத் தலைமகன் தலைமைதோன்ற உரனொடு கிளந்தவாறு காண்க" (தொல். உவம. 27, பேர்.) திணைமயக்குறுத லுள் இது மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தது (தொல். அகத். 12, ந.) திணை மயக்குறுதலுள் குறிஞ்சிக்குரிய புணர்தல் மருதத்திணையொடு மயங்கிவந்தது (இ. வி. 394.)

(பி - ம்.) [1] 'அருங்கோட்டெருமை' [2] 'அறிந்து தலைமகன்' (உ)

93. [1]எருமைநல் லேற்றின மேய லருந்தெனப்
பசுமோ ரோடமோ டாம்ப லொல்லா
செய்த வினைய மன்ற பல்பொழில்
தாதுண வெறுக்கைய வாகியிவள்
போதவிழ் [2]முச்சி யூதும் வண்டே.

எ - து முயக்கம்பெற்றவழிப் பிறந்த வெறிநாற்றத்தால் பண்டையள வன்றி வண்டுகள் மொய்த்தனவாக, 'இதற்குக் காரணமென்?' என்று வினவிய செவிலித்தாய்க்குக் கூறுவாள்போன்று தலைமகன் சிறைப்புறத்தா னாகத் தோழி சொல்லியது.

குறிப்பு. எருமை நல்லேற்றினம் - எருமைக்கிடாவினங்கள். மேயல் - மேய்ச்சல். அருந்தென - உண்டனவாக. பசுமோரோடம் - பசுமையான செங்கருங்காலிப் பூ ; மோரோடமென்பது மாரோடமெனவும் வழங்கும் ; குறிஞ்சி. 78 ; நற். 337 : 5 ; பெருங். 1. 50 : 31. ஒல்லா - பொருந்தாத. வெறுக்கையவாகி - வெறுப்பையுடையனவாகி. முச்சி - மயிர்முடி ; மலை படு. 182. தலைவன் முயக்கத்தால் தலைவியின் கூந்தலில் வண்டுகள் மொய்த்தல் : நற். 55.

(பி - ம்.) [1] 'எருமைநல் லேறின் மேயல்' [2] 'மூச்சு யூதும்' (ந)

94. மள்ள ரன்ன [1]தடங்கோட் டெருமை
மகளி ரன்ன துணையொடு வதியும்
நிழன்முதி ரிலஞ்சிப் பழனத் ததுவே
கழனித் தாமரை மலரும்
கவின்பெறு சுடர்நுத றந்தை யூரே.

எ - து வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீள்கின்றான் சொல்லியது.

(ப - ரை.) எருமை துணையொடு வதியுமென்றது வரைந்தெய்திய வழித் தலைமகளோடு தானொழுகும் இன்பவொழுக்கத்தினை நினைந்து கூறிய வாறு. கழனித்தாமரை மலரும் என்றது அவ்விடத்துத் தன்னைக் கண்டு மகிழ்வார் முகமலர்ச்சி கூறியவாறும்.

குறிப்பு. மள்ளர் - வீரர். மள்ளரன்ன எருமை : நற். 260 : 1-3 ; அகநா. 316. மள்ளரும் மகளிரும் : ஐங். 400 : 1-2. வதியும் - தங்கும். இலஞ்சி - மகிழ் ; குளமுமாம். சுடர்நுதல் என்றது தலைவியை. ஊர் பழனத்தது.

(பி - ம்.) [1] 'திறங்கோட் டெருமை' (௪)

95. கருங்கோட் டெருமை கயிறு பரிந்தசைஇ
நெடுங்கதிர் நெல்லி னுண்மேய லாரும்
புனன்முற் றூரன் பகலும்
படர்மலி யருநோய் செய்தன னெமக்கே.

எ - து உண்டிக்காலத்து மனைக்கண் வருதலும் சுருங்கிப் பரத்தையிடத் தனாய்த் தலைமகன் ஒழுகியவழி அவற்கு வாயிலாய் வந்தார்க்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) எருமை கயிற்றைப் பரிந்துபோய் நாண்மேயலாருமென்றது விலக்குவார்க்கு அடங்காது புறத்தொழுக்கம் விரும்புவான் எ - று.

குறிப்பு. பரிந்து - அறுத்து. அசைஇ - சென்று. நாண்மேயலாரும் - விடியலிலே மேயும். ஊரன் எமக்கு நோயைச் செய்தனன். (ரு)

96. [1]அணிநடை யெருமை யாடிய வள்ளல்
மணிநிற நெய்த லாம்பலொடு கலிக்கும்
கழனி யூரன் மகளிவள்
பழன வூரன் பாயலின் றுணையே.

எ - து பரத்தையர் பலரோடும் ஒழுகுதல் கண்டு பொறுதிருந்த தலைமகள் தலைமகன் மனைக்கண் புகுந்துழி உடன்படுதல்கண்ட வாயில்கள் தம்முள்ளே சொல்லியது.

(ப - ரை.) எருமை உழுது உழக்கிய அள்ளற்கண்ணே நெய்தலும் ஆம்பலும் கலிக்கும் என்றது தலைமகற்கு வேண்டுவன புரிகின்ற இல் வாழ்க்கைக் கண்ணே தாம்பெறுகின்ற சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு. அள்ளல் - சேற்றின்கண். நெய்தல் - நெய்தற்பூ. கலிக்கும் - செருக்கி வளரும். பாயல் - படுக்கை. பாயலில் இன்துணை ஆயினள்.

(மேற்.) மு. வாயில்கள் தலைவியது கற்புக் கூறியது (தொல். கற்பு. 11, ந.)

(பி - ம்.) [1] 'அணிநிற வெருமை' (சு)

97. பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்
கருந்தா ளெருமைக் கன்று வெரூஉம்
பொய்கை யூரன் மகளிவள்
பொய்கைப் பூவினு நறுந்தண் ணியளே.

எ - து புறத்தொழுக்கம் [1] இன்றியே இருக்கவும் உளதென்று புலந்த தலைமகளைப் புலவிநீக்கிய தலைமகன் புணர்ச்சியது இறுதிக்கண் தன்னுள்ளே சொல்லியது.

(ப - ரை.) தாயினுடைய பகன்றைமலர் மிடைந்த கோட்டைக் கன்று வெரூஉமென்றது தன் தோளிலணிந்த மாலையைப் பிறிதொன்றற்கு அணிந்த மாலையெனக் கருதினளென்பதாம்.

குறிப்பு. பகன்றை வாண்மலர் - பகன்றையாகிய வெள்ளிய மலரை; பகன்றை வெண்ணிறமானது: ஐங். 456 : 2; அகநா. 217 : 6-8; கலி. 73 : 2-5. கோட்டை - கொம்பை. வெரூஉம் - அஞ்சும். நறுந்தண்ணியள்- மிக்க குளிர்ச்சியையுடையவள்; குறுந். 70 : 2, 84 : 5, 168 : 4. 'பொய்கை ......தண்ணியள்' என்றது பொய்கையில் நீர் இல்வழி ஆங்குள்ள பூ சில நாளில் வாடும்; தலைவி அவ்விதமின்றித் தலைவனைக் காணுக்காலே வாடும் தன்மையினள் என்பதாம்.

(பி - ம்.) [1] 'இன்றியிருக்கவும்' (எ)

98. தண்புன லாடுந் தடங்கோட் டெருமை
திண்பிணி யம்பியிற் றோன்று மூர
ஒண்டொடி மடமக ளிவளினும்
நுந்தையும் யாயுங் கடியரோ நின்னே.

எ - து புறத்தொழுக்கம் உளதாகிய துணையானே புலந்து வாயில் நேராத தலைமகள் கொடுமை தலைமகன் கூறக்கேட்ட தோழி அவற்குச் சொல்லியது.

(ப - ரை.) இவளினும்...கடியரோவென்றது நின்னிடத்துக் குற்றமுளதாகியவழிக் கழறுங்கால் இவளினுங் கடியரோ நுந்தையும் யாயும் எ - று. அவரினும் கடுமையாற் கூறுதற்கு உரியாள் இவளென்பதாம். நீராடும் எருமை பலரும் ஏறுதற்குரிய அம்பிபோலத் தோன்றுமென்றது பலர்க்கும் உரியையாவை யெனப் புலந்தாளென்பதாம்.

குறிப்பு. திண்பிணி அம்பியின் - திண்ணிதாகப் பிணிக்கப்பட்ட ஓடத்தைப்போல. எருமைக்கு ஓடம் உவமை. மடமகள் என்றது தலைவியை. கடியரோ - கடுமையையுடையரோ; அல்லரென்றபடி. (அ)

99. [1]பழனப் பாகன் முயிறுமூசு குடம்பை
கழனி யெருமை கதிரொடு மயக்கும்
பூக்கஞ லூரன் மகளிவள்
நோய்க்குமருந் தாகிய பணைத்தோ ளோளே.

எ - து தோழி முதலாயினோர் தலைமகன் கொடுமைகூறி விலக்கவும் தலைமகள் வாயில் நேர்ந்துழி அவன் உவந்து சொல்லியது.

(ப - ரை.) முயிறுமூசு குடம்பையை நெற்கதிரோடு எருமை மயக்கு மென்றது யான்செய்த கொடுமையையும் அவர்கள் தன்மேற் காதலித்துக் கூறியவற்றையும் சிதைத்து என்பக்கலே நின்றாளென்பதாம்.

குறிப்பு. முயிறு மூசு குடம்பை - முயிறு என்ற எறும்பு மொய்த்து உறைகின்ற கூட்டை ; பழனப்......குடம்பை : **நற்**. 180 : 1. கழனி - பழனம். கதிர் - நெற்கதிர். நோய்க்கு மருந்து : **ஐங்**. 101 : 5. பணைத் தோளோள் - பெருத்த தோளையுடையவள். இவள் தோளோள்.

(பி - ம்.) [1] 'பழனப் பாகர்' (௯)

100. புனலாடு மகளி ரிட்ட வொள்ளிழை
மணலாடு சிமையத் தெருமை கிளைக்கும்
யாண ரூரன் மகளிவள்
பாணர் நரம்பினு மின்கிள வியளே.

எ-து வாயில் நேர்தற்பொருட்டு முகம்புகுவான்வேண்டி இயற்பழித்துழித் தலைமகள் இயற்பட மொழிந்ததிறம் தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) மகளிரது மறைந்த இழையை எருமை கிளைக்குமூரன் மகளென்றது இப்போது வாயில் நேர்தலேயன்றிக் களவுக்காலத்து நீ செய்த நன்மை மறைந்தனவும் எடுத்துக் கூறினாளென்பதாம்.

குறிப்பு. புனலாடு மகளிர் இட்ட ஒள்ளிழை-நீராடும் பெண்டிர் போகட்டுப் போன ஒளியையுடைய ஆபரணங்களை ; **ஐங்**. 122 : 2 ; "புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை" (**பெரும்பாண்**. 312.) சிமையத்து - உச்சியில். மணலாடுசிமையம் : **நற்**. 260 : 4; **குறுந்**. 372 : 2-3 ; **அகநா**. 190 : 5-7. கிளைக்கும் - கிண்டும். கிளவியள் - மொழியையுடையவள். பாணர்......கிளவியளே : **ஐங்**. 185 : 4. (௧0)

(௧0) எருமைப்பத்து முற்றிற்று.

மருதம் முற்றிற்று.

**ஓரம்போகியார்.**

---

# 2. நெய்தல்

## கக. தாய்க்குரைத்த பத்து

101. அன்னை வாழிவேண் டன்னை [1]யுதுக்காண்
ஏர்கொடிப் பாசடும்பு பரியவூர் [2]பிழிபு
நெய்தன் மயக்கி வந்தன்று [3]நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்குமருந் தாகிய கொண்கன் றேரே.

**எ - து** அறத்தொடு நின்றபின்னர் வரைதற்பொருட்டுப் பிரிந்த தலைமகன் வரைவோடு புகுந்தவழித் தோழி செவிலிக்குக் காட்டிச் சொல்லியது.

**(ப - ரை.)** தேர் அடும்பு பரிய அதனை ஊர்ந்திழிந்து நெய்தலை மயக்கி வந்ததென்றது களவிற்கூட்டம் வெளிப்பட்டபின்பும் வரையாது பிரிந்தானென்று அலர்கூறுவார் வருந்த வந்தான் எ - று.

**குறிப்பு.** வேண்டு - விரும்புவாயாக. அன்னை வாழி வேண்டன்னை : **ஐங்.** 102-10 : 1. வாழி வேண்டன்னை : **ஐங்.** 201-10; **குறிஞ்சி.** 1; **குறுந்.** 321 : 8; **அகநா.** 48 : 1. உதுக்காண் - அதனைக்காண் ; **ஐங்.** 453 : 2 ; **குறுந்.** 81 : 4, 191 : 1 ; **கலி.** 108 : 39 ; **புறநா.** 307 : 3. பாசடும்பு - பசுமையர்ன அடப்பங் கொடி ; **பதிற்.** 30 : 6 ; **கலி.** 127 : 21 ; **அகநா.** 160 : 12-3. பரிய - வருந்த. ஊர்பு இழிபு - ஏறி இறங்கி. நெய்தல் மயக்கி - நெய்தற்பூவைச் சிதைத்து. தேர் நேமியால் நெய்தல் சிதைதல் : **குறுந்.** 227 : 1-3. பூப்போல் உண்கண் - தாமரைப் பூப்போன்ற மையுண்ட கண் ; **ஐங்.** 16 : 4, குறிப்பு. மரீஇய - மருவிய. கொண்கன் - நெய்தல் நிலத்தலைவன். கொண்கன் தேர் வந்தன்று, உதுக்காண்.

**(மேற்.)** அடி, 1. **நன்.** 179, **சங்.** **மு.** திணை மயக்குறுதலுள் நெய்தற்கண் குறிஞ்சி மயங்கி வந்தது (**தொல்.** அகத். 12, **ந.**)

**(பி - ம்.)** [1] 'யுவக்காண்' [2] 'பிழியூஉ' [3] 'நின்மகளே' (க)

102. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்
நீனிறப் பெருங்கடற் புள்ளி னானாது
துன்புறு துயர நீங்க
இன்புற [1]விசைக்குமவர் தேர்மணிக் குரலே.

**இதுவுமது.**

**குறிப்பு.** கடற் புள்ளின் - கடற் பறவைகளைப்போல. ஆனாது - மேன் மேலும். இசைக்கும் - ஒலிக்கும். தேர் மணிக்குரல் புள்ளின் ஆனாது இசைக்கும். தேர் மணியொலிக்குப் புள்ளொலி ; **நற்.** 178 ; 9, 287 ; 9-10.

**(பி - ம்.)** [1] 'விரைக்குமவர்' (உ)

103. அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்
இவட்கமைந் தனனாற் றானே
தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே.

எ - து அறத்தொடு நின்றதோழி வதுவைநிகழா நின்றுழித் தாய்க்குக் காட்டி உவந்து சொல்லியது.

(ப - ரை.) புன்னையொடு ஞாழல் பூக்குமென்றது குடிப்பிறப்பும் உருவும் நலனும் ஒத்தல் கூறியவாறு.

குறிப்பு. ஞாழல் - புலிநகக் கொன்றை. புன்னையும் ஞாழலும்: ஐங். 169 : 2-3 ; குறுந். 318 : 2. இவட்கு - தலைவிக்கு. அமைந்தனன் - உரு, நலன் முதலியவற்றால் ஒத்தனன் ; ஆல், தான், ஏ : அசைகள். அமைந்தன்று - ஒத்தது. இவள் மாமைக் கவின் - இவளது மாமையாகிய பேரழகு ; குறுந். 27 : 5 ; கலி. 4 : 17-8. கவின் அமைந்தன்று.

(மேற்.) மு. 'வதுவை நிகழா நின்றுழித் தாய்க்குத் தோழி கூறியது' (தொல். களவு. 24, ந.) (௩)

104. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்
நள்ளென வந்த [1]வியறேர்ச்
செல்வக் கொண்கன் செல்வனஃ தூரே.

எ - து புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்கட்சென்ற செவிலிக்கு முன்பு அறத்தொடுநின்று வதுவைகூட்டிய தோழி அவனூர் நன்மைகாட்டிச் சொல்லியது.

(ப - ரை.) செல்வக் கொண்கன் செல்வனென்றது புதல்வனை ; செல்வக்கொண்கன் செல்வனூரென்னும் எழுவாயின் முற்றுச்சொல் அஃதென்னும் பெயர்.

குறிப்பு. பலர்மடி பொழுதின் - பலரும் தூங்குகின்ற இராக்காலத்தே ; குறுந். 6 : 1-3, 244 : 1. சாஅய் - மெலிந்து. நள்ளென - நள்ளென்னும் ஓசையுண்டாக ; விரைவாக. கொண்கன் செல்வன் ஊர் அஃது.

(மேற்.) மு. 'புதல்வற் பெற்றுழி தலைவன் மனைக்கட் சென்ற செவிலிக்கு அறத்தொடு நின்று வதுவை கூட்டிய தோழி அவனூர் காட்டிக் கூறியது' (தொல். கற்பு. 9, ந.) (பி - ம்.) [1] 'வியன்றேர்ச்' (௪)

105. அன்னை வாழிவேண் டன்னை முழங்குகடல்
[1]திரைதரு முத்தம் வெண்மண லிமைக்கும்
தண்ணந் துறைவன் வந்தெனப்
பொன்னினுஞ் சிவந்தன்று கண்டிசி னுதலே.

எ - து அறத்தொடு நின்றபின் [2]வேண்டுவன தருதற்குப் பிரிந்த தலைமகன் வரைவொடு வந்துழி தலைமகள் நுதற்கண் முன்புள்ள பசப்பு நீங்கும் வண்ணம் தோன்றிய கதிர்ப்புக்காட்டிச் செவிலிக்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) ஓதத்தால் அலைப்புண்டு போந்த முத்தம் மணற்கண்ணே கிடந்து விளங்குமென்றது தன்வருத்தம் நோக்காது நமக்கு நிலைநின்ற இன்பத்தைத் தருவான் எ - று.

குறிப்பு. கடல் திரைதரும் - கடலது அலை அளித்த. இமைக்கும் - விளங்குகின்ற. வந்தென - வர. சிவந்தன்று - சிவந்தது. கண்டிசின் - காண்பாயாக; சின் : முன்னிலையசை; "காப்பும் பூண்டிசின்" (அகநா. 7 : 5, உரை.) வந்தென நுதல் சிவந்தன்று, கண்டிசின்.

(மேற்.) மு. தோழி கூற்று; நொதுமலர் வரைவு பற்றி வந்த முன்னிலைக் கிளவி (தொல். களவு. 24, இளம்.)

(பி - ம்.) [1] 'திரிதரு' [2] 'வேண்டுவன கொண்டு வருதற்குப் பிரிந்து' (ரு)

106. அன்னை வாழிவேண் டன்னை யவர்நாட்டுத்
துதிக்கா [1]லன்னந் துணைசெத்து மிதிக்கும்
தண்கடல் வளையினு மிலங்குமிவள்
அங்கலி ழாகங் கண்டிசி னினைந்தே.

எ - து அறத்தொடு நின்றதோழி அது வற்புறுப்பான் வேண்டிச் செவிலிக்குச் சொல்லியது.

(ப - ரை.) தண்கடல் வளையினும் இலங்குமென்றது மேனியில் வேறுபாடு.

குறிப்பு. துதி காலன்னம் - கூர்மையான காலையுடைய அன்னம்; துதி - கூர்மை; "துதிய வள்ளுகிர்" (அகநா. 8 : 3.) துணை - பெடை. செத்து - அறிந்து. வளையினும் - சங்கைக் காட்டிலும். அன்னப்பெடைக்குச் சங்கம் உவமை. அம் கலிழ் ஆகம் - அழகு ஒழுகுகின்ற உடம்பு; ஐங். 174 : 4; குறுந். 143 : 7, 147 : 2. கண்டிசின் - காண்பாயாக; ஐங். 105. வளையினும் இலங்கும் இவள் ஆகத்தை நினைந்து கண்டிசின். உடம்பு விளர்த்தது இளைப்பினாலன்று என்றபடி.

(பி - ம்.) [1] 'லன்னநீ துணைசெத்து' (சு)

107. அன்னை வாழிவேண் டன்னையென் றோழி
சுடர்நுதல் பசப்பச் சாஅய்ப் படர்மெலிந்து
தண்கடற் படுதிரை கேட்டொறும்
துஞ்சா ளாகுத னோகோ யானே.

எ - து தோழி செவிலிக்கு அறத்தொடுநிலை குறித்துக் கூறியது.

குறிப்பு. தோழி என்றது தலைவியை. நுதல் பசத்தல் : குறுந். 87 : 4. சாஅய் - வருந்தி. படர் - நினைவு; துன்பமுமாம். திரை - அலையொலியை. கேட்டொறும் - கேட்குந்தோறும். ஆகுதல் - ஆகுதலின். நோகு - நோவேன்; ஓ : அசைநிலை. யான் நோகோ, நோகோயானே : நற். 26 : 1; குறுந். 131 : 6; அகநா. 137 : 16.

(எ)

108. அன்னை வாழிவேண் டன்னை கழிய
முண்டக மலருந் தண்கடற் சேர்ப்பன்
[1] எந்தோ டுறந்தன னாயின்
[2] எவன்கொன் மற்றவ னயந்த தோளே.

**எ - து** அறத்தொடுநிலை பிறந்தபின்னும் வரைவு நீடிற்றாக மற்றொரு குலமகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலிகுறிப்பறிந்த தோழி அவட்குச் சொல்லியது.

**குறிப்பு.** கழிய - கழியிலுள்ள. முண்டகம் - கழிமுள்ளி. எம் தோள் என்றது தலைவியின் தோளைக்கருதி; இவ்விதம் தோழி கூறுதல் பொருந்தும்; **தொல்.** பொருள். 27. துறந்தனனாயின் - நீங்கினனாயின். எவன்கொல் - யாது? நயந்த - விரும்பிய. தோள் - பிற மகளிரது தோள். தோள் எவன் கொல்.

**(மேற்.)** மு. "இதனுள் 'கழிய முண்டகம் மலரும்' என முள்ளுடையதனைப் பூ மலருமென்று உள்ளுறுத்ததனான் இருவர் காமத்துறைக்கண்ணும் ஒருதலை இன்னா ஒருதலை இனிது என்றாளென்பது. 'என்றோடுறந்தனன்' என்பது முள்ளுடைமையோ டொக்க, 'என்னுங்கொல்லவ னயந்தோடோள்' என்ற வழி அவன் அன்பிற் றிரியாமை கூறினமையின் முண்டக மலர்ச்சியோ டொப்பிக்கப்படும்" (**தொல்.** உவம. 29, **பேர்.**) அறத்தொடு நின்ற பின் வரைவு நீட மற்றொரு குலமகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குக் கூறியது (**தொல்.** களவு. 23, **ந.**)

**(பி - ம்.)** [1] 'என்றோ டுறந்தன' [2] 'என்னுங்கொல்லவன்', 'என்னுங் கொன் மற்றவ' (அ)

109. அன்னை வாழிவேண் டன்னை நெய்தல்
நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்
எந்தோ டுறந்தகாலை யெவன்கொல்
பன்னாள் வருமவ னளித்த பொழுதே.

**எ - து** அறத்தொடு நின்றபின்பு வரைவான் பிரிந்த தலைமகன் கடிதின் வாராதவழி ஐயுற்ற செவிலி, 'அவன் நும்மைத் துறந்தான்போலும்; நுங்கட்கு அவன் கூறியதிறம் யாது?' என்றாட்குத் தோழி சொல்லியது.

**குறிப்பு.** தூம்பின் பூ - உட்டுளையையுடைய பூ. பன்னாள் எவன் கொல், அளித்தபொழுதே வரும்.

**(மேற்.)** அறத்தொடு நின்றபின் வரைவான் பிரிந்து நீட்டித்துழி ஐயுற்ற செவிலி 'அவன் நும்மைத் துறந்தான் போலும், நுங்கட்கு அவன் கூறிய திறம் யாது?' என்றாட்குத் தோழி கூறியது (**தொல்.** களவு. 23, **ந.**) (கூ)

110. அன்னை வாழிவேண் டன்னை புன்னை
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
என்னை யென்றும் யாமே யிவ்வூர்

பிறிதொன் ருகக் கூறும்
ஆங்கு மாக்குமோ வாழிய பாலே.

எ - து நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

**குறிப்பு.** என் ஐ - என் தலைவன்; **ஐங்**. 201 : 1, 312 : 4; **குறுந்**. 24 : 2; **குறள்**. 771. என்றும் - என்போம். ஆங்கும் - அவ்விதமும். பால் - ஊழ். பால் ஆங்கும் ஆக்குமோ? வாழிய; வாழிய வெறுப்புக் குறிப்பு. வாழிய பாலே : **குறுந்**. 229 : 5.

நொதுமலர் வரைவின்கண் - அயலார் வரைவுக்குரிய முயற்சியோடு வந்த காலத்தில்.

**(மேற்.)** மு. வேற்றுவரைவு வரின் அது மாற்றுதற்குத் தலைவி கூறல் (**தொல்**. களவு. 21, **இளம்**.) இறந்துபாடு பயக்குமாற்றுல் தன் திறத்து அயலார் வரையக் கருதிய ஞான்று அதனை மாற்றுதற்குத் தலைவி கூற்று நிகழும் (**தொல்**. களவு. 20, **ந**.) (கo)

(கக) தாய்க்குரைத்த பத்து முற்றிற்று.

## (கஉ) தோழிக்குரைத்த பத்து

111. அம்ம வாழி தோழி பாணன்
சூழ்கழி மருங்கி [1]ஞளிரை கொளீஇச்
சினைக்கயன் மாய்க்குந் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
(5) அருந்தவ முயற லாற்ரு தேமே.

எ - து இற்செறிப்பாரெனக்கேட்ட தலைமகள் வரையாது வந்தொழுகும் தலைவன் சிறைப்புறத்தானுகத் தோழிக்குச் சொல்லியது.

**குறிப்பு.** அம்ம வாழி தோழி : **ஐங்**. 31, குறிப்பு. கழி - உப்பங்கழி; தூண்டிற் கழியுமாம். நாளிரை - காலையுணவை. கொளீஇ - பொருந்தச் செய்து. சினைக்கயல் - சிறிய மீன்களை. பாணன் மீன் பிடித்தல் : **குறுந்**. 169 : 4. பிரிந்தும் வாழ்துமோ - பிரிந்திருந்தும் உயிருடன் வாழ்வோமோ? அதினும் உயிர்நீங்குதல் நலம் என்றபடி; **நற்**. 129 : 1-2; **குறுந்**. 32 : 6, 57 : 3-4; **கலி**. 2 : 13; **அகநா**. 339 : 11 - 4. முயறல் ஆற்ருதேம் - முயலாதேம். ஆற்ருதேம் நாம் பிரிந்தும் வாழ்துமோ. பாணன் நாளிரை கொளீஇக் கயல் மாய்க்கும் என்றது தலைவன் களவுப் புணர்ச்சியில் தான் மிக்க மகிழ்ச்சி கொண்டு வரையாது நம்மைத் துன்புறுத்துகிருன் என்றபடி.

**(பி - ம்.)** [1] 'ஞணிரைக்' (க)

112. அம்ம வாழி தோழி பாசிலைச்
செருந்தி தாய விருங்கழிச் சேர்ப்பன்
தான்வரக் காண்குவ நாமே
[1] மறந்தோ மன்ற நாணுடை நெஞ்சே.

**எ - து** களவுநீடுவழி வரையலன்கொலென்று அஞ்சிய தோழிக்குத் தலைமகன் வரையுந்திறம் தெளிக்கத் தெளிந்த தலைமகள் சொல்லியது.

**குறிப்பு.** செருந்தி : ஒரு வகை மரம்; இது நெய்தல் நிலத்திற்குரியது; **சிறுபாண்.** 147; பாசிலைச் செருந்தி : **அகநா.** 150 : 9, 280 : 1. தாய = தாவிய - பரந்த. சேர்ப்பன் : நெய்தல்நிலத் தலைவன். வர - நம்மை வரைய வர. நாமே மறந்தோம் என்றது நாம் மறந்தோம், அவன் மறவா னென்றபடி. மன்ற : தெளிவுப் பொருளை உணர்த்துவதோர் இடைச் சொல் (**தொல்.** இடை. 17, **ந.**); **ஐங்.** 116 : 3; 119 : 3.

**(பி - ம்.)** [1] 'மறந்தோன் மன்ற' (௨)

113. அம்ம வாழி தோழி நென்னல்
ஓங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற்
கூரார் பெண்டென [1]மொழிய வென்னை
அதுகேட் [2] டன்னா யென்றன ளன்னை
[3]பைபய வெம்மை யென்றனென் யானே.

**எ - து** வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்து நின்று கேட்ப நெருநல் இல்லத்து நிகழ்ந்தது இதுவெனத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**குறிப்பு.** நென்னல் - நேற்று. ஊரார் துறைவற்குப் பெண்டென என்னை மொழிய அது கேட்டு அன்னை 'அன்னாய்' என்றனள். ஊரார் துறைவற்குப் பெண்டென மொழிதல் : **குறுந்.** 51 : 6. அன்னை - செவிலித் தாய். பைபய : **ஐங்.** 83, குறிப்பு. யானே எம்மை என்றனென்; எம்மை யென்றது தோழியையும் உளப்படுத்தி.

**(மேற்.)** அடி, 3. "ஈண்டு 'பெண்டென் கிளவி' என்றே பாடம் கொளல் வேண்டும்; 'ஊரார் பெண்டென மொழிய' எனச் சான்றோர் கூறலின்" (**தொல்.** பெயர். 9, **ந.**) பெண்டென்றதனைக் கேட்டு 'அன்னா யென்றனள் அன்னை' என அலர்தூற்றினமை கண்டு செவிலி கூறிய கூற்றினைத் தலைவி கொண்டு கூறியவாறு (**தொல்.** களவு. 24, **ந.**)

**(பி - ம்.)** [1] 'மொழிப' [2] 'டன்னை' [3] 'பைபைய', 'பைய வெம்மை' (௩)

114. அம்ம வாழி தோழி [1]கொண்கன்
[2]நேரே மாயினுஞ் செல்குவங் கொல்லோ
கடலி [3]னாரை யிரற்றும்
மடலம்[4]பெண்ணையவ னுடைய நாட்டே.

**எ - து** இடைவிட்டொழுகும் தலைமகன்வந்து சிறைப்புறத்தானானமை யறிந்த தலைமகள் அவன் கேட்குமாற்றால் தோழிக்குச் சொல்லியது.

**குறிப்பு.** கொண்கன் - கொண்கனை. நேரேம் - காணப்பெறேம்; எதிர்ப் படேம். இரற்றும் - ஒலிக்கும்; ஐங். 152 : 3. மடலம் பெண்ணை - மடல் களையுடைய பனை. நாரையும் பனைமடலும் : அகநா : 40 : 14-6. அவனுடைய நாட்டிற்குச் செல்குவங்கொல்லோ.

**(பி - ம்.)** [1] 'கொண்கனை' [2] 'நேரேனாயினுஞ்' [3] 'னுரைவிரற்றும்' [4] 'பெண்ணையவருடை' (ச)

115. அம்ம வாழி தோழி பன்மாண்
நுண்மண லடைகரை நம்மோ டாடிய
தண்ணந் துறைவன் [1]மறைஇ
அன்னை யருங்கடி [2]வந்துநின் றோனே.

**எ - து** இற்செறிப்புண்ட பின்னும் வரைந்துகொள்ள நினையாது தலை மகன் வந்தானாக அதனையறிந்த தலைமகள் அவன்கேட்குமாற்றால் தோழிக் குச் சொல்லியது.

**குறிப்பு.** பன்மாண் - பலமுறை. நுண்மணல் - நுண்ணியமணல். ஆடிய - விளையாடிய. மறைஇ - மறைந்து. அன்னையருங்கடி - அன்னை யினது அரிய காவலிலும்.

**(மேற்.)** மு. பெற்றவழிமலியின் தலைவிக்குக் கூற்று நிகழும் (**தொல்.** களவு. 21, **இளம்.,** ஷை. ஷை. 20, **ந.**)

**(பி - ம்.)** [1] 'மரீஇ' [2] 'வந்துநின் றனே' (ரு)

116. அம்ம வாழி தோழி நாமழ
நீல விருங்கழி நீலங் கூம்பும்
மாலைவந் தன்று மன்ற
காலை யன்ன காலைமுந் துறுத்தே.

**எ - து** எற்பாட்டின்கண் தலைமகன் சிறைப்புறத்து நின்றுகேட்பத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**குறிப்பு.** காலையன்ன காலை - யமனைப்போன்ற தென்றற் காற்றை; கால் - யமன். முந்துறுத்து - முன்னிட்டு. நாமழ, காலை முந்துறுத்து மாலை வந்தன்று. (சு)

117. அம்ம வாழி தோழி நலனே
இன்ன தாகுதல் கொடிதே புன்னை
அணிமலர் துறைதொறும் வரிக்கும்
மணிநீர்ச் சேர்ப்பனை மறவா தீமே.

**எ - து** வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலை மகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. நலன் - அழகு. இன்னதாகுதல் - பிறர் அலர் தூற்றும் குறைபாட்டையுடைய இத்தகையதாதல்; பசலையாயிற்று என்றபடி; குறுந். 109 : 4. வரிக்கும் - ஒழுங்குபட உதிர்க்கும். மறவாதீமே - மறவாதே; மே : அசைநிலை.

(மேற்.) மு. காமமிக்கவழி தலைவி கூறல் (தொல். களவு. 21, இளம்.) (எ)

118. அம்ம வாழி தோழி யானின்
றறனி லாளற் கண்ட பொழுதிற்
சினவுவென் றகைக்குவென் [1]சென்றனென்
பின்னிலைந் திரங்கிப் பெயர்தந் தேனே.

எ - து சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தோழி வாயில் மறுத்த தலைமகள், பின்பு தலைமகன் வந்துழி நிகழ்ந்ததனை அவட்குக் கூறியதூஉமாம்.

குறிப்பு. அறனிலாளன் - தலைவனை. சினவுவென் - சினங்கொள்வேன். தகைக்குவென் - தடுப்பேனென்று. பின் நினைந்து - பின் நிகழ்வனவற்றை நினைந்து. பெயர்தந்தேன் - பெயர்ந்தேன்.

தோழிவாயில் - தோழியாகிய தூது. (பி - ம்.) [1] 'சென்றனன்' (அ)

119. அம்ம வாழி தோழி நன்றும்
எய்யா மையி [1]னேதில பற்றி
அன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே.

எ - து 'வரைதற்கு வேண்டுவன முயல்வேம்' எனச்சொல்லி வரையாது செலுத்துகின்ற தலைமகன் சிறைப்புறத்தானமையறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. நன்றும் - நன்மை பயப்பனவற்றையும். எய்யாமையின் - அறியாமையால். ஏதில - அயலாக உள்ளவைகளை. மென்புலம் - நெய்தல் நிலம்; ஐங். 138 : 3; புறநா. 42 : 18. வாராதோனுதலால் ஏதில பற்றிப் பெரிதும் அன்பிலன், மன்ற. செலுத்துகின்ற - காலத்தைக் கழிக்கின்ற.

(பி - ம்.) [1] 'னேதில பெற்றி', னேதிலர்ப் பற்றி', 'னேதில் பற்றி' (கூ)

120. அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின வளியமென் [1] றோளே
மல்ல [2]லிருங்கழி நீரறல் விரியும்
மெல்லம் புலம்பன் வந்த மாறே.

எ - து வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வந்து சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. நலம் - அழகு. அளிய - அளிக்கத்தக்கன. மல்லல் - வளம் பெற்ற. அறல் - கரு மணல். மெல்லம் புலம்பன் - மெல்லிய கடற்கரையையுடைய தலைவன்; ஐங். 190 : 3, 302 : 4; நற். 195 : 4; குறுந். 5 : 4, 245 :

5 ; அகநா. 10 : 4. மாறு : ஏதுப்பொருள் படுவதோரிடைச் சொல்; புறநா. 4 : 17, உரை. புலம்பன் வந்தமாறே மென்தோள் அளிய. தலைவன் வரத் தோள் நலமெய்தல் : " மணப்பின் மாணல மெய்தித், தணப்பின் ஞெகிழ்ப தடமென் றோளே " (குறுந். 299 : 7-8.)

(மேற்.) அடி, 4. 'தெள்ளம்புனல் : மெல்லம்புலம்பு போல்வதோர் பண்புத் தொகை' (சிற். 379, உரை.) மு. பெற்றவழி மலியின் தலைவிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 21, இளம்.) தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்ற ஞான்று புதுவது மலியின் அவளுக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 20, ந.)

(பி - ம்.) [1] 'றோள்கள்' [2] 'விருங்கழி மலரும்', 'விருங்கழி மல்கும்' (க0)

## (கஉ) தோழிக்குரைத்த பத்து முற்றிற்று.

# (கங) கிழவற்குரைத்த பத்து

121. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
முண்டகக் கோதை நனையத்
தெண்டிரைப் பெளவம் பாய்ந்துநின் றோளே.

எ - து பரத்தை தலைமகற்குச் சொல்லியது; பெதும்பைப் பருவத்தாள் ஒருபரத்தையோடு கூடி மறைந்து ஒழுகாநின்றானென்பதறிந்து தலைவி புலந்துழி, 'இத் தவறு என்மாட்டில்லை; நீ இப்புலவியை [1] நீக்கவேண்டும்' என்று தோழிக்குத் தலைமகன்கூறப் புலவியை நீக்கக் கருதிய தோழி அவள் இளமை கூறி நகையாடிச் சொல்லியதூஉமாம்.

இனி வருகின்றபாட்டு ஒன்பதிற்கும் இத்துறையாம்.

குறிப்பு. கண்டிகு மல்லமோ - கண்டே மல்லமோ. கொண்க : விளி. கேள் - உறவாக உள்ளாள் ; மனைவி. முண்டகக் கோதை - கடல் முள்ளிப் பூவாற் செய்யப்பட்ட மாலை ; நற். 245 : 2-3 ; புறநா. 24 : 11. பெளவம் - கடல். நின்றோளாகிய நின்கேளைக் கண்டிகுமல்லமோ.

அவளிளமை - பெதும்பைப் பருவப் பரத்தையின் இளமை.

(மேற்.) அடி, 1. 'இகும் என்னும் இடைச்சொல் தன்மைக் கண்ணும் வரும்' (தொல். இடை. 27, இளம். ந. சே.) ; நன். 440, மயிலை. 441, சங்.

(பி - ம்.) [1] 'நீக்கவேணுமென்று' (க)

122. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே.

குறிப்பு. ஒள்ளிழை - ஒளி பொருந்திய ஆபரணம். வீழ்ந்தென - வீழ்ந்ததாக. வெள்ளாங்குருகு - ஒருவகைப் பறவை ; ஐங். 151-60 ; நற். 70 : 1. வினவுவோளாகிய நின் கேளைக் கண்டிகுமல்லமோ. இதனால் அவளது இளமை கூறிப் பழித்தாள்.

(மேற்.) மு. காமக்கிழத்தி நலத்தினைப் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின்கண் தலைவிக்குக் கூற்று நிகழும் (தொல். கற்பு. 6, இளம்.) தலைவி மற்றொருத்தி குணம் இத்தன்மையள் எனச் சொல்லித் தலைமகனது குறிப்பினை யறிதற்கு முரியள் (தொல். பொருள். 38, இளம்.) திணைமயக்குறு தலுள் இப்பத்தும் (ஐங். 121-30) நெய்தற்கண் மருதம்; இவை பெதும் பைப் பருவத்தாள் ஒரு தலைவியொடு வேட்கை நிகழ்ந்தமையைத் தலைவி கூறித் தலைவன் குறிப்புணர்ந்தது (தொல். அகத். 12, ந.) தலைவன் வரையக் கருதினுளோர் தலைவியை இனையளெனக்கூறி அவள்மாட்டு இவன் எத் தன்மையனென்று விதுப்புற்றுக் கூறியது; இது தலைவன் கூறவுணராது தான் வேறொன்றுகூறி அவன்குறிப்பு அறியக் கருதுதலின் வழுவாயமைந் தது (தொல். பொருள். 40, ந.) உரிப்பொருள் திணைமயங்கி வந்தது (நம்பி. ஒழிபு. 42.) பெதும்பைப் பருவத்தாளோர் தலைவியொடு வேட்கை நிகழ்ந்தமையைத் தலைவி கூறித் தலைவன் குறிப்புணர்ந்தது; இதில் நெய்தற் றிணையொடு உரிப்பொருள் மயங்கி வந்தது (இ - வி. 394.) (உ)

123. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒண்ணுத லாய மார்ப்பத்
தண்ணென் பெருங்கடற் றிரைபாய் வோளே.

குறிப்பு. ஆயம் - பாங்கியர். கடற்றிரையினுள் பாய்வோளாகிய நின் கேளைக் கண்டிகுமல்லமோ. (௩)

124. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
வண்டற் பாவை வௌவலின்
[1]நுண்பொடி யளைஇக் கடறூர்ப் போளே.

குறிப்பு. வண்டற்பாவை - விளையாட்டிற்குரிய பாவை; நற். 191 : 3. வௌவலின் - கைக்கொள்ளலின். பாவையைக் கடல் வௌவல் : ஐங். 125. நுண்பொடி - நுண்ணிய மணலை. அளைஇ - கலந்து. கடலைத் தூர்ப்போள். மணலால் கடலைத் தூர்த்தல் : "மணல்முகந்து......கடறூர்க்கும்" (சிலப். 7 : 30.) (பி - ம்.) [1] 'நுணபொவடியவள கடல்' (௪)

125. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
[1]தெண்டிரை பாவை வௌவ
உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே.

குறிப்பு. திரை - அலை. மணற்பாவையை வௌவ. உண்கண் - மை யுண்ட கண். (பி - ம்.) [1] 'தெண்டிதிரைப் பாவை' (௫)

126. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
உண்கண் வண்டின மொய்ப்பத்
தெண்கடற் பெருந்திரை மூழ்கு வோளே.

குறிப்பு. கண்களை வண்டினம் மொய்த்தன; தாமரை மலர் என்று கருதலின். (௬)

127. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
தும்பை மாலை யிளமுலை
நுண்பூ ணாகம் விலங்கு வோளே.

**குறிப்பு.** தும்பை மாலை : இதை இளமகளிரே யணிவர். ஆகம் - மார்பு. விலங்குவோள் - குறுக்கிட்டுக் கிடப்போள். தும்பை மாலையாலும் நுண் பூணாலும் விலங்குவோள். (எ)

128. கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
[1]உறுஅ வறுமுலை மடாஅ
உண்ணுப் [2]பாவையை யூட்டு வோளே.

**குறிப்பு.** உறு - தொடுதற்குத் தகுதியில்லாத. மடாஅ - மடுத்து. உண்ணுப் பாவை என்றது மண்ணாற் செய்த பாவையை. உண்ணுப் பாவையை முலையூட்டுவோள்.

**(மேற்.)** மு. திணை மயக்குறுதலுள் நெய்தற்கண் மருதம் (தொல். அகத். 12, ந.)

**(பி - ம்.)** [1] 'ஊறு வறுமுலை மடூஉ' [2] 'பாவை யூட்டு' (அ)

129. ..................
..................
.................. (கூ)

130. ..................
..................
.................. (கo)

(கரு) கிழவற்குரைத்த பத்து முற்றிற்று.

## (கச) பாணற்குரைத்த பத்து

131. நன்றே பாண கொண்கனது நட்பே
தில்லை வேலி யிவ்வூர்க்
கல்லென் கௌவை யெழாஅக் காலே.

**எ - து** வாயில்வேண்டிவந்த பாணன் தலைமகன் காதன்மை கூறின னாகத் தலைமகள் [1]வாயில்மறுப்பாள் அவற்குக் கூறியது.

**குறிப்பு.** தில்லை - ஒருவகை மரம்; **கலி.** 133 : 1; **திணைமாலை.** 61. கௌவை - பழிச்சொல். கல்லென் கௌவை : **குறுந்.** 24 : 6, 262 : 1. எழாஅக்கால் நட்பு நன்று. **(பி - ம்.)** [1] 'வாயில் மறுப்பாள் கூறியது'. (க)

132. அம்ம வாழி பாண புன்னை
அரும்புமலி கான லிவ்வூர்
அலரா கின்றவ ரருளு மாறே.

ஏ - து வாயில்வேண்டிவந்த பாணன், 'நீர் கொடுமை கூறவேண்டா; நும்மேல் அருளுடையர்' என்றாற்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. அரும்பு - மொட்டு. அவர் அருளுமாறு அலராகின்று; அலராகின்று - அலர் எழலாயிற்று; குறுந். 258 : 2; அகநா. 96 : 18. (௨)

133. யானெவன் செய்கோ பாண வானுது
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
புல்லென் றன [1]வென் புரிவளைத் தோளே.

ஏ - து வாயிலாய்ப் புகுந்த பாணன், தலைமகள் தோள்மெலிவு கண்டு 'மனைப்புறத்துப் போய்வந்ததுணையானே இவ்வாறு [2]வேறுபடுதல் தகாது' என்றாற்கு அவள் சொல்லியது.

குறிப்பு. ஆனது-அமையாது. மெல்லம் புலம்பன் : ஐங். 120 : 4, குறிப்பு. பிரிந்தென - பிரிய. புல்லென்றன - பொலிவழிந்தன. புரிவளைத்தோள் - முறுக்குண்ட சங்குகளாலான வளையையுடைய தோள். தோள் புல்லென்று. தோள் பொலிவழிதல் : ஐங். 39 : 3, குறிப்பு.

மனைப்புறத்துத் தலைவன் போய்வந்த துணையானே.

(மேற்.) மு. இது நெய்தற்கண் மருதம்; தலைவன் புறத்துப்போன அத் துணைக்கு ஆற்றுயாகுதல் தகாதென்ற பாணற்குத் தலைவி கூறியது (தொல். அகத். 12, ந.) (பி - ம்.) [1] 'வெம்புரிவளைத்' [2] 'வேறுபடுதற்காகாது' (௩)

134. காண்மதி பாண விருங்கழிப் [1]பாய்பரி
நெடுந்தேர்க் கொண்க னோடு
தான்வந் தன்றென் மாமைக் கவினே.

ஏ - து பிரிவின்கண் தலைமகள் கவின் தொலைவு கண்டு வெறுத்து ஒழுகுகின்ற பாணற்குத் தலைமகன் வந்துழிக் கவினெய்திய தலைமகள் சொல்லியது.

குறிப்பு. இருங்கழியையும் பாய்பரியையும் தேரையுமுடைய கொண்கன். மாமைக்கவின் - மாமையாகிய பேரழகு. கொண்கனொடு மாமைக் கவின் வந்தன்று.

வெறுத்து - தலைமகளை வெறுத்து. (பி - ம்.) [1] 'பாய்பணி' (௪)

135. பைதல மல்லேம் பாண பணைத்தோள்
ஐதமைந் தகன்ற வல்குல்
நெய்தலங் கண்ணியை நேர்தனும் பெறினே.

ஏ - து பரத்தையொருத்தியைத் தலைப்பெய்வான்வேண்டி அதனைத் தலைமகன் மறைத்தொழுகுகின்றதறிந்த தலைமகள் அவன் கேட்குமாற்றால் பாணற்குச் சொல்லியது.

குறிப்பு. பைதலம் அல்லேம் - துன்பமுடையவராகமாட்டோம். ஐது அமைந்து-மெல்லிதாகப் பொருந்தி. நெய்தலங்கண்ணி என்றது பரத்தையை. நெய்தற்பூவை உவமித்ததால் பரத்தையின் இழிவு கூறப்பட்டது; ஐங். 2 : 4, உரை. நேர்தல் - ஒத்தல். பெறின் பைதலமல்லேம். (ரு)

136. நாணிலை மன்ற பாண நீயே
கோணே ரிலங்குவளை நெகிழ்த்த
கானலந் துறைவற்குச் சொல்லுகுப் போயே.

எ - து வாயிலாய்ப் [1]புகுந்து தலைமகன்குணங்கூறிய பாணற்கு வாயில் மறுக்கும் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. கோணேர் இலங்கு வளை-கோணுதலமைந்த அழகிய வளைகள். நெகிழ்த்த - நெகிழச்செய்த. வளைநெகிழ்த்த துறைவன் : குறுந். 11 : 1. துறைவற்கு - துறைவன்பொருட்டு. சொல் உகுப்போயே - பயன்படு சொற்களைப் பாழ்படுத்துகின்றனையே ; கலி. 69 : 19. சொல்லுகுப்போயே, நாணிலை, மன்ற. (பி - ம்.) [1] 'புகுந்த' (சா)

137. நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்
திண்டேர்க் கொண்கனை நயந்தோர்
பண்டைத் தந்நலம் பெறுபவோ மற்றே.

எ - து தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்து நீங்கினவிடத்தும் அவன் முன்புசெய்த தீங்கு நினைந்து தலைமகள் வேறுபட்டிருந்தாளாக, 'இனி இந்த வேறுபாடு என்?' என்றுவினவிய பாணற்கு அவள் சொல்லியது.

(ப - ரை.) திண்டேர்க் கொண்கனை நயந்தோர் நும்மூரிற் பண்டைத் தம் நலம் பெறுவார் உளரோவெனக்கூட்டுக.

குறிப்பு. நின்னை ஒன்று வினவுவல். நயந்தோர் - விரும்பின மகளிர். பண்டைத் தம் நலம் - பழைய தமது அழகை. பெறுபவோ - பெறுவரோ ; இல்லை என்றபடி.

இனி - தலைவன் வந்து சென்றபின்பு. (எ)

138. பண்பிலை மன்ற பாண விவ்வூர்
அன்பில கடிய கழறி
மென்புலக் கொண்கனைத் தாரா தோயே.

எ - து தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்தது அறியாது வந்த பாணற்குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது.

குறிப்பு. கடிய - கடுமையான சொற்களை. மென்புலம் - நெய்தல் நிலம். தாராதோய், பண்பிலை மன்ற. (அ)

139. அம்ம வாழி கொண்க வெம்வயின்
மாணல மருட்டு நின்னினும்
பாண னல்லோர் நலஞ்சிதைக் கும்மே.

எ - து ஆற்றாமை வாயிலாகப் புகுந்திருந்த தலைமகற்குப் பாணன் வந்துழித் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. எம்வயின் - எம்மிடத்தில். மாண் நலம் - மாட்சிபொருந்திய அழகை. மருட்டும் - கலங்கச்செய்யும். நின்னினும் - உன்னைக்காட்டிலும். நல்லோர் - மகளிரது. நலம் - அழகை. நல்லோர் என்றமையின் தலைவனையும் 'பலமகளிரையுடையை' என இகழ்ந்தவாறு. இச்செய்யுளில் பாணனை முன்னிலைப்படுத்தல் இல்லை. (கூ)

140. காண்மதி பாணநீ [1]யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தெனை
இறைகே ழெல்வளை நீங்கிய நிலையே.

எ - து பாணன் தூதாகிச் செல்லவேண்டும் குறிப்பினளாகிய தலைமகள் அவற்குத் தன்மெலிவுகாட்டிச் சொல்லியது.

குறிப்பு. உரைத்தற்கு - தலைவனிடம் கூறுதற்கு. பிரிந்தென - பிரிய. இறைகேழ் - முன்கையிற் பொருந்திய. பாண, வளை நீங்கிய நிலையைக் காண்மதி.

(மேற்.) மு. தலைவி தூதுவிடக் கூறியதற்குச் செய்யுள் (தொல். அகத். 45, இளம்.) தலைவன் பரத்தையிற் பிரிந்துழி அவன் நின் வார்த்தையே கேட்பன் என்பது தோன்றப் பாணற்குத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.) 'இப்பத்தும் நெய்தற்கண் மருதம்' (தொல். அகத். 12, ந.)
(பி - ம்.) [1] 'யுரைத்தற்கு மூரியை' (கo)

(கச) பாணற்குரைத்த பத்து முற்றிற்று.

## (கரு) ஞாழற்பத்து

141. எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
[1]பயலை செய்தன பனிபடு துறையே.

எ - து வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகின்ற தலைமகள் 'அவன் வரைதற்குப் பிரியவும் நீ ஆற்றுயாகின்றது என்னை?' என்ற தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. எக்கர் - நீர்கொண்டு வந்திட்ட மணலிலுள்ள. எக்கர்ஞாழல் : ஐங். 142-50. செருந்தி - ஒருவகை மரம். துவலை - தொகுதி. துளி - நீர்த்துளியை. பயலை - பசலையை. துறை பயலை செய்தன.

(மேற்.) மு. இது வரைவிடைவைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்குத் துறை இன்பமுடைத்தாகலான், வருத்திற்றெனத் தலைவி கூறியது; சுரத்தருமை முதலியனவன்றி நெய்தற்குள் பாலை வந்தது (தொல். அகத். 9, ந.) (பி - ம்.) [1] 'பசலை' (க)

142. எக்கர் ஞாழ லிறங்கிணர்ப் படுசினைப்
புள்ளிறை கூருந் துறைவனை
உள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.

ஏ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாக, 'நின்கண் துயிறற்பொருட்டு நீ அவனை [1]மறக்கவேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) ஞாழலில் தாழ்ந்த பூச்சினை வருந்தப் புள் வதியுமென்றது தான் வரையாது நமக்கு வரும் நோயறியாது தானே வேண்டும் இன்பமே முடிப்பான் எ - று.

குறிப்பு. இறங்கிணர்ப்படுசினை - தாழ்ந்த பூஞ்சினை. இறைகூரும் - தங்கும். உள்ளேன் - நினையேன். படீஇயர் - படுக, உறங்கட்டும்; ஐங். 450 : 4; புறநா. 202 : 14. தோழி, உள்ளேன் என்கண் படீஇயர். தலைவி துஞ்சாமை : குறுந். 6 : 4, 243 : 5. (பி - ம்.) [1] 'மறுக்க' (உ)

143. எக்கர் ஞாழற் புள்ளிமி ழகன்றுறை
இனிய [1]செய்து நின்றுபின்
முனிவு செய்தவிவ டடமென் றோளே.

ஏ - து புறத்துத் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) 'இனிய செய்து ......மென்றோள்' என்றது அக்காலத்து நினக்கு இனிமைசெய்து பின்முனிவைச் செய்தனவாதலால், இஃது இத்தோள்களின் தவறல்லது நின்தவறன்று என்பதாம்; ஞாழற்கண்ணே புள்ளிமிழகன்றுறையென்றது இவ்வூரகன்றுறையார் அலர்தூற்றுவர் என்பதாம்.

குறிப்பு. இமிழ்தல் - ஒலித்தல். துறையின்கண். இனிய செய்து - இனிமையானவற்றைச் செய்து. இவள் என்றது தலைவியை. தடமென்றோள் - பரந்த மெல்லிய தோள்; குறுந். 77 : 6. தோள் இனிய செய்து பின் முனிவு செய்த. (பி - ம்.) [1] 'செய்த நின்றுயின்' (ங)

144. எக்கர் ஞாழ லிணர்படு பொதும்பர்த்
தனிக்குரு குறங்குந் துறைவற்
கினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

ஏ - து தலைமகன் வரைந்துகோடல் நினையாது களவொழுக்கமே விரும்பி ஒழுகாநின்றானென்பது அறிந்து வேறுபட்ட தலைமகள், 'அவன் கூறியவாற்றால் இனிக் கடிதின் வரைவன்; ஆற்றாயாகாதது ஒழியவேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'எக்கர்ஞாழல் .... உறங்கும்' என்றது இனிக் காலம் வந்தவிடத்தும் வரைந்துகொண்டு ஒன்றுபட்டொழுக நினையாது தனித்துறை

தலை விரும்புவான் எ-று. இப்போது பசந்ததென்றது அவன் வரைவேனென்று கூறிய வார்த்தையை மெய்யென்று கொண்டுகூறுதலால், இப்போதுகாண் என்மாமைக்கவின் பசந்தது என்றவாறு.

குறிப்பு. இணர் - பூங்கொத்து. பொதும்பர் - சோலை. இனி - இப்பொழுது. பசந்தன்று - பசந்தது. மாமைக்கவின் - மாமையாகிய பேரழகு. மாமைக்கவின் பசந்தன்று; ஐங். 35 : 4; குறுந். 27 : 4-5. (ச)

145. எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை
ஓதம் வாங்குந் துறைவன்
மாயோள் பசலை நீக்கின னினியே.

எ - து [1]வரைவுமறுத்த தமர் உடம்படுமாற்றாற் சான்றோரைத் தலைமகன் விடுத்ததறிந்த தோழி தலைமகள் கேட்குமாற்றால் சொல்லியது.

(ப - ரை.) ஞாழற்சினையை ஓதம் வளைக்கும் துறைவனென்றது தன் வழிவாராத சுற்றத்தாரைத் தன்வழியாக்குகின்றானென்றதாம்.

குறிப்பு. சிறியிலைப் பெருஞ்சினை - சிறிய இலையையுடைய பெரிய கிளையை. ஓதம் - கடல். வாங்கும் - வளைக்கும். மாயோள் - மாமை நிறத்தினையுடையோள்; ஐங். 306 : 4, 324 : 5; கலி. 29 : 7. இனி துறைவன் மாயோளது பசலையை நீக்கினன்.

(பி - ம்.) [1] 'வரைவு மடுத்த' (ரு)

146. எக்கர் ஞாழ லரும்புமுதி ரவிழிணர்
நறிய கமழுந் [1]துறைவற்
கினிய மன்றவென் மாமைக் கவினே.

எ - து வரைவுகடாவவும் வரையாதொழுகுகின்றுழி, 'நம்மை எவ்வகை நினைத்தார் கொல்லோ' என்று ஐயுற்றிருந்த தலைமகள் வரைவுதலைவந்துழித் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'அரும்புமுதிர்...துறைவன்' என்றது அவன் அன்பு முறையால் நிரம்பி வெளிப்பட்டதிறம் கூறியவாறு.

குறிப்பு. அவிழ்இணர் - மலரும் பூங்கொத்து. நறியகமழும் - நன்மணம் வீசும். என் மாமைக்கவின் இனிய மன்ற. என் என்றது தலைவி.

(பி - ம்.) [1] 'துறைவர்க்' (சா)

147. எக்கர் ஞாழன் [1]மலரின் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலையென நல்கின னாடே.

எ - து சுற்றத்தார் வேண்டிய கொடுத்துத் தலைமகன் வரைவு மாட்சிமைப்படுத்தமையறிந்த தோழி உவந்த உள்ளத்தாளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) ஞாழல்மலர் இல்லாத மகளிர் அதன் தழையை விரும்பும் துறைவனென்றது உலகை வழங்கவேண்டும் உள்ளத்தன் அஃதின்மையால் நாட்டை வழங்கினனென்பதாம்.

குறிப்பு. மலரில் மகளிர் - மலரில்லாத மகளிர். அயரும் - விரும்பும். தழைவிலை என்றது இடக்கர்; முலைவிலை என்றாற்போல. துறைவன் தழைவிலையென நாடு நல்கினன்.

(மேற்.) மு. காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தல் (நம்பி. வரைவு. 4.) (பி - ம்.) [1] 'மலரினை மகளிர்' (எ)

148. எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழுந் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே.

எ - து களவொழுக்கத்தின் [1]விளைவறியாது அஞ்சிய வருத்தம் நீங்கக் கரணவகையான் வதுவை முடித்தபின்பு தலைமகளைப் பள்ளியிடத்து உய்க்கும் தோழி சொல்லியது.

(ப - ரை.) 'எக்கர்ஞாழல் . . . . கமழுந்துறைவன்' என்றது அவன் அன்பு இதன்மேல் இல்லையென வளர்ந்து பயன்பட்டதிறம் கூறியவாறு.

குறிப்பு. இகத்தல் - கடத்தல். சினை - கிளை. வீ - மலர். காதலோய் என்றது தலைவியை. காதலோய்! துறைவனை இனிது முயங்குமதி. மதி: முன்னிலையசை. கரணம் - மணச்சடங்கு.

(மேற்.) மு. களவுக்காலத்துப்பட்ட வருத்தம் நீங்கினமை கூறுங்கால் தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். கற்பு. 9, ந.) (பி - ம்.) [1] 'விளைவறிவது' (அ)

149. எக்கர் ஞாழற் பூவி னன்ன
சுணங்குவள ரிளமுலை மடந்தைக்
கணங்குவளர்த் தகறல் வல்லா [1]தீமோ.

எ - து வரைந்தெய்திய தலைமகன் தலைவியோடு பள்ளியிடத்திருந்துழித் தோழி வாழ்த்தியது.

குறிப்பு. பூவினன்ன - பூவைப்போன்ற. சுணங்கு வளரிளமுலை: நற். 191 : 3-4. அணங்கு - துன்பம். அகறல் - நீங்கல். வல்லாதீமோ - வல்லமையின்றியிருக்க; மோ: முன்னிலையசை.

(மேற்.) மு. தலைவனைப் பாங்கி வாழ்த்தல் (நம்பி. கற்பு. 4.)
(பி - ம்.) [1] 'தீமே' (க)

150. எக்கர் ஞாழ னறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திளைக்குந் துறைவன்
[1]புணர்வி னின்னா னரும்புணர் வினனே.

எ - து முன்னொருகாற் பிரிந்துவந்த தலைமகன் பின்னும் பிரிந்துவந்துழி அவனை முயங்காளாகத் தோழி, 'நீ இவ்வாறு செய்தற்குக் காரணம் என்?' என்று வினவியவழித் தலைமகள் தோழிக்குத் தலைமகன் கேட்பச் சொல்லியது.

(ப - ரை.) நறுமலர்ப்பெருஞ்சினை வருந்த வந்து திரை திளைக்குமென்றது ஓரிடத்தானையொழுகாது வந்தும் பெயர்ந்தும் நம்மை வருத்தமுறுத்துவான் எ - று.

குறிப்பு. ஞாழல் நறுமலர் : நற். 106 : 6-7, 267 : 4-5 ; குறுந். 318 : 2. நறுமலரையுடைய பெருஞ்சினையை. புணரி - அலை. திளைக்கும் - அசைக்கும். புணர்வின் - புணர்ச்சிக்காலத்தில். இன்னான் - துன்பத்தைச் செய்வான். அரும் புணர்வினன் - அருமையாக நம்மை வந்தடைபவன் ; பெரும்பாலும் பரத்தையரில்லத்தேயே வாழ்பவன் என்றபடி. அரும் புணர்வினன் புணர்வின் இன்னான். (பி - ம்.) [1] 'புணர்வினன்னு' (௧0)

(௧௫) ஞாழற்பத்து முற்றிற்று.

## (௧௬) வெள்ளாங்குருகுப் பத்து

151. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானுத் துறைவற்கு
(5) நெக்க நெஞ்ச நேர்கல் லேனே.

எ - து வாயில்வேண்டிய தோழிக்குத் தலைமகள் வாயின்மறுப்பாள் சொல்லியது.

(ப - ரை.) இதன்உள்ளுறை : பரத்தையொருத்தியோடு ஒழுகுகின்ற ஒழுக்கம் இடையற்றதாகச் சென்றவாயில்கள் நெருங்க அவள் நெஞ்சு நெகிழ்ந்து கூறிய காதல்மாற்றம் பரந்துசெல்கின்ற துறைவனென்பதாம். வெள்ளாங்குருகென்றது பரத்தையாகவும், பிள்ளையென்றது பரத்தையோடு தலைமகனிடை உளதாகிய ஒழுக்கமாகவும், காணிய சென்ற மடநடை நாரையென்றது வாயில்களாகவும் கொள்க. இவை வருகின்ற பாட்டு ஒன்பதுக்கும் ஒக்கும். மிதித்தது அவளை நெருங்குதலாகவும், நக்க நெய்தல் அவள்நெஞ்சாகவும், கட்கமழ்ந்து ஆனுமை அவள் அவர்க்குக் கூறிய மாற்றம் எல்லாருக்கும் புலப்படுதலாகவும் இப்பாட்டிற்குக் கொள்க.

குறிப்பு. வெள்ளாங்குருகின் பிள்ளை - வெள்ளாங்குருகு என்ற பறவையினது குஞ்சு. செத்தென - இறக்க. காணிய சென்ற - அதைக் கண்டு விசாரிக்கச் சென்ற. மிதிப்ப - மிதித்தலாலே. நக்க - மலர்ந்த. கண்போல் நெய்தல் : ஐங். 181 : 1, 188 ; 3-4 ; குறுந். 9 : 4-6. கள் - தேன்.

ஆறு - அமையாத. நெக்க - நெகிழ்ந்த. நேர்கல்லேன் - உடன்படேன்; நெஞ்சம் நேர்தல் : குறுந். 49 : 5.

**(மேற்.)** மு. வாயில் வேண்டிய தோழிக்குத் தலைவி வாயில் மறுத்தது; திணைமயக்குறுதலுள் இப்பத்தும் (151–60) நெய்தற்கண் மருதம் (**தொல்.** அகத். 12, ந.) (க)

152. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
[1]கையறு பிரற்று [2]கானலம் புலம்பந்
துறைவன் வரையு மென்ப
(5) அறவன் போலு மருளுமா ரதுவே.

எ - து தலைமகள் வாயில்மறுத்துழி 'இவன் நின்மேல் தொடர்ச்சியிற் குறைவிலன்; அருளுமுடையன்; ஆதலால், நீ இவனோடு புலத்தல் தகாது' என நெருங்கி வாயில்நேர்விக்கும் தோழிக்கு அவள் சொல்லியது.

(ப - ரை.) 'துறைவன் வரையும்......அதுவே' என்றது அப்பரத்தை யைத் தனக்கு இற்பரத்தையாக வரைவானென்று கூறுகின்றாராதலின், நீ கூறுகின்றபடியே, 'அறமுடையன்போலும், அருளும் அதுவே' என இகழ்ந்து கூறியவாறு. 'கையறு பிரற்று கானலம் புலம்பந் துறைவன்' என்றது பரத்தையிடத்துச் சென்ற வாயில்கள் கூற்றேயாய்ப் பிறிதுமாற்ற மின்றிச் செல்கின்ற துறைவன் எ - று.

குறிப்பு. கையறுபு - செயலற்று. இரற்றும் - ஒலிக்கும்; ஐங். 114 : 3. புலம்பு - கடற்கரை. அறவன் - புண்ணியமுடையான்; ஐங். 212 : 3. அருளுமாரதுவே - அருளும் அதுவே; மார் : அசைநிலை.

(பி - ம்.) [1] 'கையற பிரற்றக்' [2] 'கானல் புலம்புந்' (உ)

153. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
உளர வொழிந்த தூவி [1]குலவுமணற்
போர்விற் பெறூஉந் துறைவன் கேண்மை
(5) நன்னெடுங் கூந்த [2]னாடுமோ மற்றே.

எ - து பரத்தையிற்பிரிந்து வாயில் வேண்டிய தலைமகன் கேட்குமாற் றால் வாயிலாய்ப் புகுந்தாற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) 'உளரவொழிந்த......துறைவன்' என்றது இவன் கூறி விட்ட வாயில்கள் மாற்றம் பரத்தைபெறும் துறைவன் எ - று.

குறிப்பு. உளர - வகிர. ஒழிந்த - உடலினின்றும் நீங்கிய. நாரையி னது தூவி; ஐங். 156 : 3. மணற்போர்வு - மணற்குவியல். பெறூஉம் - பெறுகின்ற. துறைவனது கேண்மையை. நன்னெடுங் கூந்தல் என்றது தலைவியை. நாடுமோ; நாடாள் என்றபடி.

(பி - ம்.) [1] 'குவவுமணற்' [2] 'னுணுமோ' (ந)

154. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானற் சேக்குந் துறைவனோ
டியானெவன் செய்கோ பொய்க்குமிவ் வூரே.

எ - து தோழி வாயில்வேண்டி நெருங்கியவழி வாயில் மறுக்கும் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) 'துறைவனோடு யானெவன்செய்கோ' என்றது, 'அவனோடு யான் ஒழுகுமொழுக்கம் என்?' என்று வெறுத்துக் கூறியவாறு. 'பொய்க்குமிவ்வூர்' என்றது தலைமகன் குணங்கூறுகின்ற தோழியை நோக்கியெனக்கொள்க. 'நாரை கானற்சேக்கும்' என்றது வாயிலாய்ச் சென்றார் அவண்மாட்டுத் தங்குதல் நோக்கியெனக்கொள்க.

குறிப்பு. கானற்சேக்கும் - கானலில் தங்கும். யான் எவன் செய்கு - நான் என்ன செய்வேன்; என்றது வெறுப்புக் குறிப்பு; ஓ: அசைநிலை; குறுந். 25 : 2, 96 : 2. பொய்க்கும் என்றது தோழி தலைவனது குணம் கூறுதலை. (ச)

155. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
[1] பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய
ஓதமொடு பெயருந் துறைவற்குப்
(5) [2] பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே.

எ - து [3]பலவழியானும் வாயில்நேராளாகிய தலைமகள், 'மகப்பேற்றிற்கு உரித்தாகிய காலங்கழிய ஒழுகுகின்றாய்' என நெருங்கிய தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'பதைப்ப......துறைவன்' என்றது வாயில்கள் கூறப் பரத்தையெய்திய [4]இரக்கத்தினைத் தன் தண்ணளியால் தீர்ப்பான் எ - று.

குறிப்பு. பதைப்ப - அசைய; ஐங். 156 : 3. ததைதல் - நெருங்குதல். ஓதமொடு - நீரோடு. பைஞ்சாய்ப் பாவை - தண்டாங் கோரையைக் கிழித்துச் செய்த பாவை; ஐங். 383 : 5; "பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தினைத்தற்கோ" (கலி. 76; 7, ந.) ஈன்றனென் - பெற்றேன். யான் ஈன்றனென்.

(மேற்.) மு. பல்லாற்றானும் வாயில் நேராத தலைவியை மகப்பேற்றிற்கு உரிய காலங்கழிய ஒழுகாநின்றாய் என நெருங்கிய தோழிக்கு யான் களவின்கண் மகப் பெற்றேனெனக் காய்ந்து கூறியது (தொல். கற்பு. 6, ந.)

(பி - ம்.) [1] 'பறைப்பத்' [2] 'பஞ்சாய்க் கோதை' [3] 'பலபடி யானும்' [4] 'விரகத்தினை' (ரு)

156. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி
தெண்கழிப் [1]பரக்குந் துறைவன்
(5) எனக்கோ காதல னனைக்கோ வேறே.

**எ - து** பரத்தையிடத்து வாயில்விட்டு ஒழுகுகின்ற [2]தலைமகனது வாயிலாய் வந்தார்க்குத் தோழி வாயில்மறுத்தது.

**(ப - ரை.)** 'எனக்கோ காதலன் அனைக்கோ வேறே' என்றது, 'இவள் மேல் அவன் காதலன்' என்று நீயிர் கூறுகின்ற மாற்றம் மெய்யென்பது எனக்குமொக்கும்; இவள் மனத்திற்கு ஒவ்வாதென்பதாம். அன்னையென்றது தலைமகளை. 'செம்மறுத் தூவி தெண்கழிப் பரக்கும் துறைவன்' என்றது அப்பரத்தைக்குக் கூறிவிட்ட மாற்றம் எவ்விடத்தும் பரந்து செல்கின்ற துறைவன் எ - று.

**குறிப்பு.** ஒழிந்த - நீங்கிய. செம்மறுத்தூவி - செந் நிறத்தையுடைய தூவி; "கவிரிதழன்ன தூவி" (குறுந். 103 : 2); கலி. 126 : 1-5, ந.; ஐந். எழு. 68. தெண்கழிப் பரக்கும் - தெளிந்த கழியில் பரக்கின்ற. எனக்கு என்றது தோழி. காதலன் - தலைவியினிடத்து அன்பையுடையவன். அனைக்கோ வேறு - தலைவிக்கோவெனில் காதலனில்லை; தலைவி அவனை அன்புடையனாகக் கருதவில்லை யென்றபடி.

**(பி - ம்.)** [1] 'பரிக்குந்' [2] 'தலைமகற்கு' (சு)

157. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
காலை யிருந்து மாலைச் சேக்கும்
தெண்கடற் சேர்ப்பனொடு வாரான்
(5) தான்வந் தனனெங் காத லோனே.

**எ - து** பரத்தையிற்பிரிந்து வாயில்வேண்டி ஒழுகுகின்ற தலைமகன் புதல்வன் வாயிலாக வருமெனக்கேட்டு அஞ்சிய தலைமகள் புதல்வன் விளையாடித் தனித்துவந்துழிச் சொல்லியது.

**(ப - ரை.)** 'காதலன்' என்றது என்மேல் என்புதல்வன் காதலன் என்பதறிந்தேன்; அவனோடு வாராது தனித்துவருதலான் எ - று. 'நாரை காலையிருந்து மாலைச்சேக்கும் துறைவன்' என்றது பரத்தையிடத்துவிட்ட வாயில்கள் செவ்விபெறாது பகலெல்லாமிருந்து இரவின்கண்ணும் அங்கே துயில்கின்றாரென்பதாம்.

**குறிப்பு.** மாலைச் சேக்கும் - மாலை நேரத்திலும் தங்குகின்ற. சேர்ப்பன்: நெய்தல்நிலத் தலைவன். எம் என்றது தலைவி. காதலோன் - புதல்வன். காதலன் சேர்ப்பனொடு வாராமல் தானாகவே தனிமையாக வந்தனன்; இனிப் புதல்வன் வாயிலாகத் தலைவன் வரவியலாது என மகிழ்ந்தபடி.

(மேற்.) மு. வாயில் வேண்டி ஒழுகுகின்றான் புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ்சிய தலைவி அவன் விளையாடித் தனித்து வந்துழிக் கூறியது (தொல். கற்பு. 6, ந.) (எ)

158. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
கானலம் பெருந்துறைத் துணையொடு கொட்கும்
தண்ணந் துறைவன் கண்டிகும்
அம்மா [1]மேனியெந் தோழியது துயரே.

எ - து பரத்தை புலந்துழிப் புலவி நீக்குவானாய் அஃது இடமாகவந்தமை அறிந்ததோழி தலைமகற்கு வாயில்மறுத்தது.

(ப - ரை.) 'கண்டிகுமம்மாமேனி யெந்தோழியது துயரே' என்றது எம்மிடத்துத் துயரமில்லை; எந்தோழியாகிய பரத்தைத் தலைவி துயரங்கண்டேம்; நீ கடிதிற்சென்று அவள் வருத்தம் தீர்ப்பாயாக எ - று. 'நாரை ............கொட்கும்' என்றது நினக்கு வாயிலாகச்சென்றார் அவள் கருத்தறிந்து மகிழ்ந்து ஒழுகுகின்றாரென்பதாம்.

குறிப்பு. பெருந்துறைக் கண்ணே. துணையொடு - பெடை நாரையொடு. கொட்கும் - சுழன்று அலைகின்ற. கண்டிகும் - கண்டோம். எம் தோழி என்றது பரத்தையை. எம் தோழியது துயரைக் கண்டிகும்.

(மேற்.) அடி, 4. தண்ணந் துறைவனென்பது விரிக்கும் வழி விரித்தல் (தொல். எச்ச. 7, இளம். சே.)

(பி - ம்.) [1] 'மேனியென் றோழியது' (அ)

159. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப
நின்னொன் றிரக்குவெ னல்லேன்
தந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே.

எ - து மருமற்பொருட்டு உண்டிக்காலத்து வாயில்வேண்டிவந்த தலைமகற்குத் தோழிகூறியது.

(ப - ரை.) நீ கொண்ட இவள் நலன் தந்தனை செல்லெனக் கூட்டுக. 'நாரை......சேர்ப்ப' என்றது வாயிலாய் நின்பரத்தை மனைக்கட் சென்றோர் நின்னைப்பார்த்திருந்து பசிப்பர்கள்; அவருடன் அருந்தக் கடிதின் அவள்மனைக்கண் செல்வாயென்பதாம். (கூ)

குறிப்பு. பசி தின - பசி அறிவை வருத்த; ஐங். 305 : 2. அல்கும் - தங்கும். இரக்குவென் அல்லேன் - இரப்பேனில்லை. தந்தனை சென்மோ - தந்து செல்வாயாக. இவள் நலனே - இத்தலைவியது அழகை. நீ கொண்ட இவள் நலனைத் தந்தனை சென்மோ என இரக்குவெனல்லேன். நலத்தைத் தாவென்

றல் : நற். 395 : 9-10 ; குறுந். 236 : 2-6 ; கலி. 128 : 10-11 ; அகநா. 376 : 18 ; ஐந். எழு. 64, 66.

உண்டிக் காலத்து மறுமற்பொருட்டு விருந்துடன் வந்தமையால். (௯)

160. வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
நொந்ததன் றலையு நோய்மிகுந் துறைவ
பண்டையின் மிகப்பெரி தினைஇ
முயங்குமதி பெரும மயங்கினள் பெரிதே.

எ - து ¹புலந்த காதற்பரத்தை புலவி தீராது தலைமகன் வாயில் வேண்டி வந்தானென்றது அறிந்த தலைமகள் வாயில் மறுத்தது.

(ப - ரை.) 'பண்டையின்' என்றது பண்டும் நீ புலவிதீர்த்து முயங்கும் இயல்புடையை எ - று. 'நாரை . . . துறைவ' என்றது நின் ஆற்றாமைக்குப் பரிந்து வாயிலாய்ச் சென்றவர்கள் அவள் வருத்தங்கண்டு மிகவும் வருந்துகின்றார்களென்பதாம்.

குறிப்பு. நொந்ததன் தலையும் - நொந்ததன்மேலும். பண்டையின் - முன்னினும். இனைஇ - வருந்தி. முயங்குமதி - முயங்குவாயாக. பெரிது மயங்கினள், பண்டையின் இனைஇ முயங்குமதி. (பி - ம்.) ¹ 'புலர்ந்த' (௧0)

(௧௬) வெள்ளாங்குருகுப்பத்து முற்றிற்று.

## (௧௭) சிறுவெண்காக்கைப் பத்து

161. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்
¹பயந்துநுத லழியச் சாஅய்
நயந்த நெஞ்ச நோய்ப்பா லஃதே.

எ - து ஒருவழித் தணந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் ஆற்றாளாய்ச் சொல்லியது.

(ப - ரை.) 'சிறுவெண்காக்கை ...... தங்கும்' என்றது வரைதற்கு வேண்டுவன முயலாது தன்மனைக்கண்ணே தங்குவான் எ - று.

குறிப்பு. கரையது - கரையிலுள்ளதான. சிறுவெண்காக்கை : நற். 31 : 2 ; குறுந். 334 : 1. குறுந். 246 : 1, 313 : 1. கருங்கோட்டுப் புன்னை - கரிய கிளைகளையுடைய புன்னை மரம் ; நற். 67 : 5 ; குறுந். 123 : 3. பயந்து - பசந்து. நுதலழிய - நெற்றியினது அழகுஅழிய. சாஅய் - மெலிந்து. நயந்த - விரும்பிய. நோய்ப்பாலஃது - நோயின் பகுதியது. (பி - ம்.) ¹ 'பசந்து' (௧)

162. பெருங்கடற்[1] கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும்
துறைவன் சொல்லோ பிறவா யினவே.

**இதுவுமது.**

**(ப - ரை.)** 'துறைவன் சொல்லோ பிறவாயின' என்றது, 'இன்ன நாளுள் வரைவல்' என்ற சொற்கள் வேறாயின எ - று. 'சிறுவெண் காக்கை.........சேக்கும்' என்றது வரைவிற்கு வேண்டுவன முயலாது தன் கருமஞ்செய்து மனைக்கண்ணே தங்குவான் எ - று.

**குறிப்பு.** நீத்துநீர் - நீஞ்சத்தக்க நீர்; மிக்க ஆழமானது என்றபடி. இருங்கழி - பெரிய உப்பங்கழியில். பொதும்பர் - சோலையில். சேக்கும் - தங்கும். பிறவாயின - அவன் கூறியதற்கு மாறுபாடாயின. அடி, 4: குறுந். 316 : 8. **(பி - ம்.)** [1] 'றிரையது' (உ)

163. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழித் துவலை யொலியிற் றுஞ்சும்
துறைவன் றுறந்தெனத் துறந்தென்
இறையோர் முன்கை நீங்கிய வளையே.

**இதுவுமது.**

**(ப - ரை.)** 'சிறுவெண்காக்கை, இருங்கழித் துவலை யொலியில் துஞ்சும்' என்றது ஆண்டுத் தனக்கு இனியவாகக் கூறுவார் மாற்றங்கேட்டு முயற்சியின்றித் தங்குவானென்பதாம்.

**குறிப்பு.** துவலையினது ஒலியில். துஞ்சும் - உறங்கும். துறந்தென - என்னைத் துறக்க. துறந்து - நீங்கி. இறையோர் முன்கை - சந்துயுடைய முன்கையினின்றும். நீங்கிய - நீங்கின. வளை நீங்கிய. (ந)

164. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
[1]இருங்கழி மருங்கி னயிரை யாரும்
தண்ணந் துறைவன் றகுதி
நம்மோ டமையா தலர்பயந் தன்றே.

**எ - து** தலைமகனுக்குப் புறத்தொழுக்கம் உளதாகியவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**(ப - ரை.)** 'சிறுவெண்காக்கை, இருங்கழி மருங்கின் அயிரை ஆரும்' என்றது பரத்தையருள்ளும் புல்லியாரை விரும்புவான் எ - று. 'துறைவன்தகுதி, நம்மோடமையாது அலர்பயந்தன்றே' என்றது அவன் தகுதியுடைமை நமக்குத் தீங்கு செய்தலேயன்றித் தனக்கும் அலர்பயந்ததென்பதாம்.

**குறிப்பு.** அயிரை - ஒருவகையான தாழ்ந்த மீன்; **பதிற்.** 29 : 4. ஆரும்- உண்ணும். துறைவன் தகுதி - துறைவனது தகுதியுடைமை. அமையாது - தங்காமல். அலர் பயந்தன்று - தலைவனுக்கும் அலரை அளித்தது ; என்றது புறத்தொழுக்கத்தால். (பி - ம்.) [1] 'இருங்கரை' (ச)

165. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
அறுகழிச் சிறுமீ னார மாந்தும்
துறைவன் சொல்லிய சொல்லென்
இறையே ரெல்வளை கொண்டுநின் றதுவே.

**இதுவுமது.**

**(ப - ரை.)** 'துறைவன் சொல்லிய......கொண்டு நின்றது' என்றது வளையைக்கொண்டு நின்றது, இப்புறத்தொழுக்கமன்று ; முற்காலத்துத் தெளிப்பான் சூளுற்ற சொல் எ - று.

**குறிப்பு.** அறுகழி - நீரற்றுப்போன உப்பங்கழியில். சிறுமீன் ஆர மாந்தும் - சிறிய மீன்களை வயிறு நிறைய உண்ணும். சொல் - சூளுற்ற சொல். என் இறையேர் எல்வளை - எனது முன்கையிற் பொருந்திய ஒளி மிக்க வளைகளை. சொல் என் வளைகளைக்கொண்டு நின்றது ; பிரிவால் வளை நெகிழ்ந்தன என்றபடி. துறைவன் சொல்லிய சொல் : **அகநா.** 5 : 16-8, உரை. வளைநெகிழ்தல் : **ஐங்.** 20 : 5, குறிப்பு. (ரு)

166. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
வரிவெண் டாலி வலைசெத்து வெரூஉம்
மெல்லம் புலம்பற் றேறி
நல்ல வாயின நல்லோள் கண்ணே.

**எ - து** வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் பசப்பிற்கு வருந்திய தோழி அவனை இயற்பழித்துக் கூறியது.

**(ப - ரை.)** 'நல்லவாயின நல்லோள்கண்' என்றது கண்பசந்தன எ - று. சிறுவெண்காக்கை திரையாற் கரையில் ஏறடப்பட்ட பலகறை களை வலைச் சுற்றிற்கோத்த பலகறையென வெரூஉமென்றது, நாம் வரைதல்வேண்டிக் கூறியசொற்களைத் தனக்கு வருத்தஞ்செய்வனவாகக்கொண்டு வெருவுகின்றானென்பதாம்.

**குறிப்பு.** தாலி - பலகறை, சோழி. வலை செத்து - வலையென அறிந்து. வெரூஉம்-அஞ்சும். வலைகளது சுற்றில் சோழி கோக்கப்பட்டிருக்குமாதலின் அலை ஒதுக்கிய சோழியை வலையிலுள்ள சோழி எனநினைந்து அஞ்சும் என்றபடி. மெல்லம் புலம்பன் - மெல்லிய கடற்கரையையுடைய தலைவன் ; **ஐங்.** 120 : 4, குறிப்பு. நல்லவாயின-பசந்தன. நல்லோள் - தலைவியது. கண் நல்லவாயின ; **ஐங்.** 189 : 4. (சு)

167. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி யினக்கெடி றாருந் துறைவன்
நல்குவன் போலக் கூறி
நல்கா னாயினுந் தொல்கே ளன்னே.

எ - து பரத்தையிற்பிரிந்த தலைமகன்விட வாயிலாய்வந்தார்க்கு அவன் கொடுமைகூறித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) 'தொல்கேளன்' என்றது நமக்குப் பண்டு கேளாகிய தன்மையினையுடையான் எ - று. 'சிறுவெண்காக்கை .... ஆருந்துறைவன்' என்றது பரத்தையர் பலரையும் தனக்குவரும் வருத்தம் அறியாது நுகர்வானென்பதாம்.

குறிப்பு. இனக்கெடிறு ஆரும் - கூட்டமான கெடிற்றுமீனை உண்ணும். கெடிறு முள்ளுள்ள மீனாதலின் அதனை உண்டல் பரத்தையரை நுகர்தற்கு உவமை கூறப்பட்டது. நல்குவன் - அளிப்பவன். தலைவன் நல்குதல்; **குறுந்.** 37 : 1, 60 : 5; **குறள்.** 1156. நல்கானாயினும் - அளிசெய்யாவிடினும். தொல்கேளன் - நமக்குப் பண்டு கேளாகிய தன்மையை யுடையான்.

தனக்கு வரும் வருத்தமென்றது தலைவியரைப் புணர்ந்து விடுதலை. (எ)

168. பெருங்கடற் [1]கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி [2]யகமணை யீனும்
தண்ணந் துறைவ னல்கின்
ஒண்ணுத லரிவை [3]பாலா ரும்மே.

இ - து நொதுமலர் வரைவுவேண்டி விடுத்தமையறிந்த தலைமகள் ஆற்றாளாய்ப் பசியடநிற்புழி, 'இதற்குக் காரணமென்?' என்று செவிலி வினவத் தோழி அறத்தொடு நின்றது.

(ப - ரை.) 'துறைபடி யம்பி யகமணை யீனும்' என்றது யாவர்க்கும் எவ்விடத்தும் தீங்குவாராத துறைவனென அவன்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு. அம்பி - ஓடத்தினது. அகமணை - உட்கட்டைக்குள். ஈனும் - முட்டையிடும். நல்கி - நல்க. அரிவை - தலைவி. பால்ஆரும் - பாலை அருந்துவள். பால் ஆர்தல் : **அகநா.** 48 : 2.

நொதுமலர் - அயலார். பசியடநிற்றல் - பசிவருத்தவும் உண்ணாதிருத்தல்; இது புணர்ச்சி நிமித்தமான மெய்ப்பாடுகளுள் ஒன்று; **தொல்.** மெய்ப். 22.

**(மேற்.)** மு. நொதுமலர் வரைவுழி ஆற்றாது பசியட நின்றுழி இதற்குக் காரணமென்னென்ற செவிலிக்குத் தோழி கூறியது (**தொல்.** களவு. 23, **ந.**) (**பி - ம்.**) [1] 'திரையது' [2] 'யகமனை' [3] 'பாலார்கம்மே' (அ)

169. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
பொன்னிணர் ஞாழன் [1]முனையிற் பொதியவிழ்
புன்னையம் [2]பூஞ்சினைச் சேக்குந் துறைவன்
நெஞ்சத் துண்மை யறிந்தும்
என்செயப் பசக்குந் தோழியென் கண்ணே.

எ - து காதற்பரத்தையை விட்டு மற்றொருத்தியுடன் ஒழுகாநின்ற தலைமகன் வாயில்வேண்டி விடுத்துழி வாயினேர்தல்வேண்டி நின்கண் பசந்தனகாணென்று முகம்புகு தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) சிறுவெண்காக்கை ஞாழலை வெறுப்பின் புன்னைச்சினையிற் சேக்குமென்றது பரத்தையர் மனையில் ஒன்றுவெறுப்பின், ஒன்றின்கண் தங்குதலையுடையானென்பதாம்.

குறிப்பு. பொன்னிணர்ஞாழல் - பொன்னிறமான பூங்கொத்துக்களையுடைய ஞாழல். முனையின் - வெறுப்பின்; குறுந். 296 : 3. பூஞ்சினை - பூக்களையுடைய கிளையில். நெஞ்சத்துண்மை - நெஞ்சத்திலுள்ள உண்மையான கருத்தை. அறிந்தும் என் கண் என்செயப் பசக்கும்; கண் பசத்தல் : ஐங். 170 : 4; குறுந். 13 : 5.

(பி - ம்.) [1] 'முனையிற்' [2] 'பூஞ்சினை வதியுந்' (௯)

170. பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி நெய்தல் சிதைக்குந் துறைவன்
நல்ல னென்றி யாயிற்
பல்லித ழுண்கண் பசத்தன்மற் றெவனோ.

எ - து தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாகியவழி வேறுபட்ட தலைமகள், 'அவற்கு அவ்வாறு நிகழ்ச்சியில்லை; நம்மேல் அன்புடையன்' [1] என்று தெளிக்கும் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'சிறுவெண்காக்கை . . . . சிதைக்கும்' என்றது தான்பற்றிய பரத்தையருடைய நலம் சிதைப்பானென்பதாம்.

குறிப்பு. சிதைக்கும் - அழிக்கும். நல்லன் - நல்லவன். என்றியாயின் - என்று கூறுவாயேயானால். பல்லிதழ் உண்கண் - பல இதழ்களையுடைய மலர்போன்ற மையுண்ட கண்; ஐங். 334; குறுந். 5 : 5; கலி. 112 : 9.

(பி - ம்.) [1] 'என்ற தோழிக்குச்' (௧௦)

(௧௭) சிறுவெண்காக்கைப்பத்து முற்றிற்று.

## (௧௮) தொண்டிப் பத்து

171. திரையிமி ழின்னிசை யளைஇ யயலது
முழவிமி ழின்னிசை மறுகுதொ றிசைக்கும்
தொண்டி யன்ன பணைத்தோள்
ஒண்டொடி யரிவையென் னெஞ்சுகொண் டோளே.

எ - து இயற்கைப்புணர்ச்சி புணர்ந்துநீங்கும் தலைமகன் ஆயத்தோடு செல்லும் தலைமகளைக் கண்டு சொல்லியது.

(ப - ரை.) திரையின் ஒலியொடு கலந்து முழவு ஒலிக்குமென்றது உடன் செல்கின்ற ஆயத்தார் மகிழ்ச்சியரவமும் உழையராய் எதிர்வருகின்றார் மகிழ்ச்சியரவமும் கூறினவாறு.

குறிப்பு. திரையிமிழ் இன்னிசை அளைஇ - அலை ஒலிக்கின்ற இனிய ஓசையைக் கலந்து. முழவு - மத்தளம். மறுகுதொறு - வீதிதொறும். தொண்டி : மலைநாட்டு நகர்களுள் ஒன்று; ஐங். 178-ஆம் செய்யுள் இதனை வலியுறுத்தும்; இக்காலத்து அகலப்புழையென வழங்குமென்பர்; பதிற். 88 : 21; புறநா. 17 : 13, 48 : 4. அரிவை - தலைவி. தலைவி தன்னெஞ்சைக் கொள்ளல் : ஐங். 172 : 1, 191 : 5. இப்பத்தும் (171-180) அந்தாதியாக உள்ளன.

ஆயத்தார் வேறு, உழையர் வேறு. (க)

172. ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்கண்
உரவுக் கடலொலித் திரையென
இரவி னானுந் துயிலறி யேனே.

எ - து 'கண்துயில்கின்றிலை; இதற்குக் காரணம் என்?' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

குறிப்பு. நெஞ்சைக் கொண்டனள். உரவுக்கடல் - பரக்கின்ற கடல். இரவினானும் - இரவிலும். தூங்காமைக்குத் திரை உவமை.

(மேற்.) மு. ஆக்கஞ் செப்பல் (தொல். களவு. 9, இளம்.); இ. வி. 405. (உ)

173. இரவி னானு மின்றுயி லறியா
தரவுறு துயர மெய்துப தொண்டித்
தண்ணறு நெய்தலி னாறும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே.

எ - து தலைமகன் குறிவழிச்சென்று தலைமகளைக் கண்ட பாங்கன் தன்னுள்ளே சொல்லியது.

(ப - ரை.) 'தொண்டித் தண்ணறு நெய்தல்போல் நாறும் கூந்தல்' என்றது சேய்மைக்கண்ணே நாறுதல் நோக்கி.

குறிப்பு. துயிலை அறியாது. அரவுறுதுயரம் - பாம்பு தீண்டினாற் போன்ற துயரம்; நற். 75 : 2-5; குறுந். 43 : 4-5. நாறும் - மணம் கமழும். பின்னிருங் கூந்தல் - பின்னல் பொருந்திய கரிய கூந்தலையுடைய மகளிரது. அணங்குற்றோர் - நோயுற்றோர். உற்றோர் துயிலறியாது துயரம் எய்துப.

(மேற்.) மு. பாங்கன் தலைவனை நோக்கி, 'நின்னை அணங்காக்கியாள் எவ்விடத்தாள்?' என வினாய், அவ்வழிச் சென்று தலைவியைக் கண்டனன் (தொல். களவு. 11, இளம்.); பாங்கன் கிழவோனை இகழ்ந்ததற்கிரங்கல் (நம்பி. களவு. 21.) (ஙூ)

174. அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கின ளுணங்கிழைப்
பொங்கரி பரந்த வுண்கண்
அங்கலிழ் மேனி [1] யசைஇய வெமக்கே.

எ - து குறிவழிச்சென்று தலைமகளைக் கண்டு வந்த பாங்கன் அவள் நின்றுழி நின்றாளென்று கூறியவழி ஆண்டுச் செல்லக்கருதிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

குறிப்பு. அணங்குடை - வருத்தும் தெய்வத்தையுடைய. அணங்குடைப் பனித்துறை: ஐங். 28 : 1, குறிப்பு. நுணங்கு இழை - அசைகின்ற ஆபரணங்களை. அம் கலிழ் மேனி - அழகு ஒழுகுகின்ற மேனி; ஐங். 106 : 4, குறிப்பு. இழையையும் கண்ணையும் மேனியையும் உடைய தலைவி. அசைஇய-வருந்திய. மேனியையுடையாள் எமக்குப் பொழிற்குறி நல்கினள்.

(மேற்.) மு. இனி, உள்ளப் புணர்ச்சியானின்றி இயற்கைப் புணர்ச்சி இடையீடு பட்டுழி பின் தலைமகள் குறியிடம் கூறியவழி அதனைப் பாங்கற்கு உரைத்தல் (தொல். களவு. 12, இளம்.) தான் வருந்திக் கூறுகின்ற கூற்றினைத் தலைவியைச் சார்த்தித் தலைவன் கூறலின், இவ்வாறு ஆற்றுனாய் இங்ஙனம் கூறினனென்று அஞ்சித் தோழியுணராமல் தலைவி தானே கூடிய பகுதிக்கு உதாரணம் (தொல். களவு. 11, ந.) காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல் (நம்பி. களவு. 28.); (இ - வி. 509.)

(பி - ம்.) [1] 'யசையிய லெமக்கே' (ச)

175. [1] எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோள்
[2] நன்னுத லரிவையொடு மென்மெல வியலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே.

எ - து பாங்கற்கூட்டங்கூடி நீங்கும் தலைமகன் இனி வருமிடத்து நின் தோழியோடும் வரவேண்டுமெனத் தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. அரிவை - தோழி. மென்மெல இயலி - மெத்தென மெத்தென நடந்து; மதுரை. 608. வந்தி - வருவாயாக. பண்பு - குணம். நின் பண்பு பல கொண்டு அரிவையொடு வந்திசின்; இசின்: முன்னிலை யசைச்சொல்.

(மேற்.) மு. தோழியுடம்பாட்டினைப் பெற்று மகிழல் (தொல். களவு. 16, இளம்.) இது பாங்கற் கூட்டம் கூடி நீங்கும் தலைவன் நீ வருமிடத்து நின் தோழியொடும் வரல்வேண்டுமெனத் தலைவிக்குக் கூறியது (தொல் களவு. 11, ந.) தோழியுடம்பாடு பெற்று மனமகிழ்தல் (தொல். களவு 12, ந.) தலைவன் தலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தல் (நம்பி. களவு. 21.)

(பி - ம்.) [1] 'தமக்கு' [2] 'ஒண்ணுத' (ரு)

176. பண்பும் [1]பாயலுங் கொண்டன டொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி
ஐதமைந் தகன்ற வல்குற்
கொய்தளிர் மேனி கூறுமதி தவறே.

எ - து தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழிச் சென்ற தலைமகன் 'இவள் என்னை இவைகோடற்குக் காரணம் என்?' என்று தோழியை [2]வினவியது.

(ப - ரை.) 'கொண்டனள்' என்றது தலைவியையெனக் கொள்க.

குறிப்பு. பாயலும் கொண்டனள் என்றது என் தூக்கத்தை ஒழித்தாள் என்றபடி; ஐங். 195 : 4; கலி. 10 : 10, ந. நாறும் - மணம் கமழும். ஐது - அழகிதாக. கொய்தளிர் மேனி : தலைவி; ஐங். 38 : 3; நற். 251 : 7; குறுந். 356 : 8. தவறு கூறுமதி - யான் செய்த தவறைக் கூறுவாயாக. தளிர் மேனி பண்பும் பாயலும் கொண்டனள், என் தவறு கூறுமதி; ஐங். 177, கருத்து.

(மேற்.) மு. தோழி இவன் கூறுகின்ற குறை தலைவியிடத்தேயாய் இருந்ததென்று அவள்மேலே சேர்த்தி அதனை உண்மை யென்று உணரத்தலைவன் கூறுதல் (தொல். களவு. 11, ந.) (பி - ம்.) [1]'பாலுங்' [2]'வினயது' (சு)

177. தவறில ராயினும் பனிப்ப மன்ற
இவறுதிரை திளைக்கு மிடுமண னெடுங்கோட்டு
முண்டக நறுமலர் கமழும்
தொண்டி யன்னோ டோளுற் றோரே.

எ - து தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழி 'இவள் என்னை வருத்துதற்குச் செய்த தவறு என்?' என்று வினய தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.

(ப - ரை.) இதன் இறைச்சி :—நீரரு நிலத்து முண்டகநறுமலர் கமழும் தொண்டி யன்னோளென்றது இவள் நாமணுகி நுகர்தற்கரியள் எ - று. 'தோளுற்றோர்' என்றது தோளை எதிர்ப்பட்டோர் எ - று.

குறிப்பு. தவறிலராயினும் - தவறு இழைத்திலராயினும். பனிப்ப - நடுங்குவார். மன்றப் பனிப்ப. இவறுதிரை - உலாவுகின்ற அலை. இடுமணல் நெடுங் கோட்டு - குவித்த மணல் மேட்டின் உச்சியின்கண். முண்டக நறு மலர் - கழிமுள்ளிச் செடியின் வாசனை பொருந்திய மலர். தொண்டியன் னோள் : தலைவி. தோளுற்றோர் - தோளை யெதிர்ப்பட்டோர். உற்றோர் தவறிலராயினும் பனிப்ப.

நீரரு நிலத்து முண்டகம் என்றது நீரில் உள்ளமையால் அம்முண்டகத்தின் அருமை கூறியவாறு. (எ)

178. தோளுங் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் றொண்டி யன்ன
எற்கண்டு [1]நயந்துநீ நல்காக் காலே.

எ - து தலைமகன் தோழியை இரந்து குறையுறுவான் சொல்லியது.

(ப - ரை.) 'செங்கோற் குட்டுவன் றொண்டியன்ன என்' என்றது தன்னைத் தேறுதற்பொருட்டுத் தன்செப்பம் கூறியவாறு.

குறிப்பு. வாழ்தல் ஒல்லுமோ - உயிர் வாழ்தல் பொருந்துமோ. குட்டுவன் றொண்டி - குட்டுவனது தொண்டியென்ற நகரம். எற் கண்டு - என்னைப் பார்த்து. நயந்து - விரும்பி. நீ என்றது தோழியை நோக்கி. நல்காக் கால் - அருளாவிடில். நீ நல்காக்கால் வாழ்தல் ஒல்லுமோ?

செப்பம் - நடுவுநிலை; பட்டாங்கு எனலுமாம்; சிறு. 27, உரை; சீவக. 1364, ந.

(மேற்.) மு. தோழியைக் குறையுறும் பகுதி (தொல். களவு. 12, இளம்.) மதியுடம் பட்டதோழி நீர் கூறிய குறையை யான் மறந்தேனெனக் கூறுமாயின் அவ்விடத்துத் தன்னொடு கூடாமையால் தலைவிமருங்கிற் பிறந்த கேட்டையும் அவள் அதனை ஆற்றியிருந்த பெருமையையும் கூறுதல் (தொல். களவு. 11, ந.) பாங்கிக்குத் தலைவன் தன்னிலை சாற்றல் (நம்பி. களவு. 28.) தோழியிடம் தன்னிலையைத் தலைவன் சாற்றல் (இ - வி. 509.) (அ)

(பி - ம்.) [1]'மயங்கி நீ'

179. நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப
அலவன் றாக்கத் துறையிருப் பிறழும்
இன்னொலித் தொண்டி யற்றே
நின்னல தில்லா விவள்சிறு நுதலே.

எ - து குறியிடத்துவந்து புணர்ந்துநீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவுகடாயது.

(ப - ரை.) 'அலவன் தாக்கத் துறையிருப் பிறழும்' என்றது இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகிய ஞான்று இவள் உயிர்வாழாளென்பதாம்.

குறிப்பு. நல்குமதி - வரைந்து அருளுவாயாக. அலவன் - நண்டு. இரு - மீன். பிறழும் - துன்பத்தால் புரளும். நின்னலது இல்லா - உன்னையன்றி வேறு துணையில்லாத, இவள் - தலைவியது. நின்னலதில்லாவிவள்: நற். 1 : 6-7, 189 : 1-2; குறுந். 309 : 8, 397 : 4-7; கலி. 21 : 12-3. நுதல் தொண்டியற்று. (கூ)

180. [1]சிறுநணி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த [2]கொழுமீன் வல்சிப்
பறைதபு முதுகுரு கிருக்கும்
துறைகெழு தொண்டி யன்னவிவ ளலனே.

எ - து [3]தாழ்த்து வரையக்கருதிய தலைமகனைத் தோழி நெருங்கிக் [4]கடிதின் வரையவேண்டுமெனச் சொல்லியது.

(ப - ரை.) வலைவர் தந்த கொழுமீன் வல்சிக்கண்ணே பறத்தல்கெட்ட முதுகுருகு இருக்குமென்றது நொதுமலர்க்கு மகட்பேச வந்திருக்கின்ற சான்றோர் உளர் என்பதாம்.

இவைபத்தும் சொல்வகையால் தொடர்ச்சிபெறுதலேயன்றிக் கிளவி வகையால் தொடர்ச்சியுடையவாறும் அறிக.

குறிப்பு. சிறுநணி - விரைவிலேயே. வரைந்தனை கொண்மோ-வரைந்து கொள்வாயாக. வலைவர் - வலைஞர்; கலி. 23 : 17. வல்சி - உணவு. பறைதபு முதுகுருகு - பறக்க இயலாத கிழ நாரை; பறை - பறத்தல்; குறுந். 125 : 5, 128 : 1; சீவக. 2537. தொண்டியன்ன இவள் நலனே, சிறுநணி வரைந்தனை கொண்மோ.

சொல்வகையால் தொடர்ச்சி பெற்றது அந்தாதித்தொடை எனப்படும்.

(பி - ம்.) [1] 'சிறுநனி' [2] 'தொழுமீன்' [3] 'தாழ்ந்து' [4] 'கடிதினி' (கo)

(கஅ) தொண்டிப்பத்து முற்றிற்று.

## (கக) நெய்தற் பத்து

181. நெய்த லுண்க ணேரிறைப் பணைத்தோட்
பொய்த லாடிய பொய்யா மகளிர்
குப்பை வெண்மணற் குரவை நிறூஉம்
துறைகெழு கொண்க னல்கின்
(5) உறைவினி [1]தம்மவிவ் வழுங்க லூரே.

எ - து இக்களவொழுக்கம் நெடிதுசெல்லின் இவ்வூர்க்கண் அலர் பிறக்குமென்று அஞ்சியிருந்த தலைவி, 'தலைமகன் வரைந்துகொள்ளத் துணிந்தான்' என்றுகூறிய தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) சிறைப்புறம் : 'மகளிர் ........ கொண்கன்' என்றது மகளிர் தம் காதலரோடு ஆடும் இவ்வூரிடத்துத் தனித்தல் அரிதென்பதாம்.

குறிப்பு. நெய்தல் உண்கண் : ஐங். 151 : 3, குறிப்பு. இறை - முன்கை; ஆகுபெயர். இறைப்பணைத்தோள் : ஐங். 239 : 4, 459 : 1. பொய்தல் - விளையாட்டு. குப்பை - குவியல். குரவை - கைபிணைத்தாடும் ஒரு வகை விளையாட்டு. நிறூஉம் - நிறுத்தும். நல்கின் - வரைந்து அருள் செய்தால். உறைவு - தங்குதல். அழுங்கல் - கெடுதல். அழுங்கல் ஊர் என்றது வெறுப்பினால். கொண்கன் நல்கினால் இவ்வூர் உறைவு இனிது. (பி - ம்.) [1] 'தம்மவவ்' (க)

182. நெய்த னறுமலர் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழு மார்பன்
அருந்திறற் கடவு ளல்லன்
பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே.

எ - து தலைமகள் மெலிவுகண்டு தெய்வத்தாலாயிற்றெனத் தமர் நினைந்துழித் தோழி அறத்தொடு நின்றது.

குறிப்பு. செருந்தி - வாட்கோரைப்பூ. விரைஇ - கலந்து. கைபுனைதல் - அலங்கரித்தல். கடவுள் - தெய்வம். பெருந்துறை - நீர்த்துறையின்கண். இவள் என்றது தலைவியை. அணங்கியோன் - நலத்தை வருத்தியவன். அணங்கியோன் கடவுளல்லன்; மக்கட் சாதியினன் என்றபடி.

(மேற்.) மு. குறி பார்த்தவழி வேலனை முன்னிலையாகக் கூறியது (தொல். களவு. 24, இளம்.) அறத்தொடு நிற்றலில் வேலற்குக் கூறியது (ஷை. ஷை. 23, ந.) (உ)

183. கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாட னல்வய லூரன்
தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் [1]வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்துழி ஆற்றாளாகிய தலைமகள் மாலைக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'பண்டையிற் கடும்பகல் வருதி' என்றது பண்டு வரும் காலத்திலே வந்தாற்போலப் பிறர்க்குத்தோன்றக் கடும்பகற்கண்ணே வாரா நின்றாய் எ - று.

குறிப்பு. இச் செய்யுளின் முதலிரண்டடிகள் சில பிரதிகளில் காணப் படவில்லை. கணங்கொள் அருவி - திரட்சியையுடைய நீர்வீழ்ச்சி. கான் - காடு. நாடன் - குறிஞ்சிநிலத்தலைவன்; குறுந். 3 : 4; 'குறிஞ்சிநிலமுடைமையால் நாடனென்று சொல்வேனே' (புறநா. 49 : 1, உரை.) குறும் பொறை - குறிய பொற்றைகள். பிரிந்தென - பிரிந்தானாக; குறுந். 5 : 4. 'கணங்கொள் . . . . சேர்ப்பன்' என்றது தலைவன் நான்கு நிலத்துக்கும் உரியன் என்றபடி. கடும்பகல் - விளக்கத்தையுடைய பகல். கடும்பகல் வருதியென்றது பகலும் மாலையின் துன்பத்தைச் செய்ததுபற்றி; குறுந். 234: 5-6. கையறுமாலை - பிரிந்தோர் செயலறுதற்குக் காரணமாகிய மாலைப் பொழுதே; விளி; குறுந். 32 : 1, 387 : 2. களைஞர் - விலக்குவோர். மாலை, சேர்ப்பன் பிரிந்தெனக் கடும்பகல் வருதி, காலை வரினும் களைஞர் இலர்.

(மேற்.) மு. இடம் நியமித்துக் கூறுதல் செய்யுள் வழக்கு (தொல். அகத். 3, ந.) பருவ வரவின்கண் மாலைப்பொழுது கண்டு ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறியது ; நெய்தற்கண் மாலை வந்தது (தொல். அகத். 12, ந.) இருத்தலென்னும் உரிப்பொருள் வந்த நெய்தற்பாட்டு (நம்பி. ஒழிபு. 42.)

(பி - ம்.) [1] 'வருந்திக் கையறு மாறு, மாலை நெய்தலுங் கூம்பக்' (ந)

184. நெய்த [1]லிருங்கழி நெய்த னீக்கி
மீனுண் [2]குருகிளங் கான லல்கும்
கடலணிந் தன்றவ ரூரே
கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே.

எ - து வாயில்வேண்டிவந்தார் தலைமகன் அன்புடைமை கூறியவழி வாயில் மறுக்கும் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) நெய்தல் நீக்கி மீனுண்குருகு இளங்கானலில் அல்குமென்றது பொதுமகளிரிடத்து ஊடல் நீக்கி இன்பநுகர்ந்து ஆண்டுத் தங்குவானென்பதாம்.

குறிப்பு. நெய்தல் நீக்கி - நெய்தல் மலரை நீக்கி. அல்கும் - தங்கும். கடலணிந்தன்று - கடலையுடையது. அவரூர் கடலணிந்தன்று, அவருடை நட்பு கடலினும் பெரிது ; நற். 166 : 10 ; குறுந். 3 : 2.

(பி - ம்.) [1] 'லிருங்கழி' [2] 'குருகினங்' (ச)

185. [1]அலங்கிதழ் நெய்தற் கொற்கை முன்றுறை
இலங்குமுத் துறைக்கு மெயிறுகெழு துவர்வாய்
அரம்போ ழவ்வளைக் குறுமகள்
நரம்பார்த் தன்ன தீங்கிள வியளே.

எ - து 'ஆயமகளிருள் நின்னால் நயக்கப்பட்டாள் யாவள்?' என வினவிய தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

குறிப்பு. அலங்குதல் - அசைதல். நெய்தல் : கடற்கரைப்பூ. கொற்கை - பாண்டியர்களின் தலைநகரங்களுள் ஒன்று ; பாண்டிய நாட்டின் கீழ்க்கடலின் கரையிலுள்ளது. உறைக்கும் - ஒக்கும். அரம்போழ் அம் வளை - அரத்தால் பிளக்கப்பட்ட அழகிய வளைகளையுடையவள் ; ஐங். 194 : 1. நரம்பு - இசை நரம்பு. ஆர்த்தன்ன - ஒலித்தாற்போன்ற. தீங்கிளவியள் - இனிய சொல்லையுடையவள். எயிற்றையும், வாயையும், வளையையும் கிளவியையுமுடைய குறுமகளே என்னால் நயக்கப்பட்டாள் என்றபடி.

(பி - ம்.) [1] 'அலங்கிறை' (ரு)

186. நாரை நல்லினங் கடுப்ப மகளிர்
நீர்வார் கூந்த லுளருந் துறைவ
பொங்குகழி நெய்த லுறைப்ப வித்துறைப்
பல்கால் வரூஉந் தேரெனச்
[1]செல்லா தீமோ வென்றனள் யாயே.

எ - து பகற்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகனைத் தோழி செறிப்பு அறிவுறீஇ வரைவுகடாயது.

(ப - ரை.) நாரையினங்கடுப்ப மகளிர் நீர்வார்கூந்தலை உளருந்துறைவ என்றது தம்மிடத்துக் குற்றம் நீக்கும் மகளிரையுடைய துறைவ எ - று.

குறிப்பு. நாரை நல்லினம் கடுப்ப - நாரையின் கூட்டத்தைப்போல. மகளிர் - முதிய மகளிர். உளரும் - விரித்து வருகின்ற; புறநா. 260 : 4. உறைப்ப - துளிப்ப. நெய்தல் உறைப்ப வரும் தேர். செல்லாதீம் - போக வேண்டாம்; குறுந். 390 : 2. துறைவ, தேர் வருமென (கேட்ட) யாய் செல் லாதீமோ என்றனள்; தலைவன் தேர் வந்ததெனக்கேட்ட அன்னை அலைத் தல்; குறுந். 246 : 3-5; அகநா. 20 : 12-6.

(மேற்.) மு. தோழி தாயறிவு உணர்த்தல் (நம்பி. களவு. 50.)

(பி - ம்.) [1] 'சொல்லாதீமோ' (சு)

187. நொதும லாளர் கொள்ளா ரிவையே
எம்மொடு [1]வந்து கடலாடு [2]மகளிரும்
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்
உடலகங் கொள்வோ ரின்மையின்
தொடலைக் குற்ற சிலபூ வினரே.

எ - து தோழி கையுறை மறுத்தது.

(ப - ரை.) 'நொதுமலாளர் கொள்ளாரிவையே' என்றது நீயல்லா தாரில் இப்பூப்பறிப்பாரில்லை எ - று. எம்மொடு வந்து கடலாடுமகளிரும் இந்நெய்தல் தழையாற் பாவைபுனையார்; தொடலை தொடுப்பாரும் இதனிற் சிலபூக்கொள்வதல்லது இப்பூத்தன்னையே தொடலையாகப் புனைவாரில்லை எ - று.

குறிப்பு. நொதுமலாளர் - அயலார். இவை என்றது நெய்தல் தழை களை. இவை கொள்ளார். பகைத்தழை - ஒன்றற்கொன்று மாறுகிய தழை களால்; ஐங். 211 : 3; நற். 8 : 2; குறுந். 293 : 5. புனையார் - செய்யார். உடலகம் - முற்றும். தொடலை - மாலைக்காக. குற்ற - பறித்த.

(மேற்.). மு. தோழி கையுறை மறுத்தது (தொல். களவு. 23, ந.); நம்பி. களவு. 28.

(பி - ம்.) [1] 'வந்த', 'கலந்த' [2] 'மகளிர்' (எ)

188. இருங்கழிச் சேயிறு வினப்புள் ளாரும்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை
[1]வைகறை மலரு நெய்தல் போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே.

எ - து விருந்து வாயிலாகப் புகுந்த தலைமகன் தலைவி இல்வாழ்க்கைச் சிறப்புக்கண்டு மகிழ்ந்து சொல்லியது.

(ப - ரை.) விடியற்காலை மலரும் நெய்தலைக் கண்ணிற்கு உவமையாகக் கூறிற்று, வந்தபொழுதே மலர்ந்த சிறப்புநோக்கி யெனக்கொள்க. 'இருங்

கழிச் சேயிரு இனப்புள் ளாரும்' என்றது விருந்ினர் நுகர்ச்சி கூறியவா றெனக் கொள்க.

குறிப்பு. சேயிரு - சிறிய இரு மீன்களை ; ஐங். 196 : 3. இனப்புள் - பறவைக் கூட்டம். ஆரும் - உண்ணும். கொற்கைக் கோமான் - பாண்டியன். வைகறை - விடியற்காலத்தில். தகை - பெருமை. காதலி என்றது தலைவியை. காதலியின்கண் நெய்தல்போலத் தகைபெரிதுடையது. வைகறையில் நெய்தல் மலர்தல் : முருகு. 73-4.

(பி - ம்.) [1] 'வைகறை வரு நெய்தல்' (அ)

189. புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல்
பொன்படு மணியிற் பொற்பத் தோன்றும்
மெல்லம் புலம்பன் வந்தென
நல்ல வாயின தோழியென் கண்ணே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வரைவான் வந்துழிக் கண்டு [1]உவகையோடு வந்த தோழி, 'நின் கண்மலர்ச்சிக்குக் காரணம் என்?' என்று வினவிய தலைவிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'புன்னை நுண்டாது உறைத்தருநெய்தல் பொன்படுமணியிற்றோன்றும்' என்றது நின்குடிப்பிறப்புப் பண்டையினும் சிறத்தற்குக் காரணமாயிற்றென்று அவன்வரைவு கூறியவாறும்.

குறிப்பு. உறைத்தரும் - உதிரும். பொன்படுமணியின் - பொன்னிற் பொருந்திய மணியைப்போல. புன்னைத்தாதிற்குப் பொன்னும், நெய்தற் பூவிற்கு மணியும் உவமை. பொற்ப - அழகுபெற. மெல்லம் புலம்பன் : ஐங். 120 : 4, குறிப்பு. வந்தென - வர. தோழி என்றது தலைவியை நோக்கிய விளி. தோழி என்கண் தலைவன் வந்தென நல்ல வாயின.

(பி - ம்.) [1] 'நகையொடு' (கூ)

190. தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ
[1]வெண்ணெ லரிநர் மாற்றின ரறுக்கும்
மெல்லம் புலம்பன் மன்றவெம்
பல்லித ழுண்கண் பனிசெய் தோனே.

எ - து தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை.) அரிவோர் நெய்தற்பூவை நீக்கி வெண்ணெல் அரியுமென்றது தனக்கு அடுத்தது செய்தலன்றிப் பிறர்க்கு வருத்தம் செய்யானெனத் தலைமகன் குணம் கூறியவாறும்.

குறிப்பு. நெய்தல் தளையவிழ் வான்பூ - நெய்தலினது கட்டவிழ்ந்த பெரிய பூவை. வெண்நெல் - வெண்மையான நெல்லை. அரிநர் - அறுப்பவர்கள். மாற்றினர் - நீக்கி. நெல் அரிநர் நெய்தற்பூவை மாற்றினராகி அறுக்கும் புலம்பன். நெற்செறுவில் நெய்தற்களை : நற். 195 : 6-7 ; குறுந்.

309 : 5-6. பல்லிதழ்உண்கண் : ஐங். 170 : 4, குறிப்பு. பனிசெய்தோன்-பசலை நிறத்தைச் செய்தவன். புலம்பன் எம்கண்ணைப் பனிசெய்தோன். கண் பசத்தல் : ஐங். 169 : 5, குறிப்பு. (க0)

(பி - ம்.) [1] 'வொண்ணெல்'

(ககூ) நெய்தற்பத்து முற்றிற்று.

## (உ0) வளைப் பத்து

191. கடற்கோடு செறிந்த [1] வளைவார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தல்
கானன் ஞாழற் கவின்பெறு தழையள்
வரையர மகளிரி னரியளென்
நிறையரு நெஞ்சங் [2] கொண்டொளித் தோளே.

ஏ - து 'நின்னாற் காணப்பட்டவள் எவ்விடத்து எத்தன்மையள்?' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் கூறியது.

குறிப்பு. கோடு செறிந்த வளை - சங்கையறுத்துச் செய்யப்பட்ட நெருங்கிய வளைகள் ; ஐங். 185 : 3, 196 : 1. கழிப்பூ - கழியிலுள்ள பூ. இரும்பல் கூந்தல் - கரிய பலவாகிய கூந்தல். கவின் - அழகு. வரையரமகளிரின் - மலையில் வாழும் தெய்வ மங்கையரினும். அரியள் - அடைதற்கு எளியளல்லள். அடி, 4: அகநா. 162 : 25. நிறை அரு நெஞ்சம் - நிறை பொருந்திய அருமையான என் உள்ளத்தை. ஒளித்தோள், தழையள், அரியள்.

(பி - ம்.) [1] 'மயிர்வார்' [2] 'கொண்டொழித்தோளே' (க)

192. கோடுபுலங் கொட்பக் கடலெழுந்து முழங்கப்
பாடிமிழ் பனித்துறை யோடுகல முகைக்கும்
துறைவன் பிரிந்தென நெகிழ்ந்தன
வீங்கின மாதோ தோழியென் வளையே.

ஏ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வந்துழித் தலைவி முனிந்து கூறுவாள்போலத் தன்மெலிவு நீங்கினமை தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'கோடுபுலம் கொட்பக் கடலெழுந்து முழங்கப் பாடு இமிழ் பனித்துறை ஓடுகலமுகைக்கும்' என்றது நொதுமலர் அகல நம் சுற்றத்தார் மகிழ அலர்கூறும் அயலார்சிதைய அவர்தேர் வந்ததென்பதாம்.

குறிப்பு. கோடு - சங்கினங்கள் ; ஐங். 194 : 1, 196 : 1. புலம் - கரையிடத்திலே. கொட்ப - சுழல. கலம் உகைக்கும் - மரக்கலத்தைச் செலுத்தும். பிரிந்தென - பிரிய. தோழி, துறைவன் பிரிந்தென நெகிழ்ந்தன என் வளை வீங்கின. (உ)

193. வலம்புரி யுழுத வார்மண லடைகரை
இலங்குகதிர் முத்த மிருள்கெட விமைக்கும்
துறைகெழு [1] கொண்கநீ தந்த
அறைபுனல் வால்வளை நல்லவோ தாமே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் தலைமகட்கு வளைகொண்டு வந்து கொடுத்துழி, [2]'பண்டை வளை போலாவாய் மெலிந்துழி நீங்கா நலனுடையவோ இவை' எனத் தலைமகள் மெலிவுசொல்லித் தோழி வரைவு கடாயது.

(ப - ரை.) முத்தம் இருள் நீங்க இமைக்கும் துறைவனாதலின், இவட்கு வருகின்ற தீங்கைக் கடிதின் நீக்கி வரைந்துகொள [3] வேண்டுமென்பதாம்.

குறிப்பு. வலம்புரி - வலப்புறமாக வளைவையுடைய சங்கு. கரையின் கண். முத்தம் - முத்துக்கள். இருள்கெட - இருள்நீங்க. இமைக்கும் - ஒளிவிடுகின்ற. அறைபுனல் வால்வளை - கடலிலுள்ள வெண்மையான சங்கால்இயன்ற வளைகள். நல்லவோ - நல்லவைகளோ; மெலிந்துழி நீங்கா நலனுடையவோ என்றபடி.

(பி - ம்.) [1] 'கொண்கனீ' [2] 'பண்டையிவள் வளை' [3] 'வேணும்' (௩)

194. கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை
ஒண்டொடி மடவரற் கண்டிகுங் கொண்க
நன்னுத லின்றுமால் செய்தெனக்
கொன்னென்று கடுத்தன ளன்னையது நிலையே.

எ - து பகற்குறிக்கண் வந்துநீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு மனைக்கண் நிகழ்ந்ததுகூறிச் [1] செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

குறிப்பு. கோடறுத்த - சங்கை அறுத்துச் செய்யப்பட்ட. மடவரற் கண்டிகும் - தலைவியைக் காண். நன்னுதல் மால் செய்தென - நுதல் புதிய நறுநாற்றத்தால் மயக்கத்தைச் செய்ய. கடுத்தனள் - ஐயமுற்றனள். அது நிலையை அன்னை கடுத்தனள். (பி - ம்.) [1]'செறிப்பறீஇ வரைவு' (௪)

195. வளைபடு முத்தம் பரதவர் பகரும்
கடல்கெழு கொண்கன் காதன் மடமகள்
கெடலருந் துயர நல்கிப்
படலின் பாயல் [1] வௌவி யோளே.

எ - து வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்த தலைமகன் தனித்து உறைய ஆற்றானாய்ச் சொல்லியது.

(ப - ரை.) பெறுதற்கரிய முத்தைப் பரதவர்விற்கும் கடல்கெழுகொண்கனென்றது அவர்கள் தாராதாரல்லர்; யாம் அவர்களுக்கு வேண்டுவன கொடுத்துக் கொள்ளமாட்டாது வருந்துகின்றேமென்பதாம்.

குறிப்பு. வளை - சங்கு. வளைபடு முத்தம்: சிறு. 85. பகரும் - விற்கும். கெடலரும் - நீக்குதற்கரிய. படல் இன் பாயல் - கண்படுதற்குரிய இனிய

தூக்கத்தை. பாயல் - தூக்கம்; பதிற். 19 : 12; 68 : 15. வெளவியோள் - அபகரித்தவள். பாயலை வெளவுதல்: ஐங். 176, குறிப்பு.

(மேற்.) மு. வரைவிடைவைத்துப் பிரிந்தோன் தனிமைக்கு வருந்தியது (தொல். அகத். 45, ந.); நம்பி. களவு. 54. (பி - ம்.) [1] 'வறுவி', 'வவ்வி' (௫)

196. கோடீ ரெல்வளைக் [1] கொழும்பல் கூந்தல்
ஆய்தொடி மடவரல் வேண்டுதி யாயின்
தெண்கழிச் சேயிறுப் படூஉம்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ.

எ - து குறைமறுக்கப்பட்ட தலைமகன் பின்னும் குறைவேண்டியவழித் தோழி சொல்லியது.

(ப - ரை.) தெண்கழிச் சேயிறுப்படூஉம் சேர்ப்பவென்றது நினைத்தன அகப்படுத்தும் துறைவ எ - று.

குறிப்பு. கொழும்பல் கூந்தல் - செழித்த பலவாகிய கூந்தல். வளை வேறு தொடி வேறு என்று அறியக் கிடக்கின்றது. மடவரல் - தலைவியை. வேண்டுதியாயின் - விரும்புவாயானால். சேயிறு - இளைய இரு மீன்கள். படூஉம் - அகப்படுத்தும். வரைந்தனை கொண்மோ - வரைந்து கொள்வாயாக.

(மேற்.) மு. உலகத்தார் மகட்கொள்ளுமாறு கொள்ளெனக் கூறுதல் (தொல். களவு. 24, இளம்.) முன்னுறு புணர்ச்சி அறியாள் போற் கரந்த தோழி உலகத்தாரைப் போல வரைந்து கொள்ளெனக் கூறித் தலைவனை நீக்கல் (தொல். களவு. 23, ந.) பாங்கி உலகியலுரைத்தல் (நம்பி. களவு. 28); இ. வி. 509. (பி - ம்.) [1] 'கொழுமணிக் கூந்தல்' (௬)

197. இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி
முகம்புதை கதுப்பின [1] ளிறைஞ்சிநின் றோளே
புலம்புகொண் மாலை மறைய
நலங்கே ழாகம் நல்குவ ளெனக்கே.

எ - து தலைமகன் இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமைகண்டு சொல்லியது.

குறிப்பு. தெளிர்ப்ப - ஒலிக்க. அலவன் - நண்டை. ஆட்டி - அலைத்து விளையாடி. அலவனாட்டல்: பட். 101; நற். 363 : 10; குறுந். 303 : 7. முகம் புதை கதுப்பினள் - முகத்தை மறைத்த கூந்தலை யுடையவள். புலம்பு கொள்மாலை - தனிமையைக் கொண்ட மாலைக் காலம்; குறுந். 314 : 3. நின்றோள் மாலை மறைய எனக்கு ஆகம் நல்குவள்.

(மேற்.) மு. இடந்தலைப் பாட்டில் தலைவி நிலைகண்டு கூறியது; இது திணை மயக்குறுதலுள் நெய்தலில் புணர்தல் நிமித்தம் (தொல். அகத். 12, ந.) தலைவன் இவ்விடத்து இவ் வியற்றென்றல் (நம்பி. களவு. 21.)

(பி - ம்.) [1] 'ளாயத்து நின்றோளே' (௭)

198. [1]வளையணி முன்கை வாலெயிற் [2]றமர்நகை
இளைய ராடுந் தளையவிழ் கானற்
[3]குறுந்துறை வினவி நின்ற
[4]நெடுந்தோ ளண்ணற் கண்டிகும் யாமே.

எ - து பரத்தையர்மனைக்கட் பன்னாள்தங்கிப் பின்பு ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்டதோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) குறுந்துறை வினவிநின்ற நெடுந்தோளண்ணல் என்றது களவுக்காலத்து நிகழ்ந்ததனைக் கூறிற்று; தலைமகள் புலவி நீங்குதற்கும் யான் நெடுநாட்பிரிந்தமை கூறுகின்றவாறென்று அவன் வருந்துதற்கு மெனக் கொள்க.

குறிப்பு. இளையர் - இளம்பெண்டிர். குறுந்துறை - சிறிய நீர்த் துறையை. அண்ணல் - தலைவனை. கண்டிகும் - கண்டோம். யாம் அண்ண லைக் கண்டிகும்.

(மேற்.) மு. தலைவன் புணர்ச்சியுண்மையறிந்து தாழநின்ற தோழி தானுங் குறையுற்றுத் தலைவிமாட்டுச் செல்லுதற்கண் கூற்று நிகழும் (தொல். களவு. 24, இளம்.) பாங்கியிற் கூட்டத்துள் தலைவன் இரந்து பின்னின்றமை கண்டு தோழி மனம் நெகிழ்ந்து தான் குறைந்து தலைவியிடத்தே சென்று குறை கூறுதல் (தொல். களவு. 23, ந.) பாங்கி இறையோற்கண்டமை பகர் தல் (நம்பி. களவு. 31) ; இ. வி. 509.

(பி - ம்.) [1] 'வளையறை' [2] 'றின்னகை' [3] 'விருந்தென வினவி' [4]' நெடுந்தேரண்ணல்' (அ)

199. கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்
வானுயர் [1]நெடுமண லேறி யானது
காண்கம் வம்மோ தோழி
செறிவளை நெகிழ்த்தோ னெறிகட னாடே.

எ -து தலைமகன் ஒருவழித் தணந்துழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்கும் தோழி சொல்லியது.

குறிப்பு. கலிதிரை - ஒலிக்கின்ற அலை. திளைக்கும் - இடைவிடாது நெருங்கும். மணலேறி - மணற்குன்றிலேறி. காண்கம் வம்மோ - காண்போம் வருவாயாக. தோழி என்றது தலைவியை; விளி. தோழி நாடு காண்கம் வம்மோ.

(மேற்.) மு. தலைவியை ஆற்றுவித்தது (தொல். களவு. 24, இளம்.); நம்பி. களவு. 52. (பி - ம்.) [1] 'நெடுவரை யேறி' (கூ)

200. இலங்குவீங் கெல்வளை யாய் நுதல் [1]கவினப்
பொலந்தேர்க் [2]கொண்கன் வந்தன னினியே
விலங்கரி [3]நெடுங்கண் ஞெகிழ்மதி
[4]நலங்கவர் பசலையை [5]நகுக நாமே.

எ - து உடன்போக்குத்துணிந்தவழி அதற்கு இரவின்கண் தலைமகன் வந்ததறிந்த தோழி தலைமகளைப் பாயலுணர்த்திச் சொல்லியது.

குறிப்பு. எல்வளையாய் : விளி. நுதல்கவின - நெற்றி பசலைநீங்கி அழகு பெற. கண்ஞெகிழ்மதி என்றது துயிலுணர்த்தியபடி. நலம் - அழகை. நகுகம் - இகழ்ந்து சிரிப்போம். எல்வளையாய் கொண்கன் வந்தனன்; பசலையை நகுகம், கண் ஞெகிழ்மதி.

(மேற்.) மு. இதில் அனந்தல் தீர என்றதனானே உடன்கொண்டு போதற்கு வந்தானெனப் பாயலுணர்த்தியது (தொல். அகத். 39, ந.)

(பி - ம்.) [1] 'கவின்பெறப்' [2] 'கொண்கனும்' [3] 'நெடுங்கண்ணனந்த தீர்மதி' [4] 'நலங்கிளர்' [5] 'நகுகம்யாமே' (கo)

(உo) வளைப்பத்து முற்றிற்று.

**நெய்தல் முற்றிற்று.**

**அம்மூவனர்**

---

# 3. குறிஞ்சி

## (உக) அன்னாய்வாழிப் பத்து

201. அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை
[1]தானு மலைந்தா னெமக்குந் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
என்ன மரங்கொ லவர்சார லவ்வே.

எ - து நொதுமலர் வரவின்கண் செவிலிகேட்குமாற்றால் தலைமகள் தோழிக்கு அறத்தொடுநிலை குறித்து உரைத்தது.

குறிப்பு. அன்னை வாழி வேண்டன்னை : ஐங். 202-10 : 1; குறுந். 321 : 8. என்னை - என் தலைவன்; ஐங். 110 : 3. மலைந்தான் - அணிந்தான். பொன்வீ - பொன்மலர். மணியரும்பு - இரத்தினம் போன்ற அரும்பு. என்ன மரம் என்றது வியப்பு. அவர் என்றது தலைவனை. அவரது சாரலின்கண் பொன்வீயும் மணியரும்புமுடையன என்ன மரங்கொல்.

(மேற்.) மு. இது தழையும் கண்ணியும் தந்தானென்பதுபடக் கூறி அறத்தொடு நின்றது (தொல். களவு. 24, இளம்.) தழைதந்தானெனக்கூறித் தோழி அறத்தொடு நின்றது (தொல். களவு. 23, பொருள். 13, ந.)
(பி - ம்.) [1] 'தரினு' (க)

202. அன்னாய் வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாட னூர்ந்த மாவே.

எ - து தலைமகன் வரைதல் வேண்டித் தானேவருகின்றமை கண்ட தோழி உவந்தவுள்ளத்தளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொல்லியது.

குறிப்பு. பார்ப்பனக்குறுமகப்போல - அந்தணச்சிறுமகனைப்போல. குடுமித்தலைய - குடுமியைத் தலையிலுடையன. குதிரைக்குடுமிக்குப் பார்ப்பனச் சிறுமகன்குடுமி உவமை; புறநா. 273 : 3, 310 : 7-8. மா - குதிரை. மா குடுமித்தலைய.

(மேற்.) மு. தோழி தலைவியை அன்னையென்றல் (தொல். பொருள். 52, ந.)

203. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர்நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே.

எ - து உடன்போய் மீண்ட தலைமகள், 'நீ சென்றநாட்டு நீர் இனிய வல்ல; நீ எங்ஙனம் [1]நுகர்ந்தாய்?' எனக்கேட்ட தோழிக்குக் கூறியது.

குறிப்பு. படப்பைத்தேன் - தோட்டக்கூற்றிலுள்ள தேன். மயங்குபாலினும் இனிய - கலந்த பாலைக்காட்டிலும் இனிமைபொருந்தியன. உவலைக் கூவற்கீழ - இழிந்த கிணற்றின் அடியிலுள்ள : உவலை - இழிவு; பதிற். 85 : 11; "உவலைச்சமயங்கள்" (திருவா.) "சிறுமனிச ருவலையாக்கை" (திருவாய்மொழி, 1 : 5 : 8.) தழைமூடிய எனலுமாம். மான் - மிருகங்கள். கலிழிநீர் - கலங்கல் நீர். மானுண்டெஞ்சிய நீரையுண்ணுதல்: குறுந். 56 : 1-3. அவர்நாட்டுக் கலிழிநீர் பாலினும் இனிய.

(மேற்.) மு. உடன்போய் மீண்ட தலைவி நீ சென்ற நாட்டுநீர் இனிய வல்ல எங்ஙனம் நுகர்ந்தாயென்ற தோழிக்குக் கூறியது (தொல். அகத். 43, ந.) (பி - ம்.) [1] 'நுகர்ந்தவாறெனக்' (உ)

204. அன்னாய் வாழிவேண் டன்னையஃ தெவன்கொல்
வரையர [1]மகளிரி னிரையுடன் குழீஇப்
பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி
நல்ல ணல்ல ளென்ப
தீயேன் றில்ல [2]மலைகிழ வோர்க்கே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. வரையரமகளிரின் நிரை - மலையுறைத் தெய்வமகளிர் போன்ற ஆயத்தார்நிரை ; எழுவாய். குழீஇ - கூடி. என்ப - என்பர். நிரை நல்லள் என்ப ; மலைகிழவோர்க்குத் தீயேன்தில்ல ; நல்லளாயின் தலைவன் விரைவில் வரைந்துகொள்வானே என்ற பொருள் ஒழிந்து நின்றது.

(பி - ம்.) [1] 'மகளிர்நிரை' [2] 'மலைகிழவோற்கே'

205. அன்னாய் வாழிவேண் [1] டன்னையென் றோழி
நனிநா ணுடைய [2] ணின்னு மஞ்சும்
ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்
மலர்ந்த மார்பிற் [3] பாயல்
துஞ்சிய வெய்ய ணோகோ யானே.

எ - து நொதுமலர் வரைவுவேண்டிவிட்டுழித் தலைமகட்கு உளதாகிய வருத்தம்நோக்கி, 'இவள் இவ்வாறாதற்குக் காரணம் என்னை?' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

குறிப்பு. நனிநாணுடையள் - மிக்க நாணத்தையுடையவள். நின்னும் அஞ்சும் - உன்னிடமிருந்து அஞ்சுகிறாள். பாயற்றுஞ்சிய - படுக்கையிற் போலத் துஞ்ச. தலைவன் மார்பில் துஞ்சுதல் : ஐங். 14 : 3-4, குறிப்பு. வெய்யள் - விருப்பமுடையள். நோகோ - வருந்துவேனாக. அன்னாய், தோழி, நாணுடையள், அஞ்சும், நாடன் மார்பில் துஞ்சிய வெய்யள், யான் நோகோ.

(மேற்.) அடி, 5. 'நோகோயானே' எனச் செய்கு என்னும் வாய்பாட்டுவினைமுற்று பெயர் கொண்டது (தொல். வினை. 7, ந.) மு. தோழி தலைவி வேட்கை கூறியது (தொல். களவு. 24, இளம்.)

(பி - ம்.) [1] 'டன்னைதோழி' [2] 'ணின்னினுமஞ்சும்' [3] 'பாயில்' (ரு)

206. அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குன்றத்துக் [1] காப்பா ளன்னன்
தூவலி னனைந்த தொடலை யொள்வாள்
பாசி [2] சூழ்ந்த பெருங்கழல்
தண்பனி வைகிய வரிக்கச் சினனே.

எ - து இரவுக்குறிக்கண் தலைமகன்வந்து குறியிடத்து நின்றமை யறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. உவக்காண் - உவ்விடத்தே ; ஐங். 207 : 2 ; நற். 237 : 6 ; குறுந். 367 : 3 ; அகநா. 4 : 13 ; 'உவக்காணென்பது ஒட்டி நின்ற இடைச்சொல்' (குறள். 1185, பரி.) காப்பாள் அன்னன் - காவற்காரனை ஒத்தவன். தூவலின்-மழையினால். தொடலை ஒள்வாள்-தூக்கிய ஒள்ளிய வாள் ; மதுரை. 636. 'தூவலின் னனைந்த...பெருங்கழல்' என்றது மழையையும், பாசிபடர்ந்த

நீர்நிலைகளையும் கடந்து அதர்படு துன்பங்களையும் கருதாது வந்துளான் என்றபடி.

(மேற்.) மு. தோழி தலைவியை அன்னையென்றல் (தொல். பொருள். 52, ந.)

(பி - ம்.) [1] 'காப்பானன்ன' [2] 'தூர்ந்த' (சு)

207. அன்னாய் வாழிவேண் [1] டன்னை நன்றும்
உணங்கல கொல்லோநின் றினையே யுவக்காண்
[2] நிணம்பொதி வழுக்கிற் றோன்றும்
மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே.

எ - து 'மழையின்மையால் தினை உணங்கும், [3]விளையமாட்டா; புனங் காப்பச்சென்று அவரை [4]எதிர்ப்படலாமென்று எண்ணியிருந்த இது கூடாதாயிற்று' என வெறுத்திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. உணங்கல கொல்லோ - உலராவோ. உவக்காண்: ஐங். 206. வழுக்கு - ஊன் விசேடம். நிணம்பொதி வழுக்கு: புறநா. 125: 2. மணிநெடுங்குன்று: ஐங். 209: 5; 224: 2; சிறுபாண். 1; குறுந். 240: 7. குன்று வழுக்கின் தோன்றும். குன்று கண்டு ஆறுதல்: குறுந். 249: 4.

(பி - ம்.) [1] 'டன்னை கன்றும்' [2] 'நணம்பொதி' [3] 'விளையமாட்டாத' [4] 'எதிர்ப்பட்டாலாமென்று' (எ)

208. அன்னாய் வாழிவேண் டன்னை கானவர்
கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்
பொன்மலி புதுவீத் தாஅ மவர்நாட்டு
மணிநிற மால்வரை மறைதொறிவள்
அறைமலர் நெடுங்க ணார்ந்தன பனியே.

எ - து செவிலிக்கு அறத்தொடுநின்ற தோழி அவளால் வரைவுமாட்சிமைப்பட்டபின்பு, 'இவள் இவ்வாறுபட்ட வருத்தமெல்லாம் நின்னிற்றீர்ந்தது' என்பது குறிப்பிற்றோன்ற அவட்குச்சொல்லியது.

(ப - ரை.) கிழங்ககழ் குழிநிறைய வேங்கைமலர் பரக்குமென்றது கொள்வார்க்குப் பயன்பட்டுத் தமக்குவந்த குறையைத் தம் புகழ் நிறைக்கும் பெருமையுடையாரென்பதாம்.

குறிப்பு. கானவர் - காட்டிலுள்ளோர். கிழங்ககழ் நெடுங்குழி - கிழங்கு எடுத்தற்காகத் தோண்டப்பட்ட பெரியகுழி. மல்க - நிறைய. புதுவீ - புதியமலர்கள். தாஅம் - பரக்கும். கிழங்ககழ் குழியில் மலர்வீழ்தல்: குறுந். 233: 1-2; சிலப். 10: 68-9. மணிநிற மால்வரை: ஐங். 207: 4. மறைதொறு - மறையும்பொழுது. கண்பனி: குறுந். 348: 4. ஆர்ந்தன - நிறைந்தன. பனி - பசலை. வரைமறைதொறுகண் பனியார்ந்தன. தலைவன் குன்றுமறையத் தலைவி வருந்தல்: குறுந். 240: 6-7. (அ)

209. அன்னாய் வாழிவேண் டன்னை நீமற்
றியானவர் [1] மறத்தல் வேண்டுதி யாயின்
கொண்ட லவரைப் பூவி னன்ன
வெண்டலை மாமழை சூடித்
தோன்றலா னாதவர் மணிநெடுங் குன்றே.

**எ - து** வரைவிடைவைத்துப் பிரிவின்கண் அவனை நினைவுவிடாது ஆற்றாளாகியவழி, 'சிறிதுமறந்து ஆற்றவேண்டும்' என்றதோழிக்குத் தலைமகள் கூறியது.

**(ப - ரை.)** 'வெண்டலை..........ஆனாது' என்றது மழை பெய்தற்குக் கால்வீழ்ந்த இருட்சியால் மறையப்பெறாது விளங்கித் தோன்றுதலைநோக்கி யெனக்கொள்க. (௯)

**குறிப்பு.** நீ என்றது தோழியை. மறத்தல் வேண்டுதியாயின் - மறத்தலை விரும்புவாயானால். கொண்டல் அவரைப்பூவினன்ன - மழைக்காலத்து அவரைப்பூவைப் போன்ற. மழை - மேகத்தை. ஆனாது - அமையாது. குன்று தோன்றல் ஆனாது. **(பி - ம்.)** [1] 'மறுத்தல்'

210. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்
புலவுச்சேர் துறுக லேறி யவர்நாட்டுப்
பூக்கெழு குன்ற நோக்கி நின்று
மணிபுரை வயங்கிழை நிலைபெறத்
தணிதற்கு முரித்தவ ளுற்ற நோயே.

**எ - து** காப்புமிகுதிக்கண் தலைமகள் மெலிவுகண்டு தெய்வத்தினான் ஆயிற்றென்று வெறியெடுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது.

**(ப - ரை.)** 'புலவுச்சேர்துறுகல்' என்றது யாவும் தெய்வத்தினான் ஆயின வென்று மறி முதலாயின கொன்று புலவுநாறும் நம் குன்றென்பதாம். (௧௦)

**குறிப்பு.** படப்பை - தோட்டக்கூறிலுள்ள. புலவுச்சேர் துறுகல் - புலால் நாற்றம் பொருந்திய குண்டுக்கல்; துறுகல்: **ஐங்.** 239 : 2; **புறநா.** 300 : 2. வயங்கிழை - ஒளிபொருந்திய ஆபரணங்கள். நிலைபெற - நெகிழாமல் நிலைபெற்றிருக்க. அவளுற்ற நோய் துறுகல் ஏறி அவர் குன்றம் நோக்கிநின்று தணிதற்கும் உரித்து.

(௨௧) அன்னாய் வாழிப்பத்து முற்றிற்று.

## (௨௨) அன்னாய்ப் பத்து

211. நெய்யொடு மயக்கிய [1]வுழுந்துநூற் றன்ன
வயலையஞ் சிலம்பின் றலையது
செயலையம் பகைத்தழை வாடு மன்னாய்.

எ - து தலைமகன் ஆற்றாமைகண்டு கையுறையேற்ற தோழி தலைமகள் தழையேற்கவேண்டிக் கூறியது.

குறிப்பு. நூற்றன்ன - நூற்றாற் போன்ற. வயலைக் கொடிக்கு நூற்ற உழுத்தமா உவமை. செயலை - அசோகமரம். பகைத்தழை : ஐங். 187 : 3, குறிப்பு. அன்னாய் என்றது தலைவியை.

(மேற்.) மு. தலைவன்மாட்டுத் தோழி குறைநயப்பிக்கச் சென்ற வழித் தோழி சொல்லும் குறிப்புமொழிக்கு அவள் மறைந்து அரியளாகத் தன்னொடும் அவளொடும் குறிப்பினை முன்னர்த் தடுத்துக்கொண்டு வழிபட்டு முயலும் பலவேறு பக்கத்தின்கண் தோழி கூற்று நிகழும் (தொல். களவு. 24, இளம்.); பாங்கி கையுறை புகழ்தல் : நம்பி. களவு. 31.

(பி - ம்.) [1] 'உழுந்துதூற் றன்ன' (க)

212. [1]சாத்த மரத்த பூழி லெழுபுகை
கூட்டுவிரை கமழு நாடன்
அறவற் கெவனோ நாமகல் வன்னாய்.

எ - து வரைவெதிர் கொள்ளார் [2]தமர் அவண் மறுத்தவழித் தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றது.

(ப - ரை.) சாந்தமரத்தின் இடைநிலத்து உளவாகிய அகில் சுடுபுகை அச் சந்தனப்பூ நாற்றத்தோடு கமழுநாடனென்றது தனக்குவந்த வருத்தம் பாராது தனக்குத் துணையாயினார் நலத்தொடுங்கூடி எல்லார்க்கும் பயன்பட ஒழுகும் ஒழுக்கத்தை உடையானென்பதாம்.

குறிப்பு. சாத்தமரத்த - சந்தனமரங்களின் இடைவெளி நிலத்துள்ள ; சாத்த : வலித்தல் விகாரம். பூழில் - அகில் ; பதிற். 87 : 2. கூட்டுவிரை கமழும் - கலந்து மணம் கமழ்கின்ற. அறவன் என்றது தலைவனை. அகல்வு - நீங்குதல். நாம் அறவற்கு அகல்வு எவனோ.

(பி - ம்.) [1] 'சாந்த' [2] 'தமர் மறுத்தவழி' (உ)

213. நறுவடி மாஅத்து மூக்கிறு புதிர்ந்த
ஈர்ந்தண் பெருவடுப் பாலையிற் குறவர்
உறைவீ ழாலியிற் றொகுக்குஞ் சாரல்
மீமிசை நன்னாட் டவர்வரின்
யானுயிர் வாழ்தல் [1]கூடு மன்னாய்.

எ - து 'வரைவொடுவருதலைத் துணிந்தான்' என்பது தோழிகூறக் கேட்ட தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) மாவின் மூக்கு இற்று உதிர்ந்த வடுக்களை ஆலிபோலத் தொகுக்கும் நாட்டையுடையாரென்றது விரும்புவனவற்றுக்குத் தாமாக முயலாது பெற்றுழிப் பேணும் இயல்பையுடையார் எ - று.

குறிப்பு. நறுவடிமாத்து - நல்ல மணம்பொருந்திய வடுக்களையுடைய மாமரத்தினது ; ஐங். 61 : 1, குறிப்பு. மூக்கிறுபு - மூக்கு இற்று ;

நற். 24 : 3. உறைவீழ்ஆலியின் - மழைத்துளியுடன் வீழ்கின்ற ஆலங்கட்டியைப்போல. நம்நாட்டு - நம் நாட்டிடத்தே. அவர் என்றது தலைவனை.

இயல்புடையாரென்றது தலைவியினது தந்தை முதலியோரை.

(பி - ம்.) [1] 'கூடலா மன்னாய்' (௩)

214. சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்
இருங்கல் விடரளை [1]வீழ்ந்தென வெற்பில்
பெருந்தே [2]னிறாஅல் கீறு நாடன்
பேரமர் மழைக்கண் கலிழத்தன்
சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்.

எ - து தலைமகன், 'ஒருவழித்தணப்பல்' என்று கூறியவதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) பலவின்பழம் பிறர்க்குப் பயன்படாது கல்லளையில் வீழ்கின்றுழி அவ்விடத்துளதாகிய தேனிறாலினையும் சிதைக்குமென்றது தன்னாற் பெற்ற நலம் எங்கள் இயற்கைநலத்தினையும் சிதைக்கின்றதென்பதாம்.

இதுகேட்டுக் கடிதின்வரைவானாவது பயன்.

குறிப்பு. சாரற்பலவின் - மலைச்சாரலின்கண் உள்ள பலாமரத்தினது. துணர் - கொத்து. விடரளை - வெடிப்பையுடைய பொந்தினுள். வீழ்ந்தென - வீழ. பெருந்தேன் இறால் - மிக்க தேனையுடைய கூட்டையும். கீறும்- சிதைக்கும். பேரமர் மழைக்கண் - பெரிய அமர்த்த குளிர்ச்சியையுடைய கண்; நற். 29 : 9; குறுந். 131 : 2; அகநா. 326 : 2. கலிழ - கலங்க.

பலவின் பழம் பயன்படாது உகுதல்: "பலவின், மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம், விடரளை வீழ்ந்தாங்கு" (நற். 116 : 6-8.)

(மேற்.) மு. தலைவன் புணர்ச்சி வேண்டாது பிரிவு வேண்டிய காலத்தில் தலைவிக்குத் தோழி உரைத்தது (தொல். களவு. 24, இளம்; 23, ந.) பாங்கி தலைவிக்குத் தலைவன் செலவுணர்த்தல் (நம்பி. களவு. 52.)

(பி - ம்.) [1] 'வீழ்ந்தன' [2] 'னிறலொடு' (௪)

215. கட்டளை யன்ன மணிநிறத் தும்பி
இட்டிய குயின்ற துறைவயிற் செலீஇயர்
தட்டைத் தண்ணுமைப் பின்ன ரியவர்
தீங்குழ லாம்பலி னினிய விமிரும்
புதன்மலர் மாலையும் பிரிவோர்
அதனினுங் கொடிய செய்குவ ரன்னாய்.

எ - து இரவுக்குறி நயந்த தலைமகள் பகற்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. கட்டளை - பொன்னுரைக்கும் கல். மணிநிறத்தும்பி - கரிய நிறத்தையுடைய தும்பி. பொன்னுரைகல் தும்பிக்கு; "நறவின், நறுந்தா

தாடிய தும்பி பசுங்கேழ், பொன்னுரை கல்லி னன்னிறம் பெறூஉம்" (நற். 25 : 2-4.) இட்டிய குயின்ற - சிறியதாகச் செய்யப்பட்ட. செலீஇயர் - சென்று. தட்டைத்தண்ணுமை - கிளிகடிகருவியான மூங்கில்; குறிஞ்சி. 43, ந.; நற். 147 : 2-8; குறுந். 193 : 3. இயவர் - வாச்சியக்காரர். தீங்குழல் ஆம்பலின் - இனிமையான குழலினது ஆம்பற்பண்ணைப் போல; ஆம்பலந்தீங்குழல் எனமாறி வெண்கலத்தால் குமுத வடிவாக அணைசு பண்ணிச் செறித்த ஆம்பற்குழல் எனினும் அமையும்; "இயவ ரூதும், ஆம்பலின் குழலி னேங்கி" (நற். 123 : 10-11); சிலப். 17 : "பாம்பு கபிருக்." தும்பி குழலின் இமிரும் : கார். 15; பெருங். 2 : 13 : 24, 3 : 4 : 54. அதனினும் - அம் மாலைப்பொழுதினும். 'தும்பி தட்டைத்தண்ணுமைப் பின்னர்......இனிய இமிரும்' என்றது இரவுக்குறியை நயந்த நாம் முதலில் வெறுப்ப அதை மறுத்துப் பின் நாம் மகிழ உடன்படுவார் என்றவாறு. (ரு)

216. குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
நெடும்புதற் கானத்து மடப்பிடி யீன்ற
நடுங்குநடைக் குழவி கொளீஇய பலவின்
பழந்தூங்கு கொழுநிழ [1]லொளிக்கு நாடற்குக்
கொய்திடு தளிரின் வாடிநின்
மெய்பிறி தாத லெவன்கொ லன்னாய்.

எ - து வரைவுநீட ஆற்றுளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறியது.

(பு - ரை.) புலியேற்றை பிடியீன்ற குழவியைக் கொள்ளவேண்டிக் காலம் பார்த்து மறைந்திருக்கும் நாடனென்றது தன் வஞ்சனையாலே நின் பெண்மையை வௌவுகின்றானென்பதாம்.

குறிப்பு. குறுங்கை இரும்புலி கோள்வல் ஏற்றை - குறிய கையையுடைய கொல்லுதல்வல்ல பெரிய ஆண் புலி; ஐங். 266 : 2; நற். 36 : 1; குறுந். 141 : 5. நெடும்புதல் கானத்து - பெரிய புதர்களையுடைய காட்டில். மடப்பிடி - மடமைபொருந்திய பெண்யானை. குழவி - யானைக்குட்டியை. கொளீஇய - கொள்ளுதற்கு. தூங்கும் - தொங்குகின்ற. நிழலில் ஒளிக்கின்ற. கொய்திடு தளிரின் - கொய்யப்பட்ட தளிரைப்போல. மெய் - உடல். பிறிதாதல் - மெலிந்து பசலைத்தாதல். எவன்கொல் அன்னாய் : ஐங். 217 : 4, 219 : 4; குறுந். 150 : 5.

(மேற்.) அடி, 1. ஏற்றை யென்னும் சொல் ஆற்றலொடு கூடிய ஆண்பாற்கெல்லாம் உரித்து (தொல். மரபு. 49, பேர்.) மு. தலைவனது அன்பு சிதைவுடைத்தாயின் தலைவியைத் தோழி ஆற்றுவித்தல் (தொல். களவு. 24, இளம்.) (பி - ம்.) [1] 'லொலிக்கு நாடு' (சு)

217. பெருவரை வேங்கைப் பொன்மரு ணறுவீ
மானினப் பெருங்கிளை மேய லாரும்
கானக நாடன் வரவுமிவண்
மேனி [1]பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் மீட்சியுணர்ந்த தோழி ஆற்றாளாகிய தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) இவணென்றது இவ்விடத்து எ - று. வேங்கைப்பூவை மானினம் ஆருமென்றது அவன்மனைப் பெருஞ்செல்வம் நின்கிளையாகிய நாங்களும் நின்னோடு நுகர்வேமென்பதாம்.

குறிப்பு. வேங்கைப் பொன் மருள் நறுவீ - வேங்கை மரத்தினது பொன்னொத்த நறிய மலர். மானினம் - மான் கூட்டம். மேயல் ஆரும் - மேய்கின்ற. வேங்கைப்பூவை மான்கள் உண்ணுதல்: புறநா. 224 : 14-6.

(பி - ம்.) [1] 'பசப்பறைவ' (எ)

218. நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்
மயிர்வார் முன்கை வளையுஞ் [1]செறூஉம்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
எழுதரு மழையிற் குழூஉம்
(5) பெருங்க ளுடன் வருங்கொ லன்னாய்.

எ - து தலைமகன் [2]வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்துழி அதுகேட்டு, 'இஃது என்னாங்கொல்?' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி தனக்கு நற்குறி செய்யக்கண்டு, 'கடிதின்வந்து வரைவான்' எனச் சொல்லியது.

(ப - ரை.) தன்னாற் கொள்ளப்பட்ட களிறு தப்பினதற்குப் புலி கதம் சிறந்து குழூஉமென்றது நினைத்தனவற்றிற்குக் குறை வரின் அதற்கு வெகுண்டு முடிப்பான் எ - று.

குறிப்பு. நுண் ஏர் புருவத்த - நுண்ணிய அழகிய புருவத்தையுடைய. கண்ணும் என்றது இடக்கண்ணை. ஆடும் - துடிக்கும். பெண்டிர்க்கு இடக்கண் துடித்தல் நன்னிமித்தம். செறூஉம் - நெகிழ்ச்சி நீங்கி நெருங்கும்; குறுந். 260: 3. கோள் பிழைத்த - தன்து பிடியினின்றும் தப்பியதால். கதம் சிறந்து - கோபம் மிகுந்து. மழையின் குழூஉம் - மேகத்தைப்போல ஒலிக்கும். புலி குழூஉதல் : ஐங். 274 : 2; குறுந். 321 : 6. கொல் : அசை நிலை. தலைவன் வருதற்குரிய நன்னிமித்தங்கள் : குறுந். 260 : 1-4.

(மேற்.) மு. தமர் வரைவு மறுத்துழி ஆற்றாத தலைவிக்குத் தோழி தீயகுறி நீங்கி நற்குறி தனக்குச் செய்யக் கண்டு கடிதின் வரைவரெனக் கூறியது (தொல். களவு. 23, ந.)

(பி - ம்.) [1] 'செற்றும்' [2] 'வரைவு வேண்டியவிடத்துத் தமர்' (அ)

219. கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
இருங்கல் வியலறை வரிப்பத் [1]தாஅம்
நன்மலை நாடன் பிரிந்தென
ஒண் ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்.

எ - து வரைவிடை வைத்துப் பிரிந்த அனுமைக்கண்ணே ஆற்றுளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.

(ப - ரை.) வேங்கைமலர் அகலறையிலே பரக்கும் நாடனென்றது நம் பொல்லா ஒழுக்கம் மறைய நல்லொழுக்கம் நமக்கு உதவும் நன்மையை உடையா னென்பதாம்.

குறிப்பு. கருங்கால் வேங்கை - கரிய அடிமரத்தையுடைய வேங்கை மரத்தினது; குறுந். 26 : 1. மா தகட்டு ஒள் வீ - பெரிய இதழ்களை உடைய ஒளி பொருந்திய மலர். அடி, 1 : புறநா. 202 : 18 - 9. வியலறை - பெரிய பாறையை. வரிப்ப - கோலஞ் செய்ய. தாஅம் - தாவும், பரக்கும். வேங்கைப்பூ கல்லின் மேல் உகுதல் : நற். 257 : 5-6 ; குறுந். 47 : 1 ; அகநா. 232 : 7-9. பிரிந்தென - பிரிய. பசப்பது - பசலைநிறங் கொள்வது.

(மேற்.) மு. திணை மயக்குறுதலுள் இது குறிஞ்சியுட் பாலை (தொல். அகத். 9, ந.) (பி - ம்.) [1] 'தாஅய' (கூ)

220. [1]அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி
ஆடுகழை யடுக்கத் திழிதரு நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவள்
(5) மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்.

எ - து நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை.) அலங்கு......நாடனென்றது இவள் மேல்வைத்த தண்ணளி நம்மிடத்தும் வந்து இடையறாது ஒழுகும் எ - று.

குறிப்பு. அகன்கண் அருவி - அகன்ற இடத்தையுடைய அருவி. கழை அடுக்கத்து - மூங்கில் வரிசைகளில். அருவி உவமை இடையறாமைக்கு; ஐங். 228. திருவிறல் வியன் மார்பு - அழகிய வெற்றியையுடைய பரந்த மார்பை. கலிழும் - கலங்கும்.

(மேற்.) மு. அறத்தொடு நிலையில் உண்மை செப்பல் (தொல். களவு. 24, இளம்.) தலைவிசுற்றத்தார் தலைவற்கு வரைவு மறுத்த வழி தோழி அறத்தொடு நிலையாற் கூறும்; அறத்தொடு நிலையில் உண்மை செப்பல் இது (தொல். களவு. 23, பொருள். 13, ந.) (பி - ம்.) [1] 'அல்கன்மழை' (கo)

(உஉ) அன்னாய்ப்பத்து முற்றிற்று.

## (உரு) அம்மவாழிப் பத்து

221. அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் னாய்கவின் றொலைய
நன்மா மேனி பசப்பச்
[1]செல்வ லென்பதம் மலைகெழு நாடே.

எ - து 'ஒருவழித்தணந்து வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல்' என்று தலைமகன் கூறக்கேட்ட தலைமகள் அவன் சிறைப்புறத்தானாய்க் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) கடிதின் வரைதல் பயன்.

குறிப்பு. அம்ம வாழி தோழி : ஐங். 31 : 1, குறிப்பு. காதலர் - தலைவன். ஆய் கவின் - மெலிந்த அழகு. பாவையன்ன ஆய் கவின்; பட்டாங்கு கூறுதற்கண் வந்தது; சீவக. 1364. செல்வல் - போவேன். காதலர், கவின் தொலைய மேனி பசப்ப நாடு செல்வல் என்ப. பசலையினால் கவின் தொலைதல் : ஐங். 35 : 4.

(மேற்.) மு. இட்டுப் பிரிவிரங்கின் தலைவிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 21, இளம்.) (பி - ம்.) [1] 'செல்வ னென்பதம்' (க)

222. அம்ம வாழி தோழி நம்மூர்
நளிந்துவந் துறையு நறுந்தண் [1]மார்வன்
இன்னினி வாரா மாறுகொல்
சின்னிரை யோதியென் னுதல்பசப் பதுவே.

எ - து குறியிரண்டன் கண்ணும் வந்து ஒழுகும் தலைமகன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழி, 'நின் நுதல் பசத்தற்குக் காரணம் என்னை?' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. நளிந்து - செறிந்து; பதிற். 52 : 16. இன்னினி - இப்பொழுதே; "இன்னினியே செய்க வறவினை" (நாலடி. 29.) வாராமாறு - வாராமையின்; மாறு : ஏதுப்பொருள் படுவதோர் இடைச்சொல்; புறநா. 4 : 17, உரை; குறுந். 309 : 8. சில் நிரை ஓதி - சிலவாகிய வரிசையையுடைய கூந்தல். நுதற்பசப்பு; ஐங். 219 : 4. (பி - ம்.) [1] 'மார்பன், இவணினி' (உ)

223. அம்ம வாழி தோழி நம்மலை
வரையா மிழியக் கோட னீடக்
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்
தண்பனி வடந்தை [1]யச்சிரம்
(5) முந்துவந் தனர்நங் காத லோரே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வருகின்றமை அறிந்த தோழி தலைமகட்கு மகிழ்ந்து சொல்லியது.

**குறிப்பு.** வரை - பக்க மலையில். ஆம் - நீர்; **குறுந்.** 308 : 5; **கலி.** 48 : 1. கோடல் - வெண்காந்தட்பூ. நீட - மலர. காதலரைப் பிரிந்தோர். கையற - செயலற்று வருந்த. தலைவரைப் பிரிந்தோர் பனியால் வருந்துதல் : **குறுந்.** 68 : 3. நலியும் - வருத்தும். வடந்தை அச்சிரம் - வாடையையுடைய முன் பனிக்காலத்துக்கு. அச்சிரம் : **சிலப்.** 14 : 105. வாடையும் பனியும் : **குறுந்.** 76 : 5-6. முந்து - முன்னே. காதலோர் வந்தனர்.

**(மேற்.)** மு. வரைவிடைப் பிரிந்தோன் குறித்த பருவத்திற்கு முன் வருகின்றமையறிந்த தோழி தலைவிக்குக் கூறியது (**தொல்.** களவு 23, **ந.**)

**(பி - ம்.)** [1] 'அற்சிரம்', 'அர்ச்சிரம்' (௩)

224. அம்ம வாழி தோழி நம்மலை
மணிநிறங் கொண்ட மாமலை வெற்பில்
துணிநீ ரருவி நம்மோ டாடல்
எளிய மன்னு லவர்க்கினி
(5) அரிய வாகுதன் மருண்டனென் யானே.

**எ - து** இற்செறிப்புணர்ந்த தலைமகள் ஆற்றளாய்த் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

**குறிப்பு.** மணிநிறங்கொண்ட மாமலை : **ஐங்.** 207 : 4, குறிப்பு. வெற்பில்- பக்க மலையில். துணிநீர் - தெளிந்த நீர். அவர்க்கு - தலைவனுக்கு. அவர்க்கு நம்மோடு அருவியாடல் எளிய மன்; மன் ஒழியிசைப் பொருளில் வந்தது. தலைவனோடு தலைவி அருவியாடல் : **குறுந்.** 353 : 1-3. அரியவாகுதல் - இற்செறிப்பினால் அரியதாக ஆகுதலின். யான் மருண்டனென். (௪)

225. அம்ம வாழி தோழி பைஞ்சுனைப்
பாசடை நிவந்த பனிமலர்க் குவளை
உள்ளகங் கமழுங் கூந்தன் மெல்லியல்
[1]ஏர்திக ழொண்ணுதல் பசத்தல்
(5) ஓரார் கொன்னங் காத லோரே.

**எ - து** மெலிவுகூறி வரைவுகடாவக்கேட்ட தலைமகன் தான் வரைதற் பொருட்டால் ஒருவழித்தணந்து நீட்டித்தானாக, ஆற்றளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.

**குறிப்பு.** பசு அடை நிவந்த - பசுமையான இலைக்கு மேலே உயர்ந்து தோன்றும்; **குறுந்.** 9 : 4. குவளை உள்ளகம் கமழும் கூந்தல் - உட்புறத்தே குவளை மலர் மணம் கமழ்கின்ற கூந்தல் : **குறுந்.** 270 : 6-8, 300 : 1. மெல்லியல் : தலைவியை நோக்கிய விளி. ஓரார் - அறியார். நம் காதலோர் நுதல் பசத்தல் ஓரார் கொல்; நுதல் பசத்தலை அறிவாராதலின் விரைவில் வருவார் என்றபடி. **(பி - ம்.)** [1] 'ஓதி யொண்ணுதல்' (௫)

226. அம்ம வாழி தோழி நம்மலை
நறுந்தண் சிலம்பி னாறுகுலைக் காந்தட்
கொங்குண் வண்டிற் பெயர்ந்துபுற மாறிநின்
[1]வன்புடை விறற்கவின் கொண்ட
அன்பி லாளன் வந்தன னினியே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் நீட்டித்து வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. சிலம்பு - பக்கமலை. நாறு குலைக்காந்தள் - நறுமணம் கமழ்கின்ற கொத்தான காந்தட் பூவினது. சிலம்பில் நாறும் காந்தள் : குறுந். 239 : 3 ; கலி. 59 : 3 ; நற். 379 : 12-3. கொங்குண் வண்டின் - தேனையுண்ணும் வண்டைப்போல ; குறுந். 2 : 1. தலைவனுக்கு வண்டு : ஐங். 90 : 1-2 ; கலி. 40 : 24-5. விறற்கவின் - வெற்றி பொருந்திய அழகை ; ஐங். 229 : 4, 230 : 4. அன்பிலாளன் - அன்பிலாதவனாகிய தலைவன்.

(மேற்.) மு. பாங்கி தலைமகட்குத் தலைமகன் வந்தமை உணர்த்தல் (நம்பி. களவு. 52.) (பி - ம்.) [1] 'வனப்புடை' (௬)

227. அம்ம வாழி தோழி நாளும்
நன்னுதல் பசப்பவு நறுந் [1]தோ ணெகிழவும்
ஆற்றலம் யாமென மதிப்பக் கூறி
நப்பிரிந் துறைந்தோர் மன்றநீ
[2]விட்டனை யோவவ ருற்ற சூளே.

எ - து ஒருவழித்தணந்துவந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. தோளும் நுதலும் இணைத்துக் கூறப்படுதல் : ஐங். 230 : 3. யாம் ஆற்றலம் - நான் பொறுக்க மாட்டேன். நப் பிரிந்து - நம்மைப் பிரிந்து. உறைந்தோர் - தங்கியவர். நீ என்றது தலைவியை. விட்டனையோ - மறந்து விட்டனையோ. அவர் - தலைவன். நீ அவருற்ற சூளை விட்டனையோ? அல்லையேல் இப்பொழுதே மறந்துவிடு என்று தலைவன் சூள் தவறினமையை அறிவுறுத்தியது. (பி - ம்.) [1] 'தோணெகிழவும்' [2] 'விட்ட வினையோ' (௭)

228. அம்ம வாழி தோழி நம்மூர்
நிரந்திலங் கருவிய நெடுமலை நாடன்
இரந்துகுறை யுறாஅன் பெயரின்
என்னா வதுகொனம் மின்னுயிர் நிலையே.

எ - து தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர் மறுத்துழி அவர் கேட்கு மாற்றால் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி அறத்தொடுநின்றது.

(ப - ரை.) 'நிரந்து இலங்கு அருவிய நெடுமலைநாடன்' என்றது சேர்ந்தாருடன் இடையறாத நட்பையுடையான் எ - று.

குறிப்பு. நிரந்திலங்கு அருவி - இடையறுது வீழ்ந்து விளங்குகின்ற அருவி. இரந்து குறையுறுனய்ப் பெயரின்; குறை - காரியம்; ஐந். எழு. 14. பெயரின் - நமர் மறுக்க நீங்கிச்சென்றுல். நம் இன்னுயிர்நிலே என்னுவது கொல்; குறுந். 319 : 8. (அ)

229. அம்ம வாழி தோழி நாமழப்
பன்னுள் பிரிந்த வறனி லாளன்
வந்தன னேமற் றிரவிற்
பொன்போல் விறற்கவின் கொள்ளுநின் னுதலே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலேமகன் மீண்டானென்பது கேட்டுத் தலேமகட்கு எய்திய கவினேத் தோழி தான் அறியாதாள்போன்று அவளே வினுவியது.

குறிப்பு. பன்னுள் - பலநாள். அறனிலாளன் - தருமமற்றவன். தலேவன் பிரிவால் தலேவி அழல்: ஐங். 232. நின்னுதல் பொன்போல் கவின் கொள்ளும், நாமழப் பிரிந்த அறனிலாளன் இரவில் வந்தனனே. பொன் போற் கவின் கொள்ளும் நுதல்: ஐங். 105 : 4, 230 : 4. பிரிந்த தலேமகன் வரத் தலேவி கவின் எய்தல்: ஐங். 238 : 4-5. (கூ)

230. அம்ம வாழி தோழி நம்மொடு
சிறுதினேக் காவல னுகிப் பெரிதுநின்
மென்றேண் ஞெகிழவுந் திருநுதல் பசப்பவும்
பொன்போல் விறற்கவின் றெலேத்த
(5) குன்ற நாடற் கயர்வர்நன் மணனே.

எ - து தலேமகன் வரைவுவேண்டித் தமரை விடுத்துழி மறுப்பர் கொல்லோவென்று அச்சமுறுகின்ற தலேவிக்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. தினேக்காவலனுகி - தினேப்புனத்தில் காவல் காப்பானுகி. தோள் ஞெகிழ்தலும் நுதல் பசத்தலும்: ஐங். 227 : 2. பொன்போல் கவின்: ஐங். 105 : 4; நற். 10 : 2; குறுந். 101 : 4, 319 : 6; அகநா. 212 : 1-2. தொலேத்த - அழித்த. அயர்வர் - செய்வர். மணன் - திருமணத்தை. நாடற்கு மணனே அயர்வர்.

(மேற்.) மு. தமர் வரைவுடம்பட்ட தன்மையினுல் தலேவியை வற்புறுத் தற்கண் தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 24, இளம்.) பாங்கி தமர் வரைவெதிர்ந்தமை தலேமகட் குணர்த்தல் (நம்பி. வரைவு. 4.) (கo)

(உரு) அம்மவாழிப்பத்து முற்றிற்று.

## (உச) தெய்யோப் பத்து

231. யாங்கு [1]வல்லுநையோ வோங்கல் வெற்ப
இரும்பல் கூந்தற் றிருந்திழை யரிவை
திதலை மாமை தேயப்
பசலை பாயப் பிரிவு தெய்யோ.

எ - து ஒரு வழித் தணந்துவந்த தலைமகற்குத் தோழி கூறியது.

குறிப்பு. யாங்கு - எப்படி. வல்லுநையோ - வல்லவனுனையோ. வெற்ப : விளி. இரும்பல் கூந்தல் - கரிய பலவாகிய கூந்தல் ; ஐங். 281 : 3 ; குறுந். 19 : 5 ; அகநா. 142 : 18 ; திதலை - தேமல். மாமை தேயப் பசலை பாய்தல் : குறுந். 27 : 4-5. தெய்ய - அசைநிலை இடைச்சொல் ; தெய்யோ வெனத் திரிந்தது. வெற்ப, பிரிவில் யாங்கு வல்லுநையோ.

(மேற்.) மு. பிரிந்து மீண்டுவந்த தலைவன் தன்னொடு நொந்து வினுதல் (நம்பி. களவு. 52.) (பி - ம்.) [1] 'வல்லுனையோ', 'வல்லினையோ' (க)

232. போதார் கூந்த லியலணி யழுங்க
[1]ஏதி லாளனை நீபிரிந் ததற்கே
அழலவிர் மணிப்பூ ணனையப்
பெயலா னுவென் கண்ணே தெய்யோ.

எ - து ஒருவழித் தணந்துவந்த தலைமகன், 'நான்பிரிந்தநாட்கண் நீர் என்செய்தீர் ?' எனக்கேட்கத் தோழி அவற்குச் சொல்லியது.

குறிப்பு. போது - மலர். இயலணி என்றது தலைவியை. அழுங்க - இரங்க. ஏதிலாளனை - ஏதிலாளன் தன்மையையுடையாய் ; குறுந். 191 : 5. மணிப்பூண் - அழகிய ஆபரணங்கள். பெயல் - கண்ணீர் பெய்தலை. ஆனு - நீங்கா. என் கண் : தான் அவள் என்ற வேற்றுமையின்றிக் கூறியது. நீ பிரிந்ததற்கு என் கண் பூண் நனையப் பெயலை ஆனு.

(மேற்.) மு. இப்பாடலது ஈற்றடியை முச்சீராகப் பிரித்தல் தகாது ; ஆசிரியம் முச்சீரால் இறுக என ஓத்து இலாமையின். அதனை வகையுளி சேர்த்தி முறையே புளிமா, தேமா, தேமா, தேமா என அலகிடுக (யா. வி. 95.) பாங்கி தலைவியை ஆற்றுவித்திருந்த அருமை தலைவற்குச் சொல்லல் (நம்பி. களவு. 52.) (பி - ம்.) [1] 'ஏதிலாட்டியை' (உ)

233. வருவை யல்லை [1] வாடைநனி கொடிதே
அருவரை மருங்கி னுய்மணி வரன்றி
ஒல்லென விழிதரு [2] மருவிநின்
கல்லுடை நாட்டுச் [3] செல்ல றெய்யோ.

எ - து 'ஒருவழித்தணந்து வரையவேண்டும்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) 'ஆய்மணி வரன்றி ஒல்லென இழிதரும் அருவி நின் கல்லுடை நாட்டு' என்றது 'செல்லின் வரைதற்கு வேண்டுவன கொண்டு வருவாயாக' என்று உணர்த்தியவாறு.

குறிப்பு. வருவை அல்லை - வாராய். வரன்றி - வாரி யடித்துக்கொண்டு. மணி வரன்றி வீழும் அருவி; "மணிவரன்றி, வீழ் மருவி விறன்மலை" (நாலடி. 369.) கல் - மலை. செல்லல் - செல்லாதே.

(மேற்.) மு. பாங்கி தலைமகனைச் செலவு விலக்கல் (நம்பி. களவு. 52.)

(பி - ம்.) [1] 'வாடை கொடிதே' [2] 'மருவிநுன்' [3] 'செல்லலெறெய்யோ' (ங)

234. மின்னவிர் வயங்கிழை ஞெகிழச் சாஅய்
நன்னுதல் [1] பசத்த லாவது துன்னிக்
கனவிற் காணு மிவளே
நனவிற் காணாணின் மார்பே தெய்யோ.

எ - து இடைவிடாது வந்து ஒழுகாநின்றே களவுநீடாமல் வரைதற்கு முயல்கின்ற தலைமகன் தலைமகள் வேறுபாடுகண்டு, 'இதற்குக் காரணம் என்?' என்று வினவியவழி, 'நின்னைக் கனவிற்கண்டு விழித்துக் காணாளாய் வந்தது' எனத் தோழி சொல்லி வரைவு முடுக்கியது.

குறிப்பு. மின் - ஒளி. சாஅய் - மெலிந்து. இவள் - தலைவி. நனவில் நின் மார்பைக் காணாள், ஆதலின் சாஅய் நுதல் பசத்தல் ஆவது. அடி, 3-4: "துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால், நெஞ்சத்த ராவர் விரைந்து" (குறள். 1218.) இது கனவு நலிவுரைத்தல் எனப்படும்.

(மேற்.) மு. கனவு நலிபுரைத்தது (நம்பி. களவு. 50.)

(பி - ம்.) [1] 'பசத்தலயாவது' (ச)

235. கையுற வீழ்ந்த மையில் வானமொ
டரிது [1] காதலர்ப் பொழுதே யதனால்
தெரியிழை தெளிர்ப்ப முயங்கிப்
பிரியல மென்கமோ வெழுகமோ தெய்யோ.

எ - து உடன்போக்கு நேர்வித்தபின்பு தலைமகன் உடன்கொண்டு போவான் இடையாமத்து வந்துழித் தலைமகட்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. மை - மேகம். பொழுது அரிது. தெரியிழை - ஆராய்ந்தணியப்பட்ட அணிகள். தெளிர்ப்ப - ஒலிப்ப. முயங்கி - கூடி. பிரியலம் என்கமோ - பிரியோம் என்போமோ. எழுகமோ - தலைவனுடன் செல்வோமோ.

(பி - ம்.) [1] 'காதலர் பொழுதே' (ரு)

236. அன்னையு மறிந்தன ளலரு மாயின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரும்
இன்னா வாடையு மலையும்
நும்மூர்ச் செல்க மெழுகமோ தெய்யோ.

எ - து களவொழுக்கம் வெளிப்பட்டமையும் தம் மெலிவும் உணர்த்தித் தோழி உடன்போக்கு நயந்தாள்போன்று வரைவுகடாயது.

குறிப்பு. அலர் - பலர்அறிந்துகூறும் பழிமொழி. ஆயின்று - உண்டாயிற்று. புலம்புகொள - தனிமையை யடைய. உறுதரும் - தீண்டும். இன்னுவாடை - தீய வாடைக்காற்று. அலேயும் - வருத்தும். நும்மூர் என்றது தலைவனூரை. செல்வம் - போவோம். எழுகமோ - எழுவாயாக. அறிந்தனள், ஆயின்று, உறுதரும், அலேயும் எழுகமோ.

(மேற்.) மு. எண்ணுதற்கரிய பலநகையாட்டுக்களை (அலர் முதலியவற்றை)த் தலைவனிடம் குறிக்கும்போது தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 24, இளம்.) தோழி நல்ல கூறுபாடுடைய சொற்களை அசதியாடிக் கூறுதல் (தொல். பொருள். 43, ந.) (சு)

237. காமங் கடவ [1] வுள்ள மினைப்ப
யாம்வந்து காண்பதோர் பருவ மாயின்
ஓங்கித் தோன்று முயர்வரைக்
கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.

எ - து அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு அவன் பின்புவந்துழி அவற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. கடவ - செலுத்த. இனைப்ப - வருந்த. வரைக்கு - மலைக்கு. நும்மூர் வரைக்கு யாங்கெனப் படுவது.

(மேற்.) மு. தோழி கூற்றுள் ஊர் சுட்டித் தலைவன்மாட்டுத் தோன்றும் கிளவி (தொல். களவு. 24, இளம்.) தோழி கூற்றுள் ஊரை இறப்பக் கூறியது (தொல். களவு. 23, ந.) இறைவன் மேல் பாங்கி குறிபிழைப்பேற்றல் (நம்பி. களவு. 44); இ. வி. 519.

(பி - ம்.) [1] 'வுள்ள மினைய', 'வுள்ள மிளைப்ப' (எ)

238. வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும்
குருமயிர்ப் புருவை யாசையி னல்கும்
மாஅ லருவித் தண்பெருஞ் சிலம்ப
[1] நீயிவண் வரூஉங் காலை
(5) மேவரு மாதோ விவணலனே தெய்யோ.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகனுக்கு, 'இவள்கவின் நீ வந்த காலத்து வருதலால் நீ போனகாலத்து அதன்தொலைவு உனக்கு அறியப் படாது' எனத் தோழி சொல்லி வரைவுகடாயது.

(ப - ரை.) வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும் பின்பு வரக்கூடு மென்னும் ஆசையாலே புருவை தங்குமென்றது இவளும் இவ்வாறே நின்னைக் காணலாமென்னும் ஆசையாலே உயிரோடு வாழாநின்றாளென்பதாம்.

குறிப்பு. வார்கோட்டு வயத்தகர் - நீண்ட கொம்பையுடைய வலிமிக்க ஆட்டுக்கிடா. மாறினும் - நீங்கிப்போயினும். குருமயிர்ப் புருவை - நிறம் பொருந்திய மயிரையுடைய பெண்ணாடு; நற். 321 : 1. அல்கும் - தங்கும். மாஅல் அருவி - பெரிய அருவி. வருஉங் காலை - வந்த காலத்தில். மேவரும் - பொருந்தும். இவள் நலன் நீ வருஉம் காலை மேவரும். தலைவனோடு நலம் வருதல் : ஐங். 229. (பி - ம்.) [1] 'நீயவண்' (அ)

239. [1]சுரும்புணக் களித்த புகர்முக வேழம்
இரும்பிணர்த் துறுகற் பிடிசெத்துத் தழூஉநின்
குன்றுகெழு நன்னாட்டுச் சென்ற பின்றை
நேரிறைப் பணைத்தோண் ஞெகிழ
(5) வாரா யாயின் வாழேந் தெய்யோ.

எ - து 'வரைவிடை வைத்துப் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) மதவேழம் துறுகல்லைப் பிடியென்று தழூவும் நாடனாதலால் நினக்குத் தகுதியல்லாதாளொருத்தியைத் தகுதியுடையாளென்று வரையவுங்கூடுமென நகையாடிக் கூறியது.

குறிப்பு. சுரும்புண்ணக் களித்தல் கூறினமையின் மதம் உடைமை பெறப்பட்டது. புகர் - புள்ளி. வேழம் - யானை. பிணர் - சருச்சரை. துறுகல் - குண்டுக்கல்லை. பிடி செத்து - பெண் யானை என நினைத்து. துறுகல்லிற்குப் பிடி : மலைபடு. 384 ; குறுந். 111 : 4-5 ; கலி. 108 : 40. இறைப் பணைத்தோள் : ஐங். 181 : 1, குறிப்பு. வாழேம் - வாழமாட்டோம்.

(பி - ம்.) [1] 'கரும்புணக் களித்த' (கூ)

240. [1]அறியே மல்லே மறிந்தன மாதோ
பொறிவரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த னாறுநின் [2]மார்பே தெய்யோ.

எ - து தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதானமை [3] அறிந்து தலைமகள் புலந்தவழி, அவன் அதனை இல்லையென்று மறைத்தானாகத் தோழி சொல்லியது.

குறிப்பு. அறியேம் அல்லேம் - அறியாதவராக இல்லை. அறிந்தனம் - அறிந்துகொண்டோம். பொறி - புள்ளிகள். சிறைய - சிறகையுடையவான. சாந்தம் - சந்தனம். நறியோள் - நறுநாற்றங் கொண்டவள் ; என்றது பரத்தையை. நின் மார்பு நறியோளது கூந்தல் நாறும் ; அதனால் புறத்தொழுக்கம் உளதானமையை அறிந்தனம்.

(மேற்.) மு. இது புறத்தொழுக்கம் இன்றென்றாற்குத் தோழி கூறியது ; திணை மயக்குறுதலுள் குறிஞ்சிக்கண் மருதம் நிகழ்ந்தது (தொல். அகத். 12, ந.) இரந்துகொண்டு தன் காரியத்தைக் கூறுதலுற்ற தலைவனைத்

தோழி, 'நுமது கூட்டத்தினை யான் முன்னே அறிவல்' என வாய்மை கூறல் (தொல். பொருள். 43, ந.) புறத்தொழுக்கம் இன்றென்றற்குத் தோழி கூறியது; இதில் ஊடல் வந்தது; குறிஞ்சித் திணையொடு உரிப்பொருள் மயங்கி வந்தது (இ. வி. 394.)

(பி - ம்.) [1] 'அறியேமல்லோம்' [2] 'மார்பேள' [3] 'அறிந்த தலைமகள்' (கO)

(உச) தொய்யோப்பத்து முற்றிற்று.

## (உரு) வெறிப் பத்து

241. நம்முறு துயர நோக்கி யன்னை
வேலற் றந்தா ளாயினவ் வேலன்
வெறிகமழ் நாடன் கேண்மை
அறியுமோ தில்ல செறி [1]யெயிற் றோயே.

எ - து இற்செறித்தவழித் தலைமகட்கு எய்திய மெலிவுகண்டு, 'இஃது எற்றினான் ஆயிற்று?' என்று வேலனைக் கேட்பத் துணிந்துழி அறத்தொடு நிலை துணிந்த தோழி செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. நம்முறு துயரம் - நம்மை உற்ற துயரத்தை. வேலனைத் தந்தாளாயின். வெறி - வாசனை. கேண்மை - நட்பை. எயிற்றோயே என்றது தலைவியை; விளி. எயிற்றோயே! வேலன், நாடன் கேண்மையை யறியுமோ.

(மேற்.) வெறியாட்டிடத்துத் தலைவி வெருவினாற் கூறியது (தொல். களவு. 21, இளம்.) (பி - ம்.) [1] 'யெயிற்றுயே' (க)

242. அறியா மையின் வெறியென மயங்கி
அன்னையு மருந்துய ருழந்தன [1]ளதனால்
எய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்
ஆய்மல ருண்கண் பசப்பச்
(5) செய்மலை நாடன் செய்த நோயே.

எ - து தலைமகள் அறத்தொடுநிலை நயப்பவேண்டித் தோழி அவட்குச் சொல்லியது.

(ப - ரை.) செய்மலை நாடன் செய்த நோயை அன்னை அறியாது விடுதல் கொடிது; அறிவிக்கவேண்டுமென்பதாம் எ - று.

குறிப்பு. வெறி - வெறியாட்டு. அன்னை - செவிலித்தாய். எய்யாது - அறியாமல். சேய்மலை - நெடுந்தூரமுள்ள மலை. நாடன் செய்த நோயை (நீக்க) அன்னை வெறியென மயங்கித் துயர்உழந்தனள். தலைவனால் நோயும் பசலையும் உண்டாதல்: குறுந். 13: 4-5; கலி. 82: 20-21; குறள் 1183.

(மேற்.) மு. இது வெறியென அன்னை மயங்கினமை (தொல். களவு. 24, ந.) (பி - ம்.) [1] 'ளதனான், அறியாது விடுதலோ' (உ)

243. கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்
அதுமனங் [1]கொள்குவை யனையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே.

எ - து தாயுழை அறியாமை கூறித் தோழி வெறி விலக்கியது.

(ப - ரை.) அறியா வேலன் யாது கேட்பினும் வெறியெனக் கூறும்; அவனை இதற்கும் கேட்க மனங்கொள்ளா நின்றாய் எ - று.

குறிப்பு. கறி - மிளகுகொடி. கறிவளர் சிலம்பு : குறுந். 288 : 1; அகநா. 2 : 6; புறநா. 168 : 2. கடவுளைப் பேணி. அனை : தாயை நோக்கிய விளி. புலம்பிய - வருந்திய. கண் புலம்பிய நோய் - அழுதல்; மெய்ப்பாடு. இவள் நோய்க்கு வேலன் வெறியெனக் கூறும்.

(மேற்.) மு. தலைவியைத் தலைவற்குக் கொடுக்க வேண்டுமென்பது படத் தோழி கூறியது (தொல். களவு. 24, இளம்.) இது தாயறியாமை கூறி வெறி விலக்கியது (தொல். களவு. 23, ந.) (பி - ம்.)[1] 'கொள்வை யன்னையிவள்' (௩)

244. அம்ம வாழி தோழி [1]பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயின்
என்பயஞ் செய்யுமோ [2]வேலற்கவ் வெறியே.

எ - து வெறியாடல் துணிந்துழி விலக்கலுறுந்தோழி செவிலி கேட்கு மாற்றால் தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. நெடுந்தகையினது குன்றத்தைப் பாடானாயின்; தலைவன் குன்றைப் பாடுதல் : குறுந். 23 : 4. பயம் - பயனை. நெடுந்தகையது குன்றம் பாடானாயின் வேலற்கு அவ்வெறி என் பயம் செய்யுமோ?

(மேற்.) மு. செவிலி அறிவரை வினவக் குறி பார்த்தவழி தலைவியை முன்னிலையாகத் தோழி கூறியது (தொல். களவு. 24, இளம்.) இது தோழி தாயறியாமை கூறி வெறிவிலக்கத் தலைவிக்குக் கூறியது (தொல். களவு. 23, ந.) (பி - ம்) [1] 'புனமலர்' [2] 'வேலற்கு வெறியே' (௪)

245. பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென [1] மொழியு மாயின்
கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே.

எ - து தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.

(ப - ரை.) கன்னமென்பது நோய்தணித்தற்குப் பண்ணிக்கொடுக்கும் படிமம். கெழுதகையென்பது உரிமை; இவளை அணங்கியோற்கு வெறியாட்டு உரிமையன்றென்பதாம் எ - று.

குறிப்பு. கழங்கு - கழற்சிக்காயை. கழங்கு மெய்ப்படுத்தல்: ஐங். 246 : 2, 249 : 1, 250 : 1. கன்னந்தூக்கி - நோய் தணித்தற்குப் பண்ணிக் கொடுக்கும் படிமத்தைத் தூக்கி; ஐங். 247 : 2. முருகு என - முருகக் கடவுளே என்று. அடி, 3 : ஐங். 247 : 3. கெழுதகை கொல் - உரிமையோ; அன்று என்றபடி. இவளை என்றது தலைவியை. அணங்கியோற்கு - வருத்திய தலைவனுக்கு. அணங்கியோற்குக் கெழுதகை கொல்; ஆதலின், வெறியாட்டு நிகழுமுன்னம் வரைந்து கொள்வாயாக என்றபடி.

(பி - ம்.) [1] 'மொழியு மாகின்' (ரு)

246. வெறிசெறித் தனனே வேலன் கறிய
கன்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉ
..............................................
மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து
மன்றிற் பையு டேரும்
குன்ற நாட னுறீஇய நோயே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாய்நின்றுழி அவன் கேட்குமாற்றால் வெறி நிகழாநின்றமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) பயிர்விளைப்பார் விலங்குகள் நலியாமைக்குக் கழலைக் கண்ணாக உறுத்திப் பொய்ம்மைவகையாற் பண்ணிவைத்த பெண்பாற் புலியைப் புணர்ந்து புலிப்போத்துப் படப்பைநடுவே துயரந்தீருமென்றது வரைந்து கொளநினையாது இக்களவிற்புணர்கின்ற மாயப்புணர்ச்சியானே இன்பம்முடிய நுகர்கின்றானென்பதாம்.

குறிப்பு. வெறிசெறித்தனன்-வெறியாட்டத்திற்கு நெருக்கினன். கறிய - மிளகுக் கொடிகளையுடைய. கன்முகை - மலைக் குகையிலுள்ள. வயப்புலி - வலிவுள்ளபுலி. கழங்கு மெய்ப்படூஉ - கழற்சிக்காயைக் கண்ணாக வைத்து. மெய்ம்மை யன்ன - உண்மையான பெண்புலியைப் போலத் தோன்றுகின்ற. மன்றில் - தோட்டத்தின் நடு; ஐங். எழு. 4. பையுள் - துயரம். உறீஇய - பொருந்திய. நோய்க்கு வேலன் வெறி செறித்தனன். (சு)

247. அன்னை தந்த தாகுவ தறிவன்
பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயின்
அருவரை நாடன் பெயர்கொலோ வதுவே.

எ - து வெறிவிலக்கலுறுந்தோழி தமர்கேட்பத் தலைமகளை வினவுவாளாய்ச் சொல்லியது.

குறிப்பு. அறிவன் - வெறியாட்டாளன். கன்னந்தூக்கி : ஐங். 245 : 2, குறிப்பு. அருவரை நாடன் பெயர் அதுவே கொலோ?

(மேற்.) அடி, 2. கன்என்னும் சொல் வேற்றுமைக்கண் அகரமும் வரும் வல்லெழுத்தும் பெற்று முடியும்; 'கன்னந்தூக்கி' என்பதோ வெனின், அது மகரவீற்றுப் பொருட்பெயர் (தொல். புள்ளி மயங்கு. 51, ந.)

மு. வெறியாட்டு நிகழ்வுழித் தோழி தமர் கேட்பக் கூறியது (தொல். களவு. 23, ந.) (எ)

248. பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்
[1] கழங்கினா னறிகுவ தென்றால்
நன்றா லம்ம நின்றவிவ ணலனே.

ஏ - து தலைமகள் வேறுபாடுகழங்கினால் தெரியுமென்று வேலன்கூறிய வழி, அதனைப் பொய்யென இகழ்ந்ததோழி வெறிவிலக்கிச் செவிலிக்கு [2] அறத்தொடுநின்றது.

(ப - ரை.) நின்ற இவள்நலனென்றது கற்புடைமையை.

குறிப்பு. பெய்ம்மணல் முற்றம் - மணல் விரிக்கப்பட்டுள்ள முற்றம்; முற்றத்தில் மணல் விரித்திருத்தல்: மணி. 1 : 50-51. மலைவான் மாறுபாட்டினால். சினைஇய - சினங்கொண்ட. கழங்கினான் அறிவது - கழற்சிக்காயை இட்டு அறிவது. நின்ற இவள் நலன் நன்று. கழங்கால் அறிய இயலாது என்றபடி.

(மேற்.) மு. இது வேலன் கழங்கு பார்த்தமை கூறிற்று (தொல். களவு. 24, ந.)

(பி - ம்.) [1] 'கழங்குதா னறிகுவ' [2] 'அறத்தொடு நிற்பான் கூறியது' (அ)

249. பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு
முருகென மொழியும் வேலன் மற்றவன்
வாழிய விலங்கு மருவிச்
சூர்மலை நாடனை யறியா தோனே.

ஏ - து வேலன் கூறியமாற்றத்தை மெய்யெனக்கொண்ட தாய்கேட்பத் தலைமகட்குத் தோழி கூறியது.

குறிப்பு. கழங்கு படுத்து - கழற்சிக்காயிட்டு எண்ணி. அவன் என்றது வேலனை. இலங்கும் - விளங்குகின்ற. சூர் - அச்சம் பொருந்திய. வேலன் முருகென மொழியும், நாடனை அறியாதோன், அவன் வாழிய. (கூ)

250. [1]பொய்படு பறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி [2] மடமயி லாலுநம்
[3] மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்
ஆண்டகை விறல்வே ளல்லனிவள்
பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே.

எ - து தலைமகட்குவந்த நோய் முருகனால் வந்தமை இக்கழங்குகூறிற் றென்று வேலன் சொன்னானென்பது கேட்ட தோழி அக்கழங்கிற்கு உரைப் பாளாய்ச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடுநிலைகுறித்துச் சொல்லியது.

குறிப்பு. பொய்படுபு அறியாக் கழங்கே - பொய்படுதலை யறியாத கழற் காயே; விளி. கட்சி - காட்டுள். கட்சியுள் மயிலாலுதல்: அகநா. 392 : 17. வள்ளியங் கானங்கிழவோன் - வள்ளிக் கொடி படர்ந்த காட்டையுடைய வன்; தலைவன்; குறுந். 216 : 2. வேள்அல்லன் - முருகக் கடவுள் இல்லை. பூண் தாங்கிளமுலை - தலைவியை. அணங்கியோன் - வருத்தினவன். கழங்கே, அணங்கியோன் கானங்கிழவோனே, வேளல்லன்.

(மேற்.) மு. இது செவிலி குறி பார்த்தவழிக் கழங்கு முன்னிலையாகத் தோழி கூறியது (தொல். களவு. 24, இளம்.) இது கழங்கு பார்த்துழிக் கூறியது (தொல். களவு. 23, ந.)

(பி - ம்.) [1] 'பொய்படு பழியா' [2] 'மடமயிலாயநம்' [3] 'வளர்ந்த வள்ளி' (கo)

(உரு) வெறிப்பத்து முற்றிற்று.

## (உசு) குன்றக்குறவன் பத்து

251. குன்றக் குறவ னார்ப்பி னெழிலி
நுண்ப லழிதுளி பொழியு நாட
நெடுவரைப் படப்பை நும்மூர்க்
கடுவர லருவி காணினு மழுமே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகற்கு வரைவுவேட்ட தோழி கூறியது.

(ப - ரை.) 'நும்மூர்க் கடுவரல் அருவி காணினும் அழுமே' என்றது அது நின்மலையினின்றும் வீழ்கின்ற அருவியென்றதுகொண்டு அதற்கு நின் கொடுமைகூறி இவள்அழும் எ - று.

குறவன் உழவுமுதலாகிய வினைக்கு ஆர்ப்பின், அதற்கு இன்றியமை யாத நீரை நுண்மழை பொழியும் நாடனாகிவைத்தும் எம்வேட்கையறிந்து அதற்குத்தக ஒழுகுகின்றிலையென்பதாம்.

குறிப்பு. குறவன் - சாதியொருமை; பின்னும் இப்படியே கொள்க. எழிலி - மேகம். நுண்பல் அழிதுளி - நுண்ணிய பலவாகிய அழிந்த நீர்த் துளியை. மழைபெய்யும் பொருட்டுக் குறவர் ஆர்த்தல்: "மலைவான் கொள்கென" (புறநா. 143 : 1); சிற். 159, 260, 279. படப்பை - சோலை. கடு வரல் அருவி - விரைந்து வருகின்ற அருவி. இவள் - தலைவி. (க)

252. குன்றக் [1] குறவன் புல்வேய் குரம்பை
மன்று டிளமழை மறைக்கு நாடன்
[2] புரையோன் வாழி தோழி [3] விரைபெயல்
அரும்பனி யளைஇய கூதிர்ப்
(5) பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்தபருவத்திற்கு முன்னே வந்தானாக [4] உவந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) குறவனது புல்வேய்குரம்பைப்பொல்லாங்கினை இளமழை மறைக்கும் நாடனென்றது, பிரிவின்கண் தங்கட்குவந்த துன்பத்தை இவன் மறைத்தது நோக்கிக் கூறியவாறு.

**குறிப்பு.** புல்வேய் குரம்பை - புல்லால் வேயப்பட்ட குரம்பையை; **குறுந்.** 235 : 5. மன்று - தோட்டத்தின் நடு. புரையோன் - உயர்ந்தோன். அளைஇய - கலந்த. கூதிர்ப் பெருந்தண்வாடை - கூதிர்க்காலத்துப் பெரிய குளிர்ந்த வாடைக்காற்று.

**(மேற்.)** மு. இப்பாட்டினுள் வறுமைகூர்ந்த புல்வேய் குரம்பையை மழை புறமறைத்தாற்போல வாடை செய்யும் நோய்தீர்க்க வந்தானென்று, உள்ளுறையுவமம் செய்தவாறு கண்டு கொள்க (**தொல்.** உவம. 29, **பேர்.**) **(பி - ம்.)** [1] 'குறவர்' [2] 'புரைவன்' [3] 'விரையல்' [4] 'உவந்து தோழி'
(உ)

253. குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேங்கமழ் சிலம்பின் வரையகங் கமழும்
[1] கானக நாடன் வரையின்
மன்றலு [2] முடையள்கொ ளேழி யாயே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் வரைவொடு புகுதரா நின்றானென்பது தோழிகூறக்கேட்ட தலைமகள் அவட்குச் சொல்லியது.

(ப - ரை.) தேன் நாறுகின்ற மலைக்கண்ணே குறவன் சாந்தநறும்புகை கமழுமென்றது நம் மனைக்கண் செய்கின்ற சிறப்புக்குமேலே மணவினையால் அவர்செய்யும் [3] சிறப்பு மிகும்...வண்ணம் விளைப்பாள்கொல் எ - று.

**குறிப்பு.** சாந்தநறும்புகை - சந்தனத்தின் மணம் கமழ்கின்ற புகை; **புறநா.** 108 : 1–2. தேன்கமழ் சிலம்பு - தேன் நாறுகின்ற மலையினது. வரையகம் - பக்கமலையின்கண். வரையின் - வரைந்துகொள்ளின். மன்றல் - மகிழ்ச்சி. யாய் நாடன் வரையின் மன்றலும் உடையள்கொல்.

**(மேற்.)** மு. காதலி நற்றாய் உள்ளமகிழ்ச்சியுள்ளல் (**நம்பி.** வரைவு. 4.)

**(பி - ம்.)** [1] 'கானநாடன்' [2] 'முடையகொளேழியானே' [3] 'சிறப்புப் பெறும்வண்ணம்'
(ங)

254. குன்றக் குறவ னார மறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்த ணாறும்
வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாட்டே.

எ - து உடன்போக்கு உடன்படவேண்டிய தோழி தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. ஆரம் - சந்தனமரத்தை. அறுத்தென - அறுத்து எரியூட்டினகை. காந்தள் நாறும் நுதல் : ஐங். 259 : 5–6. குறுமகள் ; விளி. செல்வர் நாட்டுக் கொண்டனர்.

(மேற்.) மு. பாங்கி தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தல் (நம்பி. வரைவு. 12.) (ச)

255. குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர [1] மகளிர்ப் புரையுஞ் சாயலள்
ஐய ளரும்பிய முலையள்
[2] செய்ய வாயினண் மார்பினள் சுணங்கே.

எ - து 'நின்னாற்காணப்பட்டவள் எத்தன்மையள்?' என்ற பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

குறிப்பு. வரையரமகளிர் - மலையில் திரியும் தெய்வப் பெண்டிரை. புரையும் - ஒக்கும். ஐயள் - அழகையுடையவள் ; வியக்கத்தக்கவள் எனினுமாம். செய்ய - சிவந்த. சுணங்கு மார்பினள்.

(மேற்.) மு. இயற்சீர் நான்குவந்த செய்யுள் (யா. கா. 6) ; யா. வி. 11. பாங்கற்குத் தலைமகன் தலைவியைக் கண்ட இடமும் வடிவும் உணர்த்தல் (களவியற் காரிகை, 27.)

(பி - ம்.) [1] 'மகளிர் புரையும்' [2] 'செய்ய வாயள்' (ரு)

256. குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையண் [1] முளைவா ளெயிற்றள்
இளைய ளாயினு [2] மாரணங் கினளே.

எ - து 'நீ கூறுகின்றவள் நின்னை வருத்தும் பருவத்தளல்லள்' என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

குறிப்பு. தண்டழைக் கொடிச்சி - குளிர்ந்த தழையணிந்த குறத்தி ; குறிஞ்சிநிலத் தலைவி. முளைவாள் எயிற்றள் - முளைபோன்ற ஒள்ளிய பல்லினள். அணங்கினள் - பிறரை வருத்தும் தன்மையினள். அடி, 3–4 : குறுந். 119 : 3–4.

(மேற்.) மு. தோழி தலைமகளது இளமைப் பண்பு கூறிப் பெயர்த்த வழித் தலைமகன் கூறியது (தொல். களவு. 12, இளம்.) தலைவி வருத்தும்

பருவத்தளல்லள் என்ற தோழிக்குக் கூறியது (தொல். அகத். 21; களவு. 12, ந.) தலைவன் பாங்கிபிடம் தலைவி வருத்திய வண்ணம் உரைத்தல் (நம்பி. களவு. 30.)

(பி - ம்.) [1] 'முளைவாய் வாளெயிற், றிளையள்', 'முளைவாயெயிற்றள்' [2] 'மன்னணங்கினளே' (சு)

257. குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற வெல்வளைக் குறுமகள்
ஆயரி நெடுங்கண் கலிழச்
[1] சேயதாற் றெய்யநீ பிரியு நாடே.

எ - து 'வரைவிடைவைத்துப் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி உடன்படாது கூறியது.

குறிப்பு. கடவுளைப் பேணி. இரந்தனன் - இரந்து; முற்றெச்சம். எல் - ஒளி. ஆயரி - அழகிய செவ்வரி கருவரிகள். கலிழ - கலங்க. சேயது - நெடுந்தூரத்தது. தெய்ய: அசைநிலை. குறுமகளது கண்கலிழ நீ பிரியும் நாடு சேயது. (பி - ம்.) [1] 'சேய்த்தாற்' (எ)

258. குன்றக் குறவன் காதன் மடமகள்
அணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிற்
கொடுத்தனெ மாயினோ நன்றே
(5) இன்னு மானாது நன்னுத றுயரே.

எ - து வரைவுவேண்டிவிட மறுத்துழித் தமர்க்குரைப்பாளாய் வரையாதுவந்தொழுகும் தலைமகற்குத் தோழி அவன்மலைகாண்டலே பற்றாகத் தாங்கள் உயிர்வாழ்கின்றமை தோன்றச் சொல்லியது.

குறிப்பு. மயிலன்ன நடை: முருகு. 205; சிறு. 224. கொடிச்சி - குறிஞ்சி நிலத்தலைவி. அசைநடைக் கொடிச்சி: குறுந். 182: 6; குறள். 1098. கொடுத்தனெம் ஆயினோம் - கொடுத்தோம். இன்னும் - வரைவு வேண்டி விடுதலைக் கண்டபின்னும். ஆனாது - அமையாது. நன்னுதல் - தலைவியது. துயர் ஆனாது; வரையுமாயிற் கொடுத்தனெம்.

(மேற்.) மு. தலைவனது வரைவை மறுத்துழித் தோழி கூறியது (தொல். களவு. 24, இளம்.; 23, ந.) (அ)

259. குன்றக் குறவன் காதன் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்
தேம்பலிச் செய்த வீர்நறுங் கையள்
(5) மலர்ந்த காந்த ளாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே.

எ - து வரையத்துணிந்த தலைமகன் வரைவுமுடித்தற்குத் தலைமகள் வருந்துகின்ற வருத்தம் தோழி காட்டக்கண்டு இனி அது கடுகமுடியுமென உவந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.

குறிப்பு. மன்ற வேங்கை - மன்றத்தின்கண் உள்ள வேங்கை மரத்தினது; குறுந். 241 : 4; அகநா. 232 : 7. வழுத்தி - துதித்து. தேம்பலி - இனிமையான தேவருணவு. தலைவி மேனி காந்தள் நாறுதல்: ஐங். 254 : 2-3; "வேங்கையுங் காந்தளும் நாறி ... தண்ணியளே" (குறுந். 84 : 4-5.) கலிழ்ந்த - கலங்கிய. அணங்கியோள் - வருந்தினவள். எம்அணங்கியோள் : குறுந். 119 : 4.

(மேற்.) மு. தலைமகள் அணங்கைப் பராநிலைகண்ட தலைமகன் மகிழ்தல் (நம்பி. வரைவு. 4.) (௯)

260. குன்றக் குறவன் காதன் மடமகள்
மென்றோட் கொடிச்சியைப் [1]பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலள்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே.

எ - து பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி 'இனிப் புனங்காவற்கு வாரோம்' எனக்கூறி வரைவுகடாயது.

(ப - ரை.) விளைந்தனவென்றது முற்றின என்றவாறு.

குறிப்பு. பைம்புறப் படுகிளி - பசுமையான புனத்தில் வருகின்ற கிளிகளை. ஓப்பலள் - கடியமாட்டாள். புன்புலமயக்கத்து - புன்செய்க்கலப்பில்; ஐங். 283 : 2. விளைந்தன - முற்றின. தினை விளைந்தன; கிளி ஓப்பலள், கொடிச்சியைப் பெறற்கரிது, வரைந்து கொள்வாயாக என்றபடி.

(மேற்.) மு. தோழி தலைவனிடம் புனக்காவல் இனி இன்று என்றது (தொல். களவு. 24, இளம்.; 23, ந.) (பி - ம்.) [1] 'பெறற்கரிதில்ல' (௧௦)

(உசு) குன்றக்குறவன் பத்து முற்றிற்று.

## (உஎ) கேழற் பத்து

261. மென்றினை மேய்ந்த [1]தறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாடன்
எந்தை யறித லஞ்சிக்கொல்
[2]அதுவே மன்ற வாரா மையே

எ - து அல்லகுறிப்பட்டுத் தலைமகன் நீங்கினமை அறியாதாள் போன்று தோழி பிற்றைஞான்று அவன் சிறைப்புறத்தானாய் நிற்பத் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) தினை மேய்ந்த பன்றி கல்லடுக்கத்துத் துஞ்சும் நாடனென்றது தான்வேண்டின இன்பம் நுகர்ந்து இனிது கண்படுதலல்லது வரைதற்கு வேண்டுவன முயலாதான் எ - று.

குறிப்பு. தறுகண் - அஞ்சாமை. பன்றி தினையை மேய்தல்: ஐங். 262 : 1, 263 : 1-2, 268 : 1-2. அடுக்கத்து - பக்கமலையில். வாராமை - நேற்று வாராமல் இருந்தமை. நாடன் வாராமை எந்தை அஞ்சிக் கொல்.

(மேற்.) மு. தலைவன் வருகின்றது இடையீடாக அச்சம் மிக்குழித் தலைவி கூறியது (தொல். களவு. 21, இளம். 23, ந.)

(பி - ம்.) [1] 'சிறுகட் பன்றி' [2] 'அதுவே தெய்ய' (க)

262. சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுக லடுக்கத்துத் துணையொடு வதியும்
இலங்குமலை நாடன் வரூஉம்
மருந்து மறியுங்கொ றோழியவன் விருப்பே.

எ - து 'வரைந்துகொள்ள நினைக்கிலன்' என்று வேறுபட்ட தலைமகள், 'அவன் நின்மேல் விருப்பமுடையன், நீ நோகின்றது என்னை?' என்ற தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) சிறுதினை மேய்ந்த தறுகட்பன்றி துறுகல் அடுக்கத்துத் துணையொடு வதியும் நாடனென்றது களவொழுக்கத்தான் வரும் சிற்றின்பமின்றியே வரைந்துகொண்டு நின்னோடு ஒழுகுவனெனத் தோழி கூறியவதனைத் தலைமகள்கொண்டு கூறிற்றெனக்கொள்க.

குறிப்பு. துறுகல் அடுக்கத்து - நெருங்கிய மலையினது பக்கமலையில். துணையொடு - பெண் பன்றியொடு. வதியும் - தங்கும். வரூஉம் - வருவான். மருந்தும் - பரிகாரமும். அவன் விருப்பு மருந்தும் அறியுங்கொல்.

(மேற்.) மு. தலைவி வருந்தியவழி, 'நீ வருந்தாதி; தலைவன் நின்மாட்டு அன்பு பெரிதுடையன்' எனத் தோழி ஆற்றுவித்தவழி அவள் ஆற்றாமை யாற் கூறியது (தொல். களவு. 21, இளம்.) (உ)

263. நன்பொ னன்ன புனிறுதீ ரேனல்
கட்டளை யன்ன கேழன் மாந்தும்
குன்றுகெழு நாடன் றானும்
வந்தனன் வந்தன்று தோழியென் னலனே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டமையறிந்த தலைமகள், 'நீ தொலைந்த நலம் இன்று எய்திய காரணம் என்னை?' என்ற தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) பொன்போன்ற தினையைக் கேழல் மாந்தும் நாடனென்றது தன் நாட்டுவாழும் விலங்குகளும் தமக்குவேண்டுவன குறைவின்றிப்பெற்று இன்பம்நுகரும் நாடன் எ - று.

குறிப்பு. புனிறுதீர்ஏனல் - முற்றின தினையை. கட்டளையன்ன - பொன்னுரைக்கும் கல்லைப்போன்ற; நிறத்துக்கு உவமை. மாந்தும் - அருந்தும். வந்தன்று - வந்தது. நாடனும் வந்தனன், என் நலனும் வந்தன்று. தலைவனோடு நலன் வருதல்; ஐங். 238 ; 4-5. (ங)

264. இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்
அயந்திகழ் சிலம்ப கண்டிகும்
[1]பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே.

எ - து வரையாதுவந்தொழுகும் தலைமகனைப் பகற்குறிக்கண்ணே எதிர்ப்பட்டுத் தோழி வரைவுகடாயது.

(ப - ரை.) கேழல் பிணவைப் புணருமென்றது அறிவில்லாதன ஒழுகும் ஒழுக்கமும் நின்மாட்டுக் கண்டிலேம் எ - று.

குறிப்பு. கோட்ட - கொம்பையுடைய. பன்றிக்கோட்டுக்குப் பிறை: "பிறையுறழ் மருப்பிற் கடுங்கட் பன்றி" (அகநா. 322 : 10.) களங்கனி - களாப்பழம்; நிறத்துக்கு உவமை. அயம் - நீர்; அகநா. 62 : 1. கண்டிகும் - காண்பாயாக. பயந்தன - பசலைநிறம் எய்தின. நயந்தோள் - விரும்பிய தலைமகளது. கண் பயந்தன, கண்டிகும். (பி - ம்.) [1] 'பசந்தன' (ச)

265. [1]புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்கும்
குன்றுகெழு [2]நாடன் மறந்தனன்
பொன்போற் புதல்வனோ டென்னீத் தோனே.

எ - து பரத்தையிடத்தானாகி ஒழுகுகின்ற தலைமகன் விடுத்த வாயில் மாக்கட்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) புலியாற் கொல்லப்பட்ட தன் பிணவின் குட்டியைத் தந்தையாகிய கேழல் புரக்கும் நாடனென்றது பரத்தையர் காரணமாக யான் இறந்தால் தன் புதல்வனைத் தானே வளர்க்கத் துணிந்து என்னை நீத்தானென்பதாம்.

குறிப்பு. புலிகொல் பெண்பால் - புலியால் கொல்லப்பட்ட பெண்பன்றியினது. பூவரிக்குருளை - பூப்போன்ற வரிகளையுடைய குட்டிகளை. வளைவெண் மருப்பு - வளைந்த வெண்மையான கொம்பையுடைய. ஆண்பன்றி தன் குட்டிகளைப் பேணல்: ஐங். 268 : 1-3. பொன்போற் புதல்வன்: புறநா. 9 : 4; கலி. 85 : 34-6, ந.; குறள். 63. என் நீத்தோன் - என்னைப் பிரிந்தவன். என் நீத்தோன் மறந்தனன்.

(மேற்.) மு. இது வாயில்களுக்குத் தலைவி கூறியது; குறிஞ்சிக்கண் மருதம் நிகழ்ந்தது (தொல். அகத். 12, ந.)

(பி - ம்.) [1] 'புலிகொள்' [2] 'நாடன் மன்றதன்' (ரு)

266. சிறுக்கட் பன்றிப் பெருஞ்சின வொருத்தலொடு
குறுக்கை யிரும்புலி பொரூஉ நாட
[1]நனிநா ணுடைமைய மன்ற
பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே.

எ - து நொதுமலர்வரைவு பிறந்துழித் தலைமகட்கு உளதாகிய வேறுபாடு தோழிகூறித் தலைமகனை வரைவுகடாயது.

(ப - ரை.) பன்றியொருத்தலொடு புலிபொருமென்றது நினக்கு நிகரல்லாதார் வந்து தலைப்படவும் அதனை நீக்காது இடங்கொடுத்து ஒழுகாநின்று யென்பதாம்.

குறிப்பு. சிறுக்கண் - சிறிய கண்; விரித்தல் விகாரம். பன்றி ஒருத்தலொடு - ஆண்பன்றியோடு; ஒருத்தல்: ஆண்பாற் பெயர். பொரூஉம் - போர் செய்யும். நாணுடைமையம் - நாணத்தை உடையரா யிருக்கிறேம். பனி - நீர்த்துளியை. கண் பனிப்பயந்தன. பன்றியொடு புலிபொரும் என்றமையால் வரைவொடு வந்த நொதுமலர் தகுதியில்லார் என்றமை பெறப்பட்டது.

(மேற்.) அடி, 2. 'குறுக்கை யிரும்புலி' என்பது வலிக்கும் வழி வலித்தல் (தொல். எச்ச. 7, சே.)

(பி - ம்.) [1] 'நனிநா ணுடையை மன்றதன்' (கூ)

267. சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்
துறுக லடுக்கத்து வில்லோர் மாற்றி
ஐவனங் கவருங் குன்ற நாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
(5) பண்பில [1]சொல்லுந் தேறுதல் செத்தே.

எ - து தலைமகளைத் தலைமகன் வரைவலெனத் தெளித்தானென்று அவள் கூறக்கேட்ட தோழி அவன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

(ப - ரை.) 'பண்பிலசொல்லும்' என்றது பொய்ம்மொழிகளைச் சொல்லும் எ - று. பன்றியொருத்தல் காவலரையோட்டி ஐவனநெற் கவருமென்றது களவினிற் காவலரை வென்று பெறும் இன்பமே விரும்புவான் எ - று. 'தேறுதல் செத்தே' என்றது தான் சொன்ன வார்த்தைகளை இவள் மெய்யாகக் கொள்ளுமென்பது கருதி எ - று.

குறிப்பு. துறுகல் அடுக்கத்து - பெரிய மலையினது பக்க மலையில். வில்லோர் - வில்லையுடைய வேடர்களை. மாற்றி - விலக்கியோட்டி. ஐவனம் - மலைநெல்லை. வண்டுபடு கூந்தல் - தலைவியை; ஐங். 256 : 2. பண்பு இல - பண்பற்ற பொய்ம்மொழிகளை. செத்து - கருதி. நாடன் பேணி, தேறுதலைச் செத்துப் பண்பில சொல்லும். (பி - ம்.) [1] 'செல்லுங்' (எ)

268. தாஅ யிழந்த தழூவரிக் குருளையொடு
[1]வளமலைச் சிறுதினை யுணீஇக் கானவர்
வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கும்
நன்மலை நாடன் பிரிதல்
(5) என்பயக் கும்மோ நம்விட்டுத் துறந்தே.

எ - து 'அவன் குறிப்பிருந்தவாற்ருல் நம்மைப் பிரிந்து வந்தல்லது வரையமாட்டான் போன்றிருந்தது' எனத் தலைமகள் கூறக்கேட்ட தோழி அவட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

(ப - ரை.) தாயிழந்த குருளையோடே தினையை உண்டு கேழல் உறங்குகின்ற இத்தன்மையையுடைய நாடனாதலால் இவ்வாறு நிகழ்தல் கூடாதென்பதாம்.

குறிப்பு. தாயை இழந்த. குருளையொடு - குட்டிகளோடு. உணீஇ - உண்டு. உயர்சிமை - உயர்ந்த உச்சியின்கண். நன்மலை நாடன் நம்மை விட்டுத் துறந்து பிரிதல் என் பயக்குமோ.

(பி - ம்.) [1] 'வளமலி சிறுதினை யுணீஇய கானவர்' (அ)

269. கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை
விளைந்த செறுவிற் றோன்று நாடன்
வாரா தவனுறை நீடி னேர்வளை
இணையீ ரோதி நீயழத்
(5) துணைநனி [1]யிழக்குவென் மடமை யானே.

எ - து குறைநயப்பக்கூறித் [2] தலைமகளைக் கூட்டிய தோழி அவன் இடையிட்டுவந்து சிறைப்புறத்து நின்றுழித் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

(ப - ரை.) 'துணை நனியிழக்குவென் மடமையான்' என்றது நீ எனக்குத் துணையாதலை இழப்பேன் யான், அவனைத் தேறி முன்செய்த மடமையான் எ - று. இறந்துபடுவேனென்பதாம். நீ அழ வாராது அவனுறை நீடினெனக் கூட்டுக. கேழல் உழுததாக எருவை நெல்விளைந்த செறுப்போலத் தோன்றுமென்றது வேட்கைநலியத் தனக்குவந்த வருத்தத்தானே தலை சாய்த்து நல்லாரைப்போல ஒழுகிய துணையேயுள்ள தென்பதாம்.

குறிப்பு. உழுதென - முகத்தால் உழுததாக. எருவை - பைஞ்சாய்க் கோரை. விளைந்த செறுவின் - நெல் விளைந்த வயலைப்போல. அவண் உறை நீடின் - தன் ஊரின்கண் தங்குதல் நீடின். இணையீரோதி : தலைவியை நோக்கிய விளி ; ஓதி - கூந்தல். துணை நனி இழக்குவென் - நீ எனக்குத் துணையாதலை இழப்பேன். ஓதி, நீ அழ நாடன் வாராது நீடின் யான் நின் துணையை இழக்குவென் ; இறப்பேன் என்றபடி.

(மேற்.) மு. தலைவன் தலைவியது பண்பு பாராட்டல் (நம்பி. களவு. 17.)
(பி - ம்.) [1] 'யிழக்குவன் மடமையோனே' [2] 'தலைமகனைக் கூட்டிய' (க)

270. கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பில்
[1]தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்
புல்லென் குன்றத்துப் புலம்புகொ ணெடுவரை
காணினுங் கலிழுநோய் செத்துத்
(5) தாம்வந் தனர்நங் காத லோரே.

எ - து வரைவுகாரணமாக [1] நெட்டிடைகழிந்து பொருள்வயிற்போகிய தலைமகன் வந்தமையறிந்த தோழி உவந்த உள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) கிழங்ககழ்கேழல் உழுத புழுதிக்கண்ணே வித்த விளைந்த பயிரைக் கானவர் கொய்யும் சிறப்புடையதேனும் அவன் அவ்விடத்து உறையாமையின் தனக்குப்புல்லென்று தோன்றுதலால், 'புல்லென் குன்றம்' எனவும், 'புலம்புகொள் நெடுவரை' எனவும் இழித்துக்கூறப்பட்ட தெனக் கொள்க. (௧0)

குறிப்பு. கிழங்கு அகழ் - கிழங்குக் குழியில். சிலம்பில் - மலையில். கேழலுழுத சிலம்பு: புறநா. 168: 3-4; ஐந். எழு. 11. தலைவிளை - முதல் விளைச்சலை. கானவர் - குறவர். புல்லென் குன்றத்து - பொலிவழிந்த மலையில். புலம்பு - தனிமை. வரை - பக்கமலையை. கலிழு நோய் செத்து - நாம் கலங்கும் துன்பத்தைக் கருதி. காதலர் வந்தனர்.

(பி - ம்.) [1] 'தலைவிதை [2] 'நெட்டிடைக் கழித்து'

(உஎ) கேழற்பத்து முற்றிற்று.

## (உஅ) குரக்குப் பத்து

271. அவரை யருந்த மந்தி பகர்வர்
பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்
பசுப்போல் பெண்டிரும் பெறுகுவன்
தொல்கே ளாகலி னல்குமா லிவட்கே.

எ - து தலைமகன் வரைவுவேண்டிவிடத் தமர்மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடுநின்றது.

(ப - ரை.) அவரையை நிறையத்தின்ற மந்தி பண்டவாணிகர் பை போலத் தோன்று நாடனென்றது ஆண்டுவாழ்வனவும் மேலாமுணவு களிற் குறைவின்றி வாழும்நாடன் எ - று.

'பசுப்போல் பெண்டிரும்' என்றது வரைவெதிர்கொள்ளாத் தமர் மறுத்த தீங்கினைத் தங்கள் மேல் ஏற்றி, இத்தீங்குசெய்யாது தான் நினைத்த வழி ஒழுகும் குணமுடைய பெண்டிர்பலரையும் பெறுகுவன், அவனே வேண்டினென்று கூறியவாறாகக் கொள்க.

'பசுப்போற் பெண்டிரும்' என்று பாடமோதுவாருமுளர்.

குறிப்பு. அவரை அருந்த - அவரையை அருந்திய; ஆர்ந்த என்பது அருந்த எனக் குறுகி வந்தது; இதைக் குறுக்கும் வழிக் குறுக்கல் என்பர் (தொல். எச்ச. 7, சே.); கலி. 22: 7, ந. பகர்வர் பக்கின் - பண்டவாணிகரது பையைப்போல! கலி. 65 : 14. வேண்டின் - விரும்பினால். தொல் கேள் ஆகலின் - பழையநட்பையுடையனாதலின். (௧)

272. கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்
உருவரைத் தீந்தே னெடுப்பி [1] யயல
துருகெழு நெடுஞ்சினைப் பாயு நாடன்
இரவின் வருத லறியான்
வரும்வரு மென்ப தோழி யாயே.

எ - து அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாக முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாள்போன்று தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) மந்திக்கு ஒருமகவாகிய பார்ப்பு மலைக்கண் பெருந்தேனிறாலைக் கிளர்த்து எழுப்பி ஈக்கு வெருவி அதன் அயற்சிகரத்திலே பாயுமென்றது, தான் நுகரக்கருதிவந்து நம்மையுணர்த்திச் சுற்றத்தார்பலரும் உணர்ந்த அதற்கு வெருவிப் பெயர்வான் எ - று.

குறிப்பு. கருவிரல் மந்தி: மலைபடு. 311; குறுந். 373: 5; திணைமா. 10. பறழ் - குட்டி. கல்லா வன்பறழ்: ஐங். 280: 1; குறுந். 69: 3. தீந்தேன் எடுப்பி - இனிய தேனிறாலைக் கிளர்த்து எழுப்பி. அயலது - பக்கத்திலுள்ள. உரு - அச்சம். நெடுஞ்சினை - பெரிய சிகரத்திலே. வருதல் அறியான் - வாரானென்றபடி. தோழி: விளி. யாய் வரும் வரும் என்ப.

(பி - ம்.) [1] 'யல்ல' (உ)

273. அத்தச் செயலைத் [1] துப்புற ழொண்டளிர்
புன்றலை மந்தி வன்பற ழாரும்
நன்மலை நாட நீசெலின்
நின்னயந் துறைவி யென்னினுங் கலிழ்மே.

எ - து வரைவிடைவைத்துப் பிரியும் தலைமகன், 'நின் துணைவியை உடம்படுவித்தேன், இனி நீயே இதற்கு உடம்படாது கலிழ்கின்றாய்' என்றாற்குத் தோழிகூறியது.

(ப - ரை.) பிரிவுடம்பட்டாளேயாயினும் நீ பிரிந்துழி ஆற்றாளென்பதாம். அசோகந்தளிரை மந்திப்பார்ப்பு அருந்துமென்றது இளமை கழிவதற்கு முன்னே வரைதல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு. அத்தச் செயலை - செம்மையான அசோகமரத்தினது. துப்புறழ் - பவளத்தை ஒத்த. புன்றலை மந்தி வன்பறழ் - சிவந்த சடையையுடைய பெண்குரங்கினது வலிய குட்டி. ஆரும் - அருந்தும். செலின் - பிரிந்து சென்றால். நின் நயந்து உறைவி - உன்னை விரும்பி உறையும் தலைவி. கலிழ்ம் - கலங்கும்.

(பி - ம்.) [1] 'துப்புற ழொண்மணி' (ங)

274. மந்திக் கணவன் கல்லாக் கடுவன்
ஒண்கேழ் வயப்புலி குழுமலின் விரைந்துடன்
குன்றுய ரடுக்கங் கொள்ளு நாடன்
சென்றனன் வாழி தோழியென்
மென்றோட் கவினும் பாயலுங் கொண்டே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) மந்திக்கணவனாகிய கல்லாக்கடுவன் புலிமுழக்கு அஞ்சி வரையகத்துப் பாயும் நாடனென்றது நமக்கு உரியனாயொழுகுகின்றவன் யாம் எம்மைப்பாதுகாத்துரைக்கின்ற உரைக்கு அஞ்சிச் சென்றானென்பதாம்.

குறிப்பு. மந்தியின் கணவனாகிய கடுவன்; கடுவன் - ஆண்குரங்கு. கல்லாக் கடுவன்: கலி. 40: 15. புலி குழுமலின் - புலி முழங்குதலின். புலி குழுமுதல்: ஐங். 218: 3-4, குறிப்பு. விரைந்து - அஞ்சி ஓடி. கொள்ளும் - பாய்ந்து பற்றிக் கொள்ளும். பாயல் - தூக்கம். தோழி, நாடன் என் கவினையும் பாயலையும் கொண்டு சென்றனன். (௪)

275. குரங்கின் றலைவன் குருமயிர்க் கடுவன்
சூரலஞ் சிறுகோல் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கு நாட
யாநின் னயந்தன மெனினுமெம்
ஆய்நலம் வாடுமோ வருளுதி யெனினே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் இடையிட்டு வருதலால் எதிர்ப்பாடு பெறாத தோழி குறியிடத்து எதிர்ப்பட்டு அவன் கொடுமை கூறி நெருங்கிச் சொல்லியது.

(ப - ரை.) நின் நயந்த எம் நலம் வாடுதல் ஒருதலையன்றே; அங்ஙனமாயினும் நின்னை யாங்கள் நயந்ததனை வெருளாது அருளப்பெறின் எம் நலம் வாடுமோ எ - று.

குரங்கின்தலைவனாகிய கடுவன் சூரற்கோலைக்கொண்டு தானே அழிகின்ற மாரிமொக்குளைப்புடைத்து அழிக்கு நாடவென்றது நின்னை நயந்த எங்கள் நலம் நீ வரையாமலே அழிகின்ற இதனை நீ இவ்விடையிட்ட ஒழுக்கத்தாலே அழியாநின்றா யென்பதாம்.

குறிப்பு. குருமயிர்க்கடுவன் - நிறம் பொருந்திய மயிரையுடைய ஆண் குரங்கு; குறுந். 373: 4-5. தலைவனாகிய கடுவன். சூரல் - பிரம்பு. வியலறை - அகன்ற பாறையின்கண். மாரிமொக்குள் - மழைநீரின் குமிழியை; சீவக. 409. புடைக்கும் - அடிக்கும். நயந்தனம் - விரும்பினோம். அருளுதியெனின் - வெருளாது அருள்வாயாயின். நாட, அருளுதியெனின் எம் நலம் வாடுமோ? (௫)

276. மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
தண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்க லிளமழை புடைக்கு நாட
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
(5) கன்முகை வேங்கை மலரும்
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே.

எ - து வரையாதுவந்தொழுகும் தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது.

(ப - ரை.) மேல் கருக்கொண்டு முற்றிப் பயன்படுவதாய இளமுகிலை மந்தி நறைக்கொடிகொண்டு புடைக்கும் நாடவென்றது வரைந்து மகப்பெறுதற்கு உரியளாகிய இவளை இம்மறைந்த வொழுக்கத்தாலே கொலைசூழ்கின்றாயென்பதாம்.

'கல்முகை வேங்கைமலரும் நாட' என்றதனால் வரைதற்குரிய பருவமும் கூறியவாறாயிற்று.

குறிப்பு. முறி - தளிரை. காதலனாகிய கடுவன். முறிமேய் கடுவன்; மலைபடு. 311-3; குறுந். 288 : 1-2. நறைக்கொடி - ஒருவகைக் கொடி; மலைபடு. 514, ந.; நற். 5 : 3; அகநா. 282 : 9; புறநா. 168 : 15. பொங்கல் - பொங்குகின்ற. இளமழை - இளைய மேகத்தை; கலி. 41 : 25. நயவாயாயினும் - விரும்பாவிடினும். கன்முகை வேங்கை - பாறைகளின் வெடிப்புக்களில் தோன்றியுள்ள வேங்கைமரம். நாட, வேங்கை மலரும், பெண்டெனப் படுத்து வரைந்தனை சென்மோ. (சு)

277. குறவர் முன்றின் மாதீண்டு துறுகற்
கல்லா மந்தி [1]கடுவனொ டுகளும்
குன்ற [2]நாடநின் மொழிவ லென்றும்
பயப்ப நீத்த லென்னிவள்
(5) கயத்துவளர் குவளையி னமர்த்த கண்ணே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் புணர்ந்துநீங்குழி எதிர்ப்பட்ட தோழி வரைவு கடாயது.

(ப - ரை.) குறவர்முன்றிலில் மாதீண்டுதுறுகற்கண்ணே நாணாது மந்தி கடுவனோடு உகளும் நாடவென்றது சுற்றத்தார்நடுவே இவ்வொழுக்கம் புலனாகிய தொன்று விளையும் ஏதத்திற்கு நாணாதோய் என்பதாம்.

குறிப்பு. மாதீண்டுதுறுகல்; ஆதீண்டுகுற்றிபோல. உகளும் - துள்ளும். நின்னை மொழிவல். என்றும் - எப்பொழுதும். பயப்ப - பசப்ப. நீத்தல் - பிரிதல். கயம் - நீர்நிலை. குவளையின் - குவளையைப்போல. நாட, கண் பயப்ப என்றும் நீத்தல் என்.

(பி - ம்.) [1] 'கடுவ னெடுக்கும்' [2] 'நாடனின்' (எ)

278. சிலம்பின் வெதிரத்துக் கண்விடு [1]கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி
மீனெறி தூண்டிலி னிவக்கு நாடன்
உற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே.

எ - து வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) குரங்கு தன்மேலிருந்துழி வளைந்து அது பாய்ந்துபோவுழி நிமிர்கின்ற மூங்கிற்கோல் மீனெறி தூண்டில்போல ஓங்கும் நாடனென்றது தன்னெஞ்சத்து அன்புளதாகிய காலத்து வளைத்து வளைத்தொழுகி அன்பற்ற காலத்துப் பணிவின்றித் தலைமைசெய்து நம் நலங்கொண்ட தன் கொடுமை தோன்ற ஒழுகுகின்றானென்பதாம்.

குறிப்பு. வெதிரத்து - மூங்கிலில். கழைக்கோல் - மூங்கிற்கிளை ; ஐங். 280 : 2. பறழ் - குட்டி. பாய்ந்தென - பாய. இலஞ்சி - குளத்தின்கண். நிவக்கும் - ஒக்கும். மீனெறி தூண்டில் மூங்கிலுக்கு : குறுந். 54 : 4. உற்று - அடைந்து. தண்டா - அமையாத. நாடன் நோய் தந்து நலத்தைக் கொண்டனன். (பி - ம்.) [1] 'கணைக்கோல்', 'கனைக்கோல்' (அ)

279. [1]கல்லிவ ரிற்றி புல்லுவன வேறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு
வரைமிசை யுகளு நாட நீவரிற்
கல்லகத் ததுவெம் மூரே
அம்பற் சேரி யலராங் கட்டே.

எ - து இரவுக்குறிவேண்டுந் தலைமகனைத் தோழி வரவருமைகூறி மறுத்தது.

(ப - ரை.) 'கல்லகத்தது எம்மூர்' என்றது சூழ்ந்த மலைகளின் நடுவகத்தது எம்மூர் எ - று.

இற்றிமேற் படர்ந்த குளவித்தளிரை மேய்ந்து வரையகத்திலே மந்தி கடுவனோடு உகளும் நாடனாதலான், இதற்குமுன்பு இவள் நின்னோடு நுகர்ந்ததேகொண்டு இனி இவள் நின்பதிக்கண் வாழ்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு. கல் - மலை. இற்றி - இத்தி மரத்தில். புல்லுவன - படர்வனவாகிய. குளவி - மலை மல்லிகைத் தளிர். இத்தி புல்லுவன குளவியை ஏறி மேய்ந்த மந்தி. குளவிக்கொடி : பதிற். 12 : 10 ; ஐந். எழு. 3. உகளும் - ஆடுகின்ற. கல்லகத்தது - மலைகளின் நடுவகத்தது. அலராங்கட்டு - அலரைக் கூறும் ஊரையுடையது. (பி - ம்.) [1] 'கல்லி வரித்தி' (கூ)

280. கருவிரன் மந்திக் கல்லா [1]வன்பார்ப்
பிருவெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோல்
மதிபுடைப் பதுபோற் றோன்றுநாட
வரைந்தனை நீயெனக் கேட்டியான்
(5) உரைத்தனெ னல்லெனோ வஃதென் யாய்க்கே.

எ - து புணர்ந்துடன்போகிய தலைமகன் தலைமகளைக் கரணவகையான் வரைந்தானாக எதிர்சென்ற தோழிக்கு, 'இனி யான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்தவேண்டும்' என்றானாக அவள் சொல்லியது.

(ப - ரை.) குரங்கின் இளம்பார்ப்பு இருவெதிர்ங் கழையேறி மதி புடைப்பதுபோல் தோன்றும் நாடவென்றது, தீங்குசெய்வாயைப்போலத் தோன்றுவதல்லது உண்மைவகையாற் செய்யாயென்பதாம்.

குறிப்பு. பார்ப்பு - குட்டி. மந்தியினது கல்லாப் பார்ப்பு; குறுந். 69 : 3. இருவெதிர் - பெரிய மூங்கில். சிறுகோல் - வெதிர்ங்கழையின் கோல்; ஐங். 278 : 1. பார்ப்பு சிறு கோலால் மதியைப் புடைப்பதுபோல் தோன்றும் நாட. நாட, நீ வரைந்தனை எனக் கேட்டு யான் என் யாய்க்கு உரைத்தனென் அல்லனோ? உரைத்தேன் என்றபடி.

கரணவகையான் மணத்தல்: தொல். கற்பு. 1, 2.

(மேற்.) மு. தாயர்க்கு உரியனகூறித் தோழிக்குக் கூற்று நிகழும் என்ற வழித், தலைவன் கரணவகையால் வரைந்தானாக எதிர்சென்ற தோழிக்கு யான் வரைந்தமை நுமர்க்குணர்த்தல் வேண்டுமென்றார்க்கு அவள் உணர்த்தினேனென்றது (தொல். அகத். 39, ந.) தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கியம்பு என்ற வழி அவள் தான் அது முன்னே சாற்றியதுரைத்தல் (நம்பி. வரைவு. 24.)

(பி - ம்.) [1] 'விளம்பார்ப், பிருவெதி ரங்கழை' (௯௦)

(உஅ) குரக்குப்பத்து முற்றிற்று.

## (உகூ) கிள்ளைப் பத்து

281. வெள்ள வரம்பி [1]னூழி போகியும்
கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை
இரும்பல் கூந்தற் கொடிச்சி
பெருந்தோட் காவல் காட்டி யவ்வே.

எ - து ஆயத்தோடு விளையாட்டுவிருப்பினாற் பொழிலகம் புகுந்த தலைவியை எதிர்ப்பட்டு ஒழுகுகின்ற தலைமகன் அவள் புனங்காவற்கு உரியளாய் நின்றதுகண்டு மகிழ்ந்து சொல்லியது.

குறிப்பு. வெள்ளவரம்பின்ஊழி - வெள்ளமென்னும் எண்ணினை எல்லையாகப் பெற்ற யுகமுடிவு; வெள்ளம் - ஒரு பேரெண்; "ஆயிர வெள்ளம் வாழிய" (பதிற். 21 ; 38, 63 : 20-21); பிரளய வெள்ளத்தை எல்லையா

கப்பெற்ற எனினுமாம். இரும்பல்கூந்தல் - பெரிய பலவாகிய கூந்தல்; குறுந். 165 : 5. காட்டிய - காட்டின; முற்று. காவல் காட்டிய, ஆதலின் வாழிய ; ஐங். 288.

(மேற்.) மு. தலைவன் கிள்ளையை வாழ்த்தல் (இ. வி. 503.)

(பி - ம்.) [1] 'ஞாழிபோயும்' (க)

282. சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினை
பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவும்
சோலைச் சிறுகிளி [1]யுன்னு நாட
வாரிருள் பெருகின [2]வாரல்
(5) கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே.

எ - து இரவுக்குறி நேர்ந்த தோழி தலைமகன் வந்து புணர்ந்துநீங்குழி அவனை எதிர்பட்டுச் சொல்லியது.

(ப - ரை.) கொடிச்சி கடியவும் சோலைச் சிறுகிளி தினையையுன்னும் நாடவென்றது காவலர் காத்தொழுகவும் களவொழுக்கத்தையே விரும்பா நின்றாயென்பதாம்.

குறிப்பு. சாரற்புறத்த - மலைச்சரிவிடத்திலுள்ள. குரல் - கதிர். கிளி, கொடிச்சி கடியவும் தினையை உன்னும் நாட. கடியவும் - நீக்கவும். உன்னும் - மீண்டும் வருதலை நினைக்கின்ற. வாரல் - வாராதே. கோட்டுமா - யானை. வழங்கும் - பயில்கின்ற. நெறி - வழி. நாட இருள் பெருகின, மா வழங்கும் நெறியே வாரல்.

(மேற்.) மு. இரவுக்குறியை நயந்த தலைமகனுக்கு ஆற்றின்னாமையைக் கூறியது (தொல். களவு. 24, இளம்.)

(பா - ம்.) [1] 'யுண்ணு நாட' [2] 'வாராஅல்' (உ)

283. வன்கட் கானவன் மென்சொன் மடமகள்
புன்புல மயக்கத் துழுத வேனற்
பைம்புறச் சிறுகிளி கடியு [1]நாட
பெரிய கூறி நீப்பினும்
(5) பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே.

எ - து தோழி வாயில் மறுக்கவும் தலைமகன் ஆற்றாமைகண்டு தலைமகள் வாயில்நேர அவன் பள்ளியிடத்தானாய் இருந்துழிப் புக்க தோழி கூறியது.

(ப - ரை.) தினைப்புனத்துப் பலவாய்ப்படிகின்ற கிளிகளை ஒருத்தி தன்னாற்காக்க முடியாதாயினும் அவற்றை அவள் கடிய முயலுநாடவென்றது நின்னோடு இன்பநுகர்ச்சி விரும்புமகளிரை யாங்கள் விலக்கமுயல்கின்றது முடியாதென்பதாம். 'பெரிய கூறி நீப்பினும் பொய்வலைப்படூஉம் பெண்டு தவப்பலவே' என்றது தம்தமராயுள்ளார் நின்குறை பலவும் கூறி நீப்பி

னும் நின்பொய் வலைப்படூஉம்பெண்டிர் பலர் எ - று. இவளும் அவருள் ஒருத்தியென்பதாம்.

**குறிப்பு.** வன்கண் - அஞ்சாமை. கானவனுடைய மடமகள். புன்புல மயக்கத்து - புன்செய்க் கலப்பில்; **ஐங்.** 260 : 4. ஏனல் - தினையினின்றும். பைம்புறச் சிறுகிளி - பசுமையான புறத்தையுடைய சிறிய கிளியை. கடியும் - ஓப்பும். பெரிய கூறி - நின்குறை பல கூறி. நீப்பினும் - நீங்கினும். பெண்டு - பெண்டிர்; **ஐங்.** 57 : 4. தவப்பல - மிகப் பலர்.

**(மேற்.)** மு. தலைவன் ஆற்றாமை வாயிலாகப் புணர்ந்துழிப் பள்ளியிடத்துச் சென்ற தோழி கூறியது; திணைமயக்குறுதலுள் இது குறிஞ்சிக்கண் மருதம் (**தொல்.** அகத். 12, **ந.**) (**பி - ம்.**) [1] 'நாடன்' (௩)

284. அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி
குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கால்
இருவி நீள்புனங் கண்டும்
[1]பிரித றேற்றாப் பேரன் பினவே.

**எ - து** தினையரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள்போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது.

**குறிப்பு.** பைங்கால் - பசுமையான தாள்; இது தினைகொய்யாமுன்னம் இருந்த நிலை. இருவி - அறுத்த பின்பு உள்ள தாள். புனத்தைக் கண்டும். பிரிதல் தேற்றா - பிரிந்து செல்ல விரும்பாத. பைங்கிளி பிரிதல் தேற்றாப் பேரன்பின, அதனால் அளிய.

**(மேற்.)** மு. தினையரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள்போல் சிறைப்புறமாகத் தோழி ஓம்படுத்தது (**தொல்.** களவு. 23, **ந.**) இறைமகளாடிடம் நோக்கி அழிதல் (**நம்பி.** களவு. 40.) (**பி - ம்.**) [1] 'பிரிதறேற்று' (௪)

285. பின்னிருங் கூந்த னன்னுதற் குறமகள்
மென்றினை [1]நுவணை யுண்டு தட்டையின்
ஐவனச் சிறுகிளி கடியு நாட
[2]வீங்குவளை நெகிழப் பிரிதல்
யாங்கு [3]வல் லுநையோ வீங்கிவட் டுறந்தே.

**எ - து** ஒருவழித் தணந்துவந்த தலைமகற்குத் தோழி கூறியது.

**(ப - ரை.)** குறமகள் தினைப்பிண்டியையுண்டு ஐவனச்சிறுகிளி கடியும் நாடவென்றது நின்னோடு இக்காலத்து இன்பநுகர்ந்து பின்பு நின்மனைச் செல்வமும் பிறமகளிரொழியத் தானே நுகரும் வேட்கையுடையாளைப் பிரிந்து ஒழுகுகின்றாயென்பதாம்.

**குறிப்பு.** பின்னிருங்கூந்தல் - பின்னிய பெரிய கூந்தல். மென்றினை நுவணை - மெல்லிய தினைமாவை; **மலைபடு.** 445; **பதிற்.** 30 : 24. தட்டை - கிளி முதலியவற்றை ஓட்டும் கருவி; **மதுரை.** 305; **குறுந்.** 223 : 4 ஐவனம் - மலைநெல். ஐவனத்திற்காக வருகின்ற சிறிய கிளிகள். தட்டையாற் கிளி

கடிதல்: "தண்டையி னினக்கிளி கடிவோள்" (நள். 154, மயிலை. மேற்.) வீங்குதல் - செறிதல்; கலி. 139 : 12, ந.; குறுந். 358 : 1. யாங்கு வல்லு நையோ - எவ்விதம் வல்லமையுடையாய். நாட, இவளைத்துறந்து பிரிதலில் யாங்கு வல்லுநையோ? (பி - ம்.) [1] 'நுவனே' [2] 'விலங்குவளை' [3] 'வல்லினையோ' (ரு)

286. சிறுதினை கொய்த விருவி வெண்காற்
காய்த்த வவரைப் படுகிளி கடியும்
யாண ராகிய நன்மலை நாடன்
[1]புகரின்று நயந்தனன் போலும்
(5) கவருந் தோழியென் மாமைக் கவினே.

எ - து உடன்போக்குத் துணிந்த தலைமகன் அஃதொழிந்து தானே வரைவிடைவைத்துப் பிரியநினைந்ததனைக் குறிப்பினான் உணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தலைமகன் வரைவிடைவைத்துப் பிரிவலென்ற வழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

(ப - ரை.) புகரென்றது உடன்போதலை. தினையிற்கடிந்த கிளியைத் தினையரிகாற்கண்விளைந்த அவரைக்கண்ணுங்கடியும் நாடனென்றது வரையாதொழுகுதலன்றி உடன்போதலையும் நம்மை விலக்காநின்றானென்பதாம்.

குறிப்பு. இருவியினது வெள்ளிய தாளடியில் காய்த்த அவரைக்கண் வருகின்ற கிளியைக் கடியும். தினையறுகாலில் அவரை இருத்தல்: குறுந். 82 : 4-5. புகர் - குற்றம்; என்றது உடன்போக்கை. என் மாமைக் கவினைக் கவரும். (பி - ம்.) [1] 'புகரின்றுயந்தனன்' (சு)

287. நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
தினைபாய் கிள்ளை வெரூஉ நாட
[1]வல்லை மன்ற பொய்த்தல்
வல்லாய் [2]மன்றநீ யல்லது செயலே.

எ - து இன்னநாளில் வரைவலெனக்கூறி அந்நாளில் வரையாது பின் அவ்வாறுகூறும் தலைமகற்குத் தோழிகூறியது.

(ப - ரை.) தமக்கு ஓரிடையூறும் செய்யாத நெடுவரைக்கண்ணே வாழும் வருடையைத் தினைமேய்கின்ற கிள்ளை வெரூஉம் நாடவென்றது நீசொன்ன போழ்தே எம் சுற்றத்தார் வரைவிற்கு இடையூறு செய்யாரென்பதறியாது வெருவுகின்றாய் என்பதாம்.

குறிப்பு. நெடுவரை மிசையது - பெரிய மலையிடத்திலுள்ள. வருடையைக் கண்டுகிள்ளை வெரூஉம்; வருடை - ஒரு வகைமான்; மலைபடு. 502–3; குறுந். 187 : 1. கிள்ளை - கிளி. வெரூஉம் - அஞ்சும். வல்லை - திறமையை யுடையை. நீ பொய்த்தல் வல்லை; அல்லது செயலில் வல்லாய்.

(மேற்.) மு. தோழி தலைவனைப் பழித்தது (தொல். களவு. 24, இளம். ; 23, ந.) (பி - ம்.) [1] 'வல்லைமன்றம்ம' [2] 'மல்லநீ' (எ)

288\. நன்றே செய்த வுதவி [1] நன்றுதெரிந்
தியாமெவன் செய்குவ நெஞ்சே காமர்
மெல்லியற் கொடிச்சி காப்பப்
பல்குர லேனற் பாத்தருங் கிளியே.

எ - து கிளிகள் புனத்தின்கண் படியாநின்றனவென்று தலைவியைக் காக்க ஏவியவழி அதனையறிந்த தலைமகன் உவந்து தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

குறிப்பு. நன்று தெரிந்து - நன்மையைத் தெரிந்து. எவன் செய்குவம் - என்ன கைம்மாறு செய்வோம். காமர் - அழகிய. காப்ப - தினைப்புனம் காப்ப. பல்குரல் பாத்தரும் - பலகதிர்களில் பரவுதலைச் செய்யும். நெஞ்சே, கிளி நன்றே உதவி செய்த, யாம் எவன் செய்குவம்.

(மேற்.) மு. இது கிளி புனத்தின்கட் படிகின்ற தென்று தலைவியைக் காக்க ஏவியதனை அறிந்த தலைவன் அவளைப் பெற்றேமென மகிழ்ந்து கூறியது (தொல். களவு. 13, ந.) (பி - ம்.) [1] 'நன்றிதிரிந்து' (அ)

289\. கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
காவ லுங் கடியுநர் போல்வர்
மால்வரை நாட [1] வரைந்தனை கொண்மோ.

எ - து இற்செறித்தபின்னர்த் தோழி வரைவுகடாவுழி முதிர்ந்த தினைப் புனம் இவள்காத்தொழிந்தால் [2] வரைவலென்றாற்கு அவள் சொல்லியது.

குறிப்பு. செத்து - அறிந்து. பைங்குரல் ஏனல் - பசுமையான கதிரை யுடைய தினையின்கண். கொடிச்சியினது இனியகுரலைத் தம் இனமென நினைந்து, ஏனற்கண் மற்றைக் கிளிகள் படர்தரும்; ஆதலின் காவலைக் கடியுநர் போல்வர். வரைந்தனை கொண்மோ - வரைந்து கொள்வாயாக.

(மேற்.) மு. இது குரவர் இயல்புணர்த்தி 'வரைக' எனத் தோழி கூறியது (தொல். களவு. 24, இளம்.) களவொழுக்கம் நீட்டித்தவழித் தோழி பட்டாங்குகூறி வரைதல் வேட்கையை யுணர்த்தியது (தொல். பொருள். 16, இளம்.) (பி - ம்.) [1] 'மலைந்தனை' [2] 'வரைபவென்றாற்கு' (கூ)

290\. அறம்புரி செங்கோன் மன்னனிற் றாநனி
சிறந்தன போலுங் கிள்ளை பிறங்கிய
பூக்கமழ் கூந்தற் கொடிச்சி
நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே.

எ - து காவல்மிகுதியான் இரவுக்குறி மறுக்கப்பட்டு நீங்கியதலைமகன் வந்துழி அவன்கேட்டு வெறுப்புத்தீர்த்தற்பொருட்டால் தினைப்புனங்காவல் தொடங்காநின்றாளென்பது தோன்றத் தோழி கூறியது.

(ப - ரை.) மன்னனென்றது தலைமகனை.

குறிப்பு. மன்னனின் - தலைவனினும். நனிசிறந்தன - மிகச் சிறந்தன. பிறங்கிய - விளங்கிய. ஓப்பவும் - கடியவும். கொடிச்சியால் நோக்கவும் ஓப்பவும் படும், அதனால் கிள்ளை மன்னனிற் சிறந்தன போலும். (௰)

(உ௯) கிள்ளைப்பத்து முற்றிற்று.

## (௩௰) மஞ்ஞைப் பத்து

291. மயில்க ளாலக் குடிஞை யிரட்டும்
துறுகல் லடுக்கத் ததுவே பணைத்தோள்
ஆய்தழை நுடங்கு மல்குற்
காதலி யுறையு நனிநல் லூரே.

எ - து வரைவிடைவைத்துப் பிரிந்து மீள்கின்ற தலைமகன் சொல்லியது.

குறிப்பு. குடிஞை இரட்டும் - பேராந்தை மாறி ஒலிக்கும்; மலைபடு. 141. அடுக்கத்தது - பக்கமலையின்கண் உள்ளது. பணைத்தோள் - பெருத்த தோள். காதலி - தலைவி. நல்லூர் துறுகல் அடுக்கத்தது. (க)

292. மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தழீஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தன ளெமக்கே நீநயந்து
நன்மனை யருங்கடி யயர
(5) எங்கலஞ் சிறப்ப[1]யா மினிப்பெற் றோளே.

எ - து பின்முறையாக்கிய பெரும்பொருள்வதுவை முடித்தவனை இல்லத்துக் கொண்டுபுகுந்துழித் தலைமகள் உவந்து சொல்லியது.

(ப - ரை.) மழைப்பருவம் வேண்டியிருக்கின்ற மயில்கள் ஆலத் தேன்கள் இமிர மழைபெய்யும் நாடவென்றது யாங்கள் கருதியிருக்கின்ற பெரும் பொருளை உவப்ப முடித்தனை எ - று.

குறிப்பு. பெருந்தேன் - பெரியவண்டுகள். இமிர - ஒலிக்க. தழீஇய - தழுவிய. கடிஅயர - மணத்தைச்செய்ய. பெற்றோள் நின்னினும் சிறந்தனள்.

பின்முறையாக்கிய பெரும்பொருள்வதுவை - மூவகை வருணத்தாரும் முன்னர்த்தத்தம் வருணத்து எய்திய வதுவைமனைவியர்க்குப் பின்னர் முறையாற்செய்துகொள்ளப்பட்ட பெரியபொருளாகிய வதுவை; மனைவியர் (தொல். கற்பு. 31, ந.) (பி - ம்.) [1] 'யாயினிப்பெற்றோளே? (உ)

293. சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன
நலம்பெறு கையி [1] னென் கண்புதைத் தோயே
பாய லின்றுணை யாகிய பணைத்தோள்
தோகை மாட்சிய மடந்தை
(5) நீயல [2] துளரோவென் [3] னெஞ்சமர்ந் தோரே.

எ - து பகற்குறியிடம்புக்க தலைமகன் தலைவி பின்னாக மறையவந்து [4]கண்புதைத்துழிச் சொல்லியது.

(ப - ரை.) 'நீயல்லது உளரோவென்னெஞ்சமர்ந்தோரே' என்றது நீயல்லது பிறருளராயினன்றே நான்கூறுவது அறிதல்வேண்டிக் கண் புதைக்கற்பாலது; அஃதில்லாதவழிப்புதைப்பது என்னென்று அவள் பேதைமை உணர்த்தியதாம்.

குறிப்பு. சிலம்பு - மலையில். காந்தளது குலையன்ன. கையின் - கையி னால். கண் புதைத்தோயே - கண்ணைப்பொத்தியவளே; விளி. பாயல் - படுக்கை. தோகைமாட்சிய - மயில்போன்ற பெருமையையுடைய. என் நெஞ்சமர்ந்தோர் நீயலது உளரோ; இல்லை என்றபடி. தலைவி தலைவன் கண்ணைப் புதைத்தல்: கம்ப பூக்கொய். 18.

(மேற்.) மு. தலைவி கண்புதைத்தவழித் தலைவன் கூறியது (தொல். களவு. 17, இளம்.) யாம் மறைந்துசென்று இவனைக் கண்ணைப்புதைத்தால் தலைநின் றொழுகும் பரத்தையர் பெயர்கூறுவனென்று உட்கொண்டு தலைவிசென்று கண்புதைத்துழித் தலைவனுக்குக் கூற்றுநிகழும் (தொல். கற்பு. 5, ந.)

(பி - ம்.) [1] 'னெங்கண்புதைத்' [2] 'துளளோ' [3] 'னெஞ்சயர்ந்தோரே', 'நெஞ்சமர்ந்தோளே' [4] 'அவனது கண்புதைத்துழி' (௩)

294. எரிமருள் வேங்கை யிருந்த தோகை
இழையணி மடந்தையிற் றோன்று நாட
இனிதுசெய் தனையா லுந்தை வாழியர்
நன்மனை வதுவை யயரவிவள்
(5) பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே.

எ - து வதுவைசெல்லாநின்றுழித் தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) வதுவையில் தலைவிக்கு மலரணியக்கண்ட தோழி 'இவ்வா றும்படி அன்றே சூட்டினை' எனச் சொல்லியவாறும். மலர்ந்தவேங்கைக் கண் இருந்த தோகை பொன்னணிமடந்தையில் தோன்றுநாடவென்றது நீ வரையாதொழுகுகின்ற ஞான்று நின்றமர் பொன்னணிந்த இன்றுபோலச் சிறப்பவொழுகினையென்பதாம்.

குறிப்பு. எரிமருள் வேங்கை - நெருப்பையொத்த வேங்கைமரத்தின் கண்; மருள்: உவமஉருபு; ஐங். 318 : 2, 367 : 1. தோகை - மயில். மலர்ந்த வேங்கைக்கு இழையும் அதன்கண் உள்ள தோகைக்கு மடந்தையும் உவமை கள்: "மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து" (பதிற். 40 : 22);

புறநா. 224 : 16 - 7. ஆல் : அசைநிலை. நுந்தைவாழியர் என்றது பயந் தோர்ப் பழிச்சல் போன்றது. பின்னிருங்கூந்தல் - பின்னப்பட்ட பெரிய கூந்தல். நாட, மலரணிந்தோய் இனிதுசெய்தனை, நுந்தைவாழியர். வரைவை நல்லதுஎன்றல் ; குறுந். 34.

(மேற்.) மு. தோழி, களவுக்காலத்துற்ற வருத்தத்தின் நீங்கினமை கூறி யது (தொல். கற்பு. 9, இளம்.; ந.) தலைவனைப் பாங்கி வாழ்த்தல் (நம்பி. வரைவு. 4.)

(ச)

295. வருவது கொல்லோ தானே வாரா
தவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிற் [1] புகல்வரு மஞ்ஞை
இருவி யிருந்த குருவி [2] வருந்துறப்
பந்தாடு மகளிரிற் படர்தரும்
[3] குன்றுகெழு நாடனொடு சென்றவென் னெஞ்சே.

எ - து தலைமகன் வரைவிடைவைத்துப் பிரிந்து நீட்டித்துழி உடன் சென்ற நெஞ்சினைத் தலைமகள் நினைந்துகூறியது.

(ப - ரை.) புனவர்கொள்ளிக்கு அஞ்சித் தன்புகலிலேசெல்லும் மயில் புனம் கொய்தபின்பு அரிதாளிலேயிருந்த குருவி எழுவதுவிழுவதாய் வருந் துறச் சிறகை விரித்து ஆடிச்செல்லும் நாடனென்றது பின்பு வரைந்து கொள்ளக்கருதாதே அலரஞ்சித் தன் மனைவயிற்சென்றவன் இக்காலத்து யானும் என்னையத்தாரும் வருந்துறப் பிரிந்தானென்பதாம்.

குறிப்பு. அவண் உறை மேவலின் - தலைவன்தங்குமிடத்தில் பொருந்து தலின். மேவலின் வாராதுஅமைவதுகொல்லோ. புனவர் - தினைப்புனத்துத் தலைவர் ; நற். 119 : 1. புகல் - இருப்பிடம். மஞ்ஞை - மயில். இருவிஇருந்த - புனங்கொய்தபின்பு அரிதாளிலே இருந்த. வருந்துற - துன்பத்தையடைய. மகளிரின் - மகளிரைப்போல. படர்தரும் - ஆடிச்செல்கின்ற.

"சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெருந்துணையும்
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி—முன்றில்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு." (பழைய வெண்பா.)

(மேற்.) மு. தலைவன் பிரிந்துழித் தலைவி கலங்கல் (தொல். களவு. 21, இளம்.; 20, ந.) ; களவியற்காரிகை, பக். 77.

(பி - ம்.) [1] 'கலவமஞ்ஞை' [2] 'வருத்துறப்', 'வெருவுறப்' [3] 'குன்ற நாடனொடு'

(ரு)

296. கொடிச்சி காக்கும் பெருங்குர லேனல்
அடுக்கன் மஞ்ஞை கவரு நாட
நடுநாட் கங்கு லும் வருதி
கடுமா தாக்கி னறியேன் யானே.

எ - து இரவுக்குறிவருகின்ற தலைமகற்குத் தோழி [1] ஆற்றருமைகூறி மறுத்தது.

(ப - ரை.) 'அறியேன்யான்' என்றது இதனால்விளைவன யானறியே னென்பதாம். குறத்தி காக்கும் தினையை மஞ்ஞை கவருநாடவென்றது நின் னுட்டுக்குத்தக்க களவினுகர்ச்சியே விரும்புகின்றாயென்பதாம்.

குறிப்பு. கொடிச்சி - குறிஞ்சிநிலத்தலைவி. பெருங்குரல்ஏனல் - பெரிய கதிரையுடைய தினையை. நடுநாட்கங்குலும் - நடுநிசியிலும். கடுமா - யானை. அறியேன் - அதனால் விளைவனஅறியேன். (பி - ம்.) [1] 'ஆற்றாமைகூறி' (௬)

297. விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாட
பிரியினும் [1] பிரிவ தன்றே
நின்னொடு மேய மடந்தை நட்பே.

எ - து ஒருவழித்தணந்து வரையவேண்டுமென்ற தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) மலர்ந்த வேங்கைச்சினைக்கண் இருந்ததோகை மலர்கொய்யும் மகளிரைப்போலத் தோன்றுநாடவென்றது நீ மனத்தால் எங்கட்கு நல்லது புரியாயெனினும் நன்மைசெய்கின்றாய்போலத் தோன்றுகின்றாயென்பதாம்.

குறிப்பு. சினை - கிளை. வேங்கைமரத்திலுள்ள மயிலுக்குப் பூக்கொய் யும் மகளிர்: "வேங்கை,.....சினையிருந்த தோகை, பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்" (குறுந். 26 : 1 - 3.) வேங்கைப்பூவை மகளிர்கொய்தல்: ஐங். 311 :; மதுரை. 296-7 ; குறுந். 208 : 2 - 4 ; அகநா. 48 : 6. மேய - பொருந் திய. மடந்தைநட்பு - தலைவியினதுகேண்மை. நட்பு பிரிவதன்றே.

(பி - ம்.) [1] 'பிரியாயன்றே' (எ)

298. மழை [1] வர வறியா மஞ்ஞை யாலும்
அடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி
தானெம் மருளா ளாயினும்
[2] யாந்தன் னுள்ளுபு மறந் [3] தறி யேமே.

எ - து தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குணர்த்தியவழி அவள் நாணத்தினால் மறைத்தொழுகியவதனைக் கூறக்கேட்ட தலைமகன் சொல்லியது.

(ப - ரை.) மழையினது வரவையறிந்து மஞ்ஞை ஆலுமென்றது யான் நின்னிடத்துவருகின்ற வரவினையறிந்து இதற்கு அவள் மகிழாநிற்கும்; நீ கூறுகின்றது பொய்யென்பதாம்.

குறிப்பு. மழை வரவு அறியா - மழையின் வரவை அறிந்து. அசை நடைக் கொடிச்சி; ஐங். 299 : 3. எம்மை அருள் செய்யாளாயினும். உள்ளுபு மறந்தறியேம் - நினைத்துப் பிறகு மறந்தறியேம்.

(மேற்.) மு. இது குறி பிழைத்தவழித் தலைவன் தோழிக்குச் சொல்லியது (தொல். களவு. 17, இளம்.) இஃது இரவுக்குறியில் தலைவன் பரிவுற்றது (தொல். களவு. 12, ந.) இறைவிமேல் இறைவன் குறிபிழைப் பேற்றிக் கூறியது (நம்பி. களவு. 44); இ. வி. 519.

(பி - ம்.) [1] 'வரலறியா' [2] 'யான்றனுள்ளுபு' [3] 'தறியேனே' (அ)

299. குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்
அஞ்சி லோதி [1] யசைநடைக் கொடிச்சி
கண்போன் மலர்தலு மரிதிவள்
தன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே.

எ - து இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கிய நிலைமைக்கண் தலைமகள் ஆயவெள்ளத்தோடுகூடி நிற்கக்கண்ட தலைமகன் மகிழ்ந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.

(ப - ரை.) குன்றநாடனென்றது அந்நிலத்துக்குரியனாகிய முருகனை.

குறிப்பு. குன்றநாடன் - முருகனது; தலைவியது தந்தையுமாம். கவான்-பக்கமலையில். பகுவாய் - மலர்ந்த வாயையுடைய. அஞ்சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தல். அடி, 3 : குறுந். 214 : 3. குவளையும் கொடிச்சி கண் போல் மலர்தல் அரிது; மஞ்ஞைக்கு இவள் தன் போல் சாயல் அரிது.

(மேற்.) மு. தோழியும் தலைவியும் உள்வழி வந்த தலைவன் தலைவி தன்மை கூறவே இவள் கண்ணது இவன் வேட்கை யென்று தோழி குறிப் பான் உணரக் கூறியது (தொல். களவு. 11, ந.) தலைவியது பண்பு பாராட்டல் (இ. வி. 501.) (பி - ம்.) [1] 'யசையியற்' (௯)

300. கொடிச்சி கூந்தல் போலத் தோகை
அஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்
வந்தன னெதிர்ந்தனர் கொடையே
அந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே.

எ - து தலைமகன் தானே வரைவுவேண்டிவிடச் சுற்றத்தார் கொடை நேர்ந்தமை தலைமகட்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) கொடிச்சிகூந்தல் போல வேண்டி மஞ்ஞை சிறகை விரிக்கும் வெற்பனென்றது நின்மகிழ்ச்சிக்குத்தக நின்தமர் மகிழ்ச்சிகூர்ந்தாரென்ப தாம்.

குறிப்பு. சிறை - தோகையை. அடி, 1-2 : எதிர்நிலையணி. கொடை எதிர்ந்தனர். அம் தீம் கிளவி - அழகிய இனிய மொழி; விளி. நின் சிறப்புப் பொலிக. (௧௦)

(௩௦) மஞ்ஞைப் பத்து முற்றிற்று.

குறிஞ்சி முற்றிற்று.

கபிலர்

# 4. பாலை

## (௩௧) செலவழுங்குவித்த பத்து

301. மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிணர்
அருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டும்
அவ்வரை யிறக்குவை யாயின்
மைவரை நாட வருந்துவள் பெரிதே.

எ - து பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குச் சொல்லியது.

(ப - ரை.) வெள்ளிலோத்திரத்துக் குளிர்ச்சியையுடைய மலரை ஆற்றின் வெம்மைதீரச் செல்வோர் அணிந்து செல்வரென்றுழி வெம்மை கூறிய வாறாயிற்று.

குறிப்பு. வெள்ளோத்திரம் - பாலைநிலமரம். மையில் வாலிணர் - குற்றமில்லாத வெண்மையான பூங்கொத்தை ; "வெள்ளிலோத்திரம் விளங்கும் வெண்மலர்" (சீவக. 2685.) சென்னிக் கூட்டும் - கூந்தலில் வைக்கும். இறக்குவையாயின் - கடந்து செல்வாயானால். நாட, பெரிது வருந்துவள். (௧)

302. அரும்பொருள் செய்வினை [1] தப்பற்கு முரித்தே
பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்
செல்லா யாயினோ நன்றே
மெல்லம் புலம்ப விவளழப் பிரிந்தே.

எ - து பொருள்வயிற்பிரியும் தலைமகன் [2] பிரிவுடன்படுத்தவேண்டுமென்றுகை அவற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. தப்பல் - தவறுதல். அரிவை என்றது தலைவியை. தகைத்தற்கும் - வருத்தத்தினின்றும் தடுத்தற்கும். மெல்லம் புலம்ப : ஐங். 120 : 5, குறிப்பு. பிரிந்து செல்லாயாயின் நன்றே.

(பி - ம்.) [1] 'தப்பற்கு முரியள்' [2] 'பிரிவுடன் படுக்க' (௨)

303. புதுக்கலத் தன்ன கனிய வாலம்
[1]போகிற‌னைத் தடுக்கும் வேனி [2] லருஞ்சுரம்
தண்ணிய வினிய வாக
எம்மொடுஞ் சென்மோ விடலை நீயே.

எ - து சுரத்தருமைகூறி உடன்செலவுமறுக்கும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. புதுக்கலத்தன்ன கனியஆலம் - புதுப்பானையைப் போன்ற நிறம் பொருந்திய பழத்தையுடைய ஆலமரம் ; "புதுக்கலம் போலும் பூங்கனியாலும்" (சீவக. 2108.) போகில் - பறவை ; ஐங். 325 : 2. தடுக்

கும் - வெளியிற் செல்லவிடாது தடுக்கும்; வேனிலின் கொடுமை கூறப்பட்டது. தண்ணிய - குளிர்மை பொருந்திய. எம்மொடு என்றது தலைவியைக் குறித்தது. தலைவியொடு செல்லின் சுரம் இனியதாகு மென்றபடி; ஐங். 322, 327. (பி - ம்.) [1] 'போகினினே' [2] 'லடுஞ்சுரம்' (ங)

304. கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய
[1]ஆனீர்ப் பத்தல் யானை வெளவும்
கல்லதர்க் கவலை [2] செல்லின் மெல்லியல்
புயனெடுங் கூந்தல் புலம்பும்
(5) வயமான் றோன்றல் வல்லா தீமே.

எ - து பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

(ப - ரை.) 'வல்லாதீமே' என்றது எல்லாம் வல்லாயாயினும் இது மாட்டாயாதற்கு மேற்பட்ட தலைமையில்லை எ - று.

குறிப்பு. கோவலர் கோலால் தோண்டிய. நீர்ப்பத்தல் - நீர்ப்பள்ளத்தை. யானை பத்தல்நீரை வெளவுதல்: நற். 92 : 5-7; 240 : 7-9. கல் அதர்க்கவலை - கல் நிறைந்த கவர்த்த வழியில். புயல்நெடுங்கூந்தல் - மேகம் போன்ற நெடிய கூந்தலையுடைய தலைவி. தோன்றல்: விளி. வல்லாதீமே - வல்லமையில்லாயாயிரு; மே: அசை.

(பி - ம்.) [1] 'ஆனீர்ப்பதலை' [2] 'செலவின் மெல்லியற்', 'செல்லு மெல்லியல்', 'சொல்லு மெல்லியல்' (ச)

305. களிறு பிடிதழீஇப் பிற[1]புலம் படராது
பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்
[2]சுடர்த்தொடிக் குறுமக ளினைய
எனைப்பயஞ் செய்யுமோ விடலைநின் செலவே.

எ - து உடன்போக்கொழித்துத் தனித்துச்செல்வலென்ற தலைமகற்குத் தோழி கூறியது.

குறிப்பு. பிறபுலம் - வேற்றிடம். படராது - செல்லாமல். பசிதின - பசிநோய் தன்னை வருத்த. பைதறுகுன்றம் - பசுமையற்ற குன்றத்தின் கண்; பைது: ஐங். 317 : 2; பதிற். 23 : 3. இனைய - வருந்த. எனைப் பயம் - என்ன பயனை. நின்செலவு என்ன பயனைச் செய்யுமோ. பசி வருத்தவும் பிறபுலம் களிறு படராது என்றது நீயும் அவ்விதம் இருக்கக்கடவையென்றவாறு.

(பி - ம்.) [1] 'புலம்படர்ந்து' [2] 'சுடர்க்கொடிக்' (ரு)

306. வெல்போர்க் குருசினீ வியன்சுர னிறப்பின்
பல்கா ழல்கு லவ்வரி வாடக்
குழலினு மினைகுவள் பெரிதே
[1]விழவொலி கூந்தன் மாஅ யோளே.

எ - து பிரியும் தலைமகற்குத் தோழி தலைமகள் பிரிவாற்றாமை கூறியது.

குறிப்பு. வியன்சுரன் - பெரிய பாலைநிலத்தை. இறப்பின் - கடந்து சென்றால். காழ் - வடங்கள். பல்காழல்குல் : பொருந. 39. அவ்வரி - அழகிய வரிகள். அல்குல் வரிவாட : ஐங். 316 : 2. இனைகுவள் - அழுது இரங்கு வாள். இனைதற்குக் குழல் : நற். 113 : 11 ; "குழலினை வதுபோ லழுதனள்" (புறநா. 143 : 15) ; சீவக. 2945. விழவொலி கூந்தல் - விழாவைப்போலும் (நறுமணங் கமழும்) தழைத்த கூந்தல் ; மலைபடு. 30. மாஅயோள் - மாமை நிறத்தையுடைய தலைவி ; ஐங். 324 : 5. நீ சுரன் இறப்பின் மாஅயோள் பெரிது இனைகுவள்.

(மேற்.) மு. இதனுள் குழலினும் இரங்குவளென்று பிரிந்தவள் இரங்கு தற் பொருள்படத் தோழி தலைவரும் விழுமந் தலைவற்குக் கூறினாள் (தொல். அகத். 39, ந.) (பி - ம்.) [1] 'யவிழொலி கூந்தல்' (௬)

307. ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்
குன்றுடை யருஞ்சுரஞ் செலவயர்ந் தனையே
நன்றில் கொண்கநின் பொருளே
பாவை யன்ன [1]நின் றுணைப்பிரிந்து வருமே.

எ - து பொருள்வயிற்பிரியக் கருதிய தலைமகன் அதன்சிறப்புக் கூறிய வழித் தோழி அதனை இழித்துக்கூறியது.

குறிப்பு. ஞெலிகழை - ஒன்றோடொன்று உரிஞ்சிக்கொண்ட மூங்கில். வயமா-புலி. அழலினின்றும் வயமா வெரூஉம் குன்று. செலவயர்ந்தனையே - செல்லவிரும்பினையே. துணை என்றது தலைவியை. கொண்க, துணையைப் பிரிந்து வரும் நின்பொருள் நன்று இல்.

(பி - ம்.) [1] 'என்றுணைப் பிரிந்து' (௭)

308. பல்லிருங் கூந்தன் மெல்லிய லோள்வயின்
பிரியா யாயினு நன்றே விரியிணர்க்
[1]காலெறு ழொள்வீ தாஅய
[2]முருகமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே.

எ - து 'பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி, 'பிரியாதொழியப் பெறின் நன்று ; பிரிவையாயின் இப்பருவத்து இம்மாமலை எங்களைவிட்டுப் பிரிந்தாற் பிரி' எனச் சொல்லியது.

குறிப்பு. பல்லிருங்கூந்தல் - பலவாகிய பெரிய கூந்தல் ; ஐங். 429 : 1 ; குறுந். 19 : 5 ; நெடுநல். 54 ; கலி. 101 : 41-2 ; அகநா. 43 : 11. மணி. 22 : 130 ; சீவக. 164, 989. மெல்லியலோள்வயின் - தலைவியிடத்தினின்றும். இணர் - கொத்து. எறுழ்ஒள்வீ - ஒளிபொருந்திய எறுழமலர் : குறிஞ்சி. 66. தாஅய - பரந்த. முருகு - முருகக் கடவுள். பிரிந்தென - பிரிய. பிரிமே - பிரிவாயாக.

(பி - ம்.) [1] 'காலுறழொள்வீ' [2] 'முருகமாமலை' (௮)

309. வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனையா னீயே நன்று
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
இறுவரை நாடநீ [1]யிறந்து செய் பொருளே.

எ - து 'பொருள்வயிற் பிரிவல்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. திங்கள் - மாதம். இறந்து - கடந்து. செலவு அயர்ந்தனை - செல்ல விரும்பினை. நின்நயந்து - உன்னை விரும்பி. உறைவி - தங்குகின்ற தலைவியினுடைய. கடுஞ்சூற்சிறுவன் - முதற்புதல்வன். கடுஞ்சூல் - கன்னிச் சூல்; ஐங். 386 : 4; கலி. 110 : 14; குறுந். 287 : 5, 301 : 3. இறுவரை - பெரியமலை; பு. வெ. 146. பொருள் சிறுவனது முறுவல் காண்டலின் இனிதோ.

(மேற்.) மு. தலைவன் கற்பிடத்துப்பிரியுங்கால் தெய்வத்தன்மையின்றி முன்னின்று வெளிப்படக் கூறிய முறையுடைத்தாகிய எதிர்காலத்தின் கண்ணும் தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். கற்பு. 9, ந.)

(பி - ம்.) [1] 'விரைந்து செய்' (௯)

310. பொலம்பசும் பாண்டிற் காசுநிறை யல்குல்
இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே.

எ - து பிரிகின்ற தலைமகற்குத் தோழி, 'நீ நினைக்கின்ற கருமம் முடித்தாயாயினும் இவள்நலம் மீட்டற்கு அரிது' எனச்சொல்லிச் செலவழுங்குவித்தது.

குறிப்பு. பொலம்பசும் பாண்டிற்காசு - பொன்னாலான பசுமையான வட்டக்காசுகள்; பாண்டில் - வட்டம்; ஐங். 316 : 1; பதிற். 90 : 35. இழை நெகிழ்தல் : குறுந். 188 : 3. வல்லுவையாயின் - வல்லாயாயின்; கலி. 24 : 9. விடலை - விளி. நுதற்கவின் அரிது; நுதற்கவின் : குறுந். 109 : 4; கலி. 53 : 24. (௧௦)

(௩௧) செலவழுங்குவித்த பத்து முற்றிற்று.

## (௩௨) செலவுப் பத்து

311. வேங்கை கொய்யுநர் [1]பஞ்சுரம் விளிப்பினும்
ஆரிடைச் செல்வோ ராறுநனி வெரூஉம்
காடிறந் தனரே காதலர்
நீடுவர் கொல்லென நினையுமென் னெஞ்சே.

எ - து 'ஆற்றது அருமைநினைந்து நீ ஆற்றாயாதல்வேண்டா, அவர் அவ்வழி முடியச்சென்றார்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. வேங்கை கொய்யுநர் - வேங்கைப் பூவைப் பறிப்பவர். குறுந். 208 : 2-4. பஞ்சுரம் - பாலைப்பண்; பெருங். 1. 52 : 89. விளிப்பினும் - பாடினும்; குறுந். 207 : 3, 291 : 4; மணி. 4 : 13; திரி. 11; சீவக. 1941, 2691. ஆரிடைச் செல்வோர் - அரிய வழியில் செல்பவர். வெரூஉம் - அஞ்சும். இறந்தனர் - கடந்தனர். நீடுவர் - குறித்த காலத்தில் வாராமல் காலம் தாழ்த்துவர். நெஞ்சு நினையும்.

கொடுஞ்சித்தத்தையும் மாற்றி இன்பம் எய்விக்கும் பாலைப் பண்ணைக் கேட்டும் அதை விரும்பாமல் வெருவுவர் என்றமையின் அக்காட்டு வழியினது அருமையும் கொடுமையும் கூறியவாறு.

(பி - ம்.) [1] 'பைஞ்சுரம்' (௧)

312. அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ
[1]வாள்வனப் புற்ற வருவிக்
[2]கோள்வ லென்னையை மறைத்த குன்றே.

எ - து உடன்போயின தலைமகள் மீண்டுவந்துழி, 'நின் ஐயன்மார் பின் துரந்து வந்தவிடத்து நிகழ்ந்தது என்னை?' என்ற தோழிக்கு நிகழ்ந்தது கூறித் தலைமகன் மறைதற்கு உதவி செய்த மலையை வாழ்த்தியது.

குறிப்பு. சாலியர் - மிகுக. வறனுண்டாயினும்-வறட்சி யேற்படினும். வறனுண்டாயினும் அறஞ்சாலியர்: "வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே" நன். 28. வாள் வனப்புற்ற - ஒளியால் அழகுபெற்ற. வாள் போல் வனப்புற்ற எனினுமாம்; கலி. 42 : 11-2; அகநா. 278 : 7; சீவக. 732. கோள் வல் என் ஐயை - பகைவரைக் கொலை செய்வதில் வல்ல என் தலைவனை; என்ஐ : ஐங். 110 : 3, குறிப்பு. குன்று அறஞ்சாலியர். அறம் சால்க என வாழ்த்தல்: பெருங். 3. 26 : 41. ஐயன்மார் - தமையன்மார்.

(மேற்.) மு. இடைச்சுரத்துத் தமர் வந்துற்றவழித் தலைவி கூறியது (தொல். அகத். 45, இளம்.) இது நின் ஐயன்மார் வந்துழி நிகழ்ந்தது என்னென்ற தோழிக்குத் தலைவி தலைவனை மறைத்த மலையை வாழ்த்தியது (தொல். அகத். 42, ந.) தமருடன் சென்றவள் அவன்புறம் நோக்கிக் கவன்றாற்றல் (நம்பி. வரைவு. 28.)

(பி - ம்.) [1] 'வாள்வயப்புற்ற' [2] 'கோள்வருமென்னையை' (௨)

313. தெறுவ தம்ம [1]நும்மகள் விருப்பே
உறுதுய ரவலமொ டுயிர்செலச் [2]சாஅய்ப்
பாழ்படு நெஞ்சம் படரடக் [3]கலங்க
நாடிடை விலங்கிய வைப்பிற்
காடிறந் தன[4]ணங் காத லோளே.

எ - து தலைமகள் புணர்ந்துடன் போகியவழிச் செவிலியாற்றாமைகண்ட நற்றாய் அவட்குச் சொல்லியது.

(ப - ரை.) 'தெறுவது' என்றது யான் அவள்மேல் வைத்த காதல் என்னால் தெறப்படுவது எ - று.

குறிப்பு. தெறுவது - சுடுகின்றது; புறநா. 29 : 9. நும்மகள் விருப்பு - நும்மகள்மேல் வைத்த விருப்பு; "பொருப்பன் விருப்பு" (சிற். 140, உரை.) விருப்பு தெறுவது. அவலம் - துன்பம். சாஅய் - மெலிந்து. படர் - தலைவி நினைவாலுண்டாகிய நோய். அட - வருத்த. நாடு இடைவிலங்கிய - இருவர் நாட்டையும் இடையில் தடுத்துப் பிரித்த. வைப்பு - இடம். காடிறந்தனள்- காட்டைக் கடந்தனள்.

(மேற்.) தலைவி உடன்போயவழித் தான் பின் செல்லாதே எஞ்சிய காலத்தில் செவிலிக்குக் கூற்று நிகழும்; இது பின் செல்லாது வருந்தி யிருந்த செவிலியைக் கண்ட நற்றாய் கூறியது; இது நற்றாய் கூற்றாய்ச் செவிலி மேல் ஆயிற்று (தொல். களவு. 24, ந.) தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல் (நம்பி. வரைவு. 21.)

(பி - ம்.) [1] 'வென்மகள்' [2] 'சாஅயப்' [3] 'கலங்கா' [4] 'ணம்மணங்கி யோளே', 'ளெங்காதலோளே' (௩)

314. அவிர்தொடி கொட்பக் கழுதுபுக வயரக்
கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவச்
சிறுகண் யானை யாள்வீழ்த்துத் திரிதரும்
[1] நீளிடை யருஞ்சுர மென்பநம்
(5) தோளிடை முனிநர் சென்ற வாறே.

எ - து தலைமகன் பிரிந்துழி அவனுடன்போய் மீண்டார் வழியதருமை தங்களிற் கூறக்கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. தொடி - வளை; கொட்ப - சுழல. கழுது - பேயில் ஒருசாதி; மதுரை. 633. புகவு அயர - உணவு அருந்த. விசும்பு அகவ - வானில் கத்த; யாள் வீழ்த்து - யாளியை வீழ்த்து. திரிதரும் - திரிகின்ற. யானை திரியும் சிறுநெறி: அகநா. 123 : 1-4, 318 : 1. முனிநர் - வெறுப்பவர். ஆறு-வழி. ஆறு, யானை திரிதரும் அருஞ்சுரம் என்ப. (பி - ம்.) [1] 'நீரிடை' (௪)

315. பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கட்
பூசல் கேளார் சேய ரென்ப
இழைநெகிழ் செல்ல லுறீஇக்
கழைமுதிர் சோலைக் காடிறந் தோரே.

எ - து சொல்லாது தலைமகன்பிரிந்துழித் தலைமகள் வேறுபாடுகண்ட தோழி இரங்கிச் சொல்லியது.

(ப - ரை.) 'பாயல்கொண்ட பனிமலர் நெடுங்கட்பூசல்' என்றது அவர் போகின்ற காலத்து விலக்காதவகை துயின்றீரெனக் கண்ணொடு புலந்து கூறுகின்ற பூசல் எ - று.

குறிப்பு. பாயல் - தூக்கம்; ஐங். 176 : 1, குறிப்பு. பூசல் - ஆரவாரம்; வருத்தம் எனினுமாம்; பதிற். 44 : 12. கண்ணொடு புலந்து கூறுகின்ற பூசலே; கலி. 34 : 24; சீவக. 1373. சேயர் - நெடுந்தூரத்திலிருப்பவர். இழை - ஆபரணம். செல்லல் - துன்பத்தை. இழைநெகிழ் செல்லல்: குறுந். 188 : 3, 358 : 1. உறீஇ - அடைவித்து. கழை முதிர் சோலை - மூங்கில் முதிர்ந்த சோலை. காடிறந்தோர் பூசலைக் கேளார், சேயர் என்ப. (௫)

316. பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்தத்
தேரக லல்கு லவ்வரி வாட
இறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்லரை யோமை நீடிய
(5) புலிவழங் கதர [1]கானத் தானே.

எ - து தலைமகள் மெலிவிற்கு நொந்து தலைமகன் பிரிவின்கண் தோழி கூறியது.

குறிப்பு. பாண்டில் - வட்டமான. பொலங்கலம் - பொன்னுபரணம். பொலங்கல் அல்குல்: ஐங். 310 : 1. நந்த - பொலிவழிய. தேர் அகல் அல்குல் - தேர்போன்று அகன்ற அல்குல். அல்குல் அவ்வரி: குறுந். 101 : 5, 180 : 5-6. அல்குல் அவ்வரி வாட: ஐங். 306 : 2, குறிப்பு. புல்லரை ஓமை - புல்லிய அரையையுடைய ஓமை மரம்; குறுந். 79 : 2, 260 : 8. அதர் - வழி. கலம் நந்த, வாட கானத்தான் இறந்தோர்.

(பி - ம்.) [1] 'கானகத்தானே' (௬)

317. [1]சூழ்கம் வம்மோ தோழிபாழ் பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்
டருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச்
சென்ற நெஞ்ச [2]நீடிய பொருளே.

எ - து தலைமகன் பிரிந்து நீட்டித்துழி நெஞ்சினைத் தூதுவிட்ட தலைமகள் அது வாராது தாழ்த்துழித் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. சூழ்கம் - ஆராய்வோம். வம்மோ - வருவாயாக. தோழி: விளி. பைதற - பசுமையற்று. பாலை வெங்காடு - பாலைநிலத்துக் கொடிய காடு; பாலை என்ற மரம் நிறைந்த காடுமாம். தேஎத்து - இடத்து. நீடிய பொருள் - வாராது காலந்தாழ்த்த காரணத்தை. பொருளைச் சூழ்கம், வம்மோ.

(மேற்.) மு. இது நெஞ்சினைத் தூதுவிட்டுத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.)

(பி - ம்.) [1] 'சூழ்கவம்மோ' [2] 'நீட்டிய பொருளே', 'ஈட்டிய பொருளே' (௭)

318. ஆய்நலம் [1]பசப்ப வரும்படர் நலிய
வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ
நசைநனி கொன்றோர் மன்ற விசைநிமிர்ந்
[2]தோடெரி நடந்த வைப்பிற்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

எ - து 'நம்மைப் [3]பிரியார்' என்று கருதியிருந்த தலைமகள் அவன் பிரிந்துழி இரங்கிச் சொல்லியது.

குறிப்பு. ஆய்நலம் - மெலிந்த அழகு. படர் நலிய - துன்பம் வருத்த. வேய் மருள் - மூங்கிலையொத்த. வில்லிழை - ஒளி பொருந்திய ஆபரணம். இழை நெகிழ்தல் : ஐங். 315, குறிப்பு. நசை - விருப்பத்தை. நனி கொன்றோர் - மிகவும் அழித்தவர். விசை - வேகம். எரிநடந்த வைப்பு - கனல் பரக்கும் இடத்தையுடைய : ஐங். 324 : 1, 326 : 1. கோடு - சிகரம். பிறங்கல் மலை - செறிந்த மலை. மலையிறந்தோர் நசை நனி கொன்றோர் மன்ற. (அ)

(பி - ம்.) [1]'பரப்ப' [2]'தோடரி' [3]'பிரியானென்று'

319. கண்பொர விளங்கிய கதிர்தெறு வைப்பின்
மண்புரை பெருகிய மரமுளி கானம்
இறந்தன ரோநங் காதலர்
மறந்தன ரோதின் மறவா நம்மே.

எ - து தலைமகன் பிரிந்துழி அவன் உணர்த்தாது பிரிந்தமை கூறிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. கண்பொர விளங்கிய - கண்ணொளியோடு மாறுபட விளங்குகின்ற ; புறநா. 35 : 19. கதிர் தெறுவைப்பு - சூரியன் சுடுகின்ற இடம். புரை - புழை ; வீடுமாம். மரமுளி கானம் - மரங்கள் உலர்ந்த காட்டை. நம்மை மறவாத காதலர் மறந்தனரோ. (கூ)

320. முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்கழ லசைவளி யெடுப்ப வானத்
துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்கும்
கவலை யருஞ்சுரம் போயினர்
தவலி லருநோய் தலைத்தந் தோரே.

எ - து தலைமகன் பிரிந்துழிச் சுரத்துவெம்மை நினைந்து தலைமகள் சொல்லியது.

குறிப்பு. முள் அரை இலவத்து - முள் பொருந்திய அடி மரத்தையுடைய இலவ மரத்தினது. ஒள் இணர் வான் பூ - ஒளிபொருந்திய கொத்தான பெரிய பூக்களை. அழலசைவளி - தீத்தன்மை பொருந்திய காற்று. எடுப்ப - வீச. உருமுப் படுகனலின் - இடியிற் பட்ட தீயைப்போல. உறைக்கும் - உதிரும் ; புறநா. 384 : 7. முள்ளிலவின் பூவிற்கு இடித்தீ உவமை. கவலை - கவர்த்த வழி. தவல் இல் - கேடில்லாத. தந்தோர் சுரம் போயினர். (கo)

(கூஉ) செலவுப்பத்து முற்றிற்று.

## (௩௩) இடைச்சுரப் பத்து

321. உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை
அலறுதலை யோமை யங்கவட் டேறிப்
புலம்புகொள விளிக்கு நிலங்காய் கானத்து
மொழிபெயர் பன்மலை யிறப்பினும்
ஒழிதல் செல்லா தொண்டொடி குணனே.

**எ - து** பிரிந்து போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது.

**(ப - ரை.)** 'மொழிபெயர் பன்மலை யிறப்பினும்' என்றது பின்னும் செல்லும் வழியை நோக்கி எ - று.

**குறிப்பு.** உலறு தலைப் பருந்து - காய்ந்த தலையினை யுடைய பருந்தினது. உளிவாய்ப் பேடை - உளிபோன்ற வாயையுடைய பெண்பருந்து; உளி யன்னவாய்: **பெருங்.** 1. 55: 20-21. அலறுதலை யோமை - விரிந்த தலையையுடைய ஓமை மரத்தினது; **சிலப்.** 11: 75; அலறுதல் - காய்தலுமாம். அம் கவட்டு - அழகிய கிளையில். ஓமைமேல் பறவை இருத்தல்: **குறுந்.** 79: 2-4, 207: 2-3. புலம்பு - துன்பம். விளிக்கும் - கத்துகின்ற. மொழி பெயர் பன்மலை - மொழி வேறுபட்ட மக்கள் வாழும் பல மலைகளை; "மொழிபெயர் தேத்த ராயினும்" (**குறுந்.** 11: 7.) ஒண்டொடி - தலைவியினது. குணன் ஒழிதல் செல்லாது. (க)

322. நெடுங்கழை முளிய வேனி [1] னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
ஒண்ணுத லரிவையை யுள்ளுதொறும்
[2] தண்ணிய வாயின சுரத்திடை யாறே.

**எ - து** இடைச்சுரத்துக்கண் தலைமகன் தலைமகள்குணம் நினைத்தலில் தனக்குற்ற வெம்மை [3] நீங்கியது கண்டு சொல்லியது.

**குறிப்பு.** கழை - மூங்கில். முளிய - உலர. கல் பக - பாறைகள் பிளக்க. தெறுதலின் - காய்தலின். வெய்ய வாயின - வெப்பம் பொருந்தியவாயின. இனி - இப்போது. அரிவையை - தலைவியை. உள்ளுதொறும் - நினைக்கும் போதெல்லாம். தண்ணியவாயின - குளிர்மை பொருந்தினவாயின. சுரத்திடை ஆறு முன் வெய்யவாயின, இனி தண்ணியவாயின. தலைமகள் குணத்தைத் தலைவன் சுரத்தே நினைத்தல்: **ஐங்.** 325, 327; **குறுந்.** 274.

**(மேற்.)** மு. தலைமகளை இடைச்சுரத்து நினைத்துத் தலைவன் கூறுதல்: **தொல்.** அகத். 48, **இளம்.**; ஷை. கற்பு. 5, **ந.**

**(பி - ம்.)** [1] 'னீடக்' [2] 'தண்ணளியாயின', 'தண்ணளியவாயின' [3] 'நீக்கியது'

(உ)

323\. வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்
வெஞ்சுரக் கவலை நீந்தி
வந்த நெஞ்சநீ நயந்தோள் பண்பே.

எ - து இடைச்சுரத்துத் தலைமகள்குணம் நினைந்த தலைமகன், 'அவள் பண்பு வந்தன' என உவந்து தன்நெஞ்சிற்குச் சொல்லியது.

குறிப்பு. வள் எயிறு - கூர்மையான பற்கள். வயவுறு பிண - வயா நோயுற்ற தனது பெட்டைக்கு; வயாநோய்: ஐங். 51, குறிப்பு. கடத்திடை - பாலை நிலத்தே. கள்ளியங்கடம்: குறுந். 16 : 5, 67 : 5. கேழல் - பன்றியை. கவலை நீந்தி - கவர்த்த வழிகளைக் கடந்து. நெஞ்சம்: விளி. நயந்தோள் - தலைவியது. பண்பு வந்த. (ங)

324\. எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற
நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கின்
(5) தேம்பாய் கூந்தன் மாஅ யோளே.

எ - து பிரிந்துவந்த தலைமகன் தலைமகளை நலம்பாராட்டக்கண்ட தோழி, 'இவள்குணத்தினை மறந்து அமைந்தவாறு யாது?' என வினவினட்கு அவன் சொல்லியது.

குறிப்பு. எரி - நெருப்பை. என்றூழ் - வெயிலையுடைய. நீளிடை - நீண்ட இடைச்சுரத்தே. கண்படுப்பினும் - தூங்கினும். காண்குவென் - காண்பேன். நள்ளென் கங்குல் - இருள் செறிந்த இரவு; குறுந். 6 : 1. நளி - குளிர்ச்சி. சுணங்கிற்கு வேங்கைப் பூ : சிறுபாண். 23-4; கலி. 57 : 17, 64 : 26-7; அகநா. 174 : 10-13; புறநா. 352 : 12-3. தேம் - நறுமணம். மாயோளைக் காண்குவன். பிரிவின்கண் தலைவன் தலைவியைக் கனவிற் காண்டல்; தொல். பொருள். 3; குறுந். 147.

(மேற்.) மு. பிரிந்த காலத்து இவளை மறந்தவாறென்னென்ற தோழிக்குத் தலைவன் கூறியது (தொல். கற்பு. 5, ந.) (ச)

325\. வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுர நலியா
தெம்வெங் காதலி பண்பு[1] துணைப் பெற்றே.

எ - து பிரிந்து வந்த தலைமகன், 'சுரத்தின் வெம்மை எங்ஙனமாற்றினீர்?' என்ற தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. அரையத்து - அரசமரத்தினது; தொல். உயிர்மயங்கு. 81. வெரீஇ - அஞ்சி. போகில் - பறவை; ஐங். 303 : 2. புகா - உணவு. பிறிது புலம் - வேற்றிடம். வெம்பலை : வெம்பல் - கொதித்தலையுடைய; ஐ :

சாரியை; நற். 84 : 9. நலியாது - வருத்தாது; முற்று. வெம்காதலி - விருப்பமுடைய தலைவியது. பெற்று - பெறுதலால். பெறுதலால் சுரம் நலியாது. தலைவியை நினைந்து செல்லின் கானமும் இனியவாதல் : ஐங். 322, 327 ; குறுந். 274.

(பி - ம்.) [1] 'துணை பெற்றே' (ரு)

326. அழலவிர் நனந்தலை நிழலிடம் பெறாது
மடமா னம்பிணை மறியொடு திரங்க
நீர்மருங் கறுத்த நிரம்பா வியவின்
இன்னா மன்ற சுரமே
(5) இனிய மன்றயா னொழிந்தோள் பண்பே.

எ - து இடைச்சுரத்து வெம்மை ஆற்றாகிய தலைமகன் தலைமகள் குணம்நினைந்து நொந்து சொல்லியது.

குறிப்பு. அழலவிர் நனந்தலை - நெருப்புப் பரந்த அகற்சியையுடைய இடம்; நனவென்பது அகலமென்னும் குறிப்புப்பொருளை உணர்த்துவதோர் உரிச்சொல். பெறாது - பெறாமல். மடமான் அம் பிணை - மடம் பொருந்திய அழகிய பெண்மான். மறியொடு திரங்க - தன்குட்டியொடு உலர; திரங்கல் - உலர்தல்; மலைபடு. 431; புறநா. 177 : 2. இயவின் - வழியினும். இன்னா - துன்பத்தைத் தருவன. ஒழிந்தோள் - நீங்கியோள்; தலைவி. சுரம் இன்னா, பண்பு இனிய. (சு)

327. பொறிவரித் தடக்கை [1] வேத லஞ்சிச்
சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா
[2]வெயின்முளி சோலைய வேயுயர் சுரனே
அன்ன வாரிடை யானும்
(5) தண்மை செய்தவித் தகையோள் பண்பே.

எ - து பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தலைமகள்குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது.

(ப - ரை.) 'சிறுகண்யானை நிலந்தொடல் செல்லா' என்பது முற்று.

குறிப்பு. பொறிவரித்தடக்கை - புள்ளிகளையும் வரிகளையுமுடைய பெரிய துதிக்கை. வேதல் - சுடுதல். நிலம்தொடல் செல்லா - நிலத்தைத் தொட்டுத் தோய்த்துச் செல்லாது; யானையின்கை நிலந்தோய்தல் உத்தம இலக்கணம் : "நிலந் தோயு மிரும்பிடித் தடக்கை" (சிறுபாண். 19.) வெயில் முளி சோலைய வேய் - வெயிலால் உலர்ந்த சோலையிலுள்ள மூங்கில்; ஐங். 315 : 4. அன்ன - அத்தன்மையான. ஆரிடையானும் - அரிய வழியிடத்தும்; ஆன் இடப்பொருளில் வந்தது. தகையோள் பண்பு தண்மை செய்த.

(பி - ம்.) [1] 'வேகு' [2] 'வெயின்முனி' (எ)

328. நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்
தண்ணிய வாயினும் வெய்ய மன்ற
மடவர லின்றுணை யொழியக்
கடமுதிர் சோலைய [1] காடிறந் தேற்கே.

எ - து 'மழைவீழ்தலாற் சுரம் தண்ணென்றது, இனி வருத்தமின்றிப் போகலாம்' என்ற உழையர்க்குத் தலைமகன் சொல்லியது.

குறிப்பு. தளித்தென - துளித்ததாக. தாஅய் - பரந்து. தண்ணியவாயினும்-குளிர்ந்த தன்மையையுடையனவாயினும். துணைஒழிய-தலைவியைப் பிரிந்து. கடம் - அருநெறி. சோலைய - சோலையையுடையனவான. காடிறந்தேற்கு - காட்டைக்கடந்த எனக்கு. காடிறந்தேற்கு வெய்ய.

உழையர்-பக்கத்திலிருந்து ஏவலைச்செய்பவர்.

(பி - ம்.) [1] 'காடிறந்தோற்கே' (அ)

329. ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை
வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு
மறுதரு வதுகொ றானே செறிதொடி
கழிந்துகு நிலைய வாக
ஒழிந்தோள் கொண்டவெ [1] னுரங்கெழு நெஞ்சே.

எ - து இடைச்சுரத்தின்கண் மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைமகள் உழையர்க்குச் சொல்லியது.

குறிப்பு. ஆள்வழக்கு அற்ற - மனிதர் நடமாட்டமே இல்லாத. நனந்தலை - பரந்த இடத்தையுடைய. நீந்தி - கடந்து. மறுதருவது கொல் - சுழலுவதோ. உகு நிலையவாக - உகுகின்ற நிலைமையுடையனவாக. ஒழிந்தோள் - பிரிந்தோள்; தலைவி. உரம் - வலிமை. நெஞ்சு மறுதருவது கொல்.

மீளலுறும் நெஞ்சம் - தலைவியின் பால் மீளும் நெஞ்சம்.

(மேற்.) மு. இது மீளலுறும் நெஞ்சினைநொந்து தலைவன் உழையர்க்கு உணர்த்தியது (தொல். கற்பு. 5, ந.)

(பி - ம்.) 'னூங்கெழு' (கூ)

330. வெந்துக ளாகிய வெயிற்கட நீந்தி
வந்தன மாயினு மொழிகினிச் செலவே
அழுத கண்ண ளாய்நலஞ் சிதையக்
கதிர்தெறு வெஞ்சுர நினைக்கும்
அவிர்கோ லாய்தொடி யுள்ளத்துப் படரே.

எ - து பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

குறிப்பு. வெம் துகளாகிய - வெய்ய பொடியாகிய; கடத்துக்கு அடை. கடம் - பாலைநிலம். ஒழிகினி - ஒழிக இனி; தொகுத்தல் விகாரம்; கலி.

4 : 25. செலவு இனி ஒழிக. ஆய்நலம் - அழகிய நலம். கோல் - திரட்சி. தொடி - வளை. ஆய்தொடி - தலைவியினது. படர் - நினைவு. உள்ளத்துப் படர் சுரம் நினைக்கும், இனிச் செலவு ஒழிக. (௧௦)

(௩௩) இடைச்சுரப் பத்து முற்றிற்று.

## (௩௪) தலைவி[1]யிரங்கு பத்து

331. அம்ம வாழி தோழி யவிழிணர்க்
கருங்கான் மராஅத்து [2] வைகுசினை வான்பூ
அருஞ்சுரஞ் செல்லுந ரொழிந்தோ ருள்ள
இனிய கமழும் வெற்பின்
(5) இன்னா தென்ப வவர்சென்ற வாறே.

எ - து தலைமகன் பிரிந்துழி, 'செல்லும் வழியிடத்து மலையின் உள தாகிய நாற்றத்தால் நம்மை நினைத்து முடியச்செல்லார், மீள்வரோ' எனக் கேட்ட தலைவிக்கு, 'அவர் முடியச்சென்றார்' என்பதறிந்து [3] இரங்கித் தோழி கூறியது.

(ப - ரை.) சென்றசுரம் பிரிந்தார் தத்தம் துணைவியரை நினையும்படி வெறிகமழும் மலரையுடைத்தாகலும் செலற்கருமையால் இன்னாமையுடை மையும் தலைவி இரங்குதற்குக் [4] காரணமாயின எ - று.

குறிப்பு. கருங்கால் மராஅத்து - கரிய அடிமரத்தையுடைய வெண் கடம்பு மரத்தில். சினை - கிளையிலுள்ள. வான்பூ - வெள்ளிய பூ. ஒழிந் தோர் - தாம் பிரிந்த துணைவியரை. உள்ள - நினைக்க. கமழும் - நறு மணம் வீசுகின்ற. அவர் - தலைவன். வெற்பின் ஆறு இன்னாது என்ப.

(பி - ம்.) [1] 'யிரங்குப் பத்து' [2] 'வெஞ்சினை' [3] 'இரங்கத்' [4] 'காரண மாயிற்று' (௧)

332. அம்ம வாழி தோழி யென்னதூஉம்
அறனில மன்ற தாமே விறன்மிசைக்
குன்றுகெழு கானத்த பண்பின் [1]மாக்கணம்
கொடிதே காதலிப் பிரிதல்
(5) செல்லல் லைய [2] வென்னா தவ்வே.

எ - து பிரிந்த தலைமகன், 'சுரத்திடைக் கழியச் சென்றான்' என்பது கேட்ட தலைமகள் அங்குள்ள மாக்களை நொந்து தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. என்னதூஉம் - சிறிதும். அறன் இல - அறமில்லாதன. மாக்கணம் - விலங்கின் கூட்டம். காதலிப் பிரிதல் - காதலியைப் பிரிதல். செல்லல் - போதல் வேண்டா. என்னாது - என்று கூறாது. மாக்கணம், 'ஐய, பிரிதல் செல்லல்' என்னாது, ஆதலின் கொடிது.

(பி - ம்.) [1] 'மான்கணம்' [2] 'வென்னாவவ்வே' (௨)

333. அம்ம வாழி தோழி யாவதும்
[1] வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோ
டியாஅந் துணைபுணர்ந் துறைதும்
(5) யாங்குப் பிரிந்துறைதி [2] யென்னு தவ்வே.

எ - து புட்களை நொந்து சொல்லியது.

குறிப்பு. யாவதும் - சிறிதும். வல்லாகொல்லோ - வல்லமையில்லாதனவோ. அவண - தலைவன் சென்ற இடத்திலுள்ள. புள்ளினப் பெருந்தோடு - புள்ளினங்களின் பெரிய தொகுதி: தோடு - தொகுதி; பதிற். 12 : 6, 19 : 16. துணைபுணர்ந்து உறைதும் - பெடையைக்கூடித் தங்குகின்றேம். யாங்கு - எப்படி. உறைதி - தங்குகிறாய். புள்ளினம், 'யாம் புணர்ந்துறைதும்; நீ யாங்குப் பிரிந்து உறைதி' என்னாது, ஆதலின் வல்லாகொல்லோ.

(மேற்.) மு. இது புள்ளை நோந்து தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.)

(பி - ம்.) [1] 'வல்லார்கொல்லோ' [2] 'யென்னுமாறே', 'யென்னு வவ்வே' (௩)

334. அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் [1] பின்செலச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
(5) பல்லித ழுண்க ணழப்பிரிந் தோரே.

எ - து பிரிவு நீட ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'பல்லிதழுண்கண் அழப் பிரிந்தோர்' என்றது தாம் குறித்த எல்லைக்கண் வாராது நீட்டித்தாரென்பதாம்.

குறிப்பு. சிறியிலை நெல்லி - சிறிய இலைகளையுடைய நெல்லி மரம். சென்றோர் - தலைவர். பல்லிதழ் உண்கண் : ஐங். 170 : 4, குறிப்பு. அழப் பிரிந்தோர் வலியர். தலைவி அழுதல் : குறுந். 82 : 2.

(மேற்.) மு. இது வன்புறை யொழிந்து தலைவி கூறியது (தொல். கற்பு. 8, ந.)

(பி - ம்.) [1] 'பின்படச்' (௪)

335. அம்ம வாழி தோழி நம்வயின்
நெய்த்தோ ரன்ன [1] செவிய வெருவை
கற்புடை மருங்கிற் கடுமுடை [2] பார்க்கும்
காடுநனி கடிய வென்ப
(5) நீடியிவண் [3] வருநர் சென்ற வாறே.

எ - து தலைமகன் சென்ற சுரத்தினிடத்துக் [4]கொடுமை பிறர் கூறக் கேட்ட தலைமகள் ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. நெய்த்தோர் - இரத்தம். செவிய - காதையுடைய. எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து; கழுகெனினுமாம்; புறநா. 64 : 4, உரை; "செஞ்செவி யெருவை" (அகநா. 3 : 5, 51 : 5-6.) கடுமுடை - மிக்க புலால் நாற்றம்; அகநா. 3 : 9. நீடி - காலம் தாழ்த்து. வருநர் - தலைவன். ஆறு, கடிய என்ப.

(பி - ம்.) [1] 'செவ்விய' [2] 'யார்க்கும்' [3] 'வருவர்' [4] 'கடுமை' (ரு)

336. அம்ம வாழி தோழி நம்வயிற்
பிரியலர் போலப் புணர்ந்தோர் மன்ற
நின்றதில் பொருட்பிணி முற்றிய
என்றூழ் நீடிய சுரனிறந் தோரே.

எ - து பிரிவதற்கு முன்பு தங்களுடன் அவனொழுகிய திறம் நினைந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. பிரியலர்போல - பிரியாதவர்போல. பொருட்பிணி - பொருள் முயற்சிக்கண் உள்ள உள்ளப்பிணிப்பு; குறுந். 255 : 7. என்றூழ் - வெயில். புணர்ந்தோர் இறந்தோர். (சு)

337. அம்ம வாழி தோழி நம்வயின்
மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினும்
இனிய மன்ற தாமே
பனியிருங் குன்றஞ் சென்றோர்க்குப் பொருளே.

எ - து தலைமகன் பொருள்வயிற் பிரிந்துழித் தன்முயக்கினும் அவற்குப் பிற்காலத்துப் பொருள் சிறந்ததெனத் தலைவி இரங்கித் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. நம்வயின் - நம்மிடம். மெய்யுற - உடல் பொருந்த. கைகவர் முயக்கினும் - கைகள் விரும்புகின்ற முயக்கத்தைக் காட்டிலும். சென்றோர்க்குப் பொருள்தாம் முயக்கினும் மன்ற இனிய; கலி. 18 : 1-2. (எ)

338. அம்ம வாழி தோழி சாரல்
இலையில மலர்ந்த வோங்குநிலை யிலவம்
மலையுறு தீயிற் சுரமுதற் றோன்றும்
பிரிவருங் காலையும் பிரிதல்
(5) அரிது[1]வல் லுநர்நங் காத லோரே.

எ - து தலைமகன் பிரிந்துழி, 'இக்காலத்தே பிரிந்தார்' எனத் தலைமகள் இரங்கிச் சொல்லியது.

குறிப்பு. இலை இல மலர்ந்த - இலையில்லாததாய் மலர்ந்த. இலவம் - இலவமரம். இலையில மலர்ந்த இலவம்; "இலையில மலர்ந்த முகையி

லிலவம்" (அகநா. 11 : 3, 185 : 12.) தீயின் - தீயைப்போல. இலவமலர்க் குத் தீ : ஐங். 368 : 1. பிரிவருங்காலையும் - பிரிதற்கு அருமையான காலத்திலும். வல்லுநர் - திறமையுடையவர்.

(பி - ம்.) [1] 'வல்லினர்' (அ)

339. அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ[1] லுகக்கு மாலையும்
இன்றுகொல்[2] காதலவர் சென்ற நாட்டே.

எ - து தலைமகன் குறித்த பருவவரவின்கண் மாலைப்பொழுது கண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. குறுஞ்சினை - குறுகிய கிளைகளையுடைய. வேம்பின் நறும் பழம் - வேம்பினது வாசனைபொருந்திய பழத்தை. உணீஇய - உண்ணுதற்கு. வாவல் உகக்கும் - வௌவால் உயரச்செல்லும். மாலையில் பழுமரம் நோக்கி வௌவால் செல்லுதல் : ஐங். 378 : 1-2 ; குறுந். 172 : 1-2. இன்றுகொல் - இல்லையோ. நாட்டு, மாலையும் இன்றுகொல்.

(மேற்.) மு. திணைமயக்குறுதலுள் பாலைக்கண் மாலை வந்தது (தொல். அகத். 12, ந.) ; இ. வி. 394. (பி - ம்.) [1] 'லுகுக்கு', 'லுவக்கு' [2] 'தோழியவர்' (க)

340. அம்ம வாழி தோழி காதலர்
உள்ளார் கொன்னு [1]மருளற் றனங்கொல்
விட்டுச் சென்றனர் நம்மே
தட்டைத் தீயி னூரல ரெழவே.

எ - து தலைமகன் பிரிந்துழி, 'கடிதின் வருவர்' என ஆற்றியிருந்த தலைவி அவன் நீட்டித்துழி ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. உள்ளார்கொல் - நினையாரோ. அருளற்றனம்கொல் - அருள் செயற்குத் தகுதியற்றவராேனோமோ. தட்டைத்தீயின் - மூங்கிலிற் பற்றிய தீயைப்போல. அலர் எழ விட்டுச்சென்றனர். (பி - ம்.) [1] 'மருளூற்' (கo)

தலைவியிரங்கு பத்து முற்றிற்று.

## ௩௫.—இளவேனிற் பத்து

341. அவரோ வாரார் தான்வந் தன்றே
குயிற்பெடை யின்குர லகவ
அயிர்க்கேழ் நுண்ணற னுடங்கும் பொழுதே.

எ - து தலைமகன் பிரிந்துழிக் குறித்தபருவம் வரக்கண்ட தலைமகள் சொல்லியது.

இனி வருகின்ற பாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும்.

குறிப்பு. அவரோ வாரார் : குறுந். 221 : 1. அகவ - கூவ. அயிர்க்கேழ் நுண்ணறல் - கருமணல் கெழுமிய நுண்ணிய நீர். அவர் வாரார், பொழுது வந்தன்று. (க)

342. அவரோ வாரார் தான்வந் தன்றே
சுரும்புகளித் தாலு மிருஞ்சினைக்
கருங்கா னுணவங் கமழும் பொழுதே.

குறிப்பு. ஆலும் - ஒலிக்கும். இருஞ்சினை - பெரிய கிளை. நுணவம் - நுணா; இது வேனிற்கு உரிய மலர். (உ)

343. அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே.

குறிப்பு. கோங்கம் - கோங்குமரம். பயந்த - அளித்த. அணி - அழகு. முகை உடையும்பொழுது - மொட்டு மலரும் காலம். கோங்கு இளவேனிற்கு உரியது; "வேனிற் கோங்கு" (புறநா. 321 : 4.) (௩)

344. அவரோ வாரார் தான்வந் தன்றே
நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே.

குறிப்பு. குராவின் பூவைப் பாவை என்றல் மரபு; திணைமா. 65; சீவக. 1270; சூளா. இரத. 49, சுயம்வர. 80. செய்யாப்பாவை என்றது பாயாவேங்கை என்பதுபோல. (௪)

345. அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ [1]வதிர றாஅய்க்
கதுப்பற லணியுங் காமர் பொழுதே.

குறிப்பு. அதிரல் - புனலிக்கொடி; குறிஞ்சி. 75; நற். 337 : 3. தாஅய் - பரந்து. கதுப்புஅறல் - கூந்தல் போன்ற கருமணல். அதிரல் கூந்தலில் அணியத்தக்கது; நற். 52 : 1 - 2.

(பி - ம்.) [1] 'வகிரா' (௫)

346. அவரோ வாரார் தான்வந் தன்றே
அஞ்சினைப் பாதிரி [1]யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே.

குறிப்பு. பாதிரி - பாதிரிமலர். அலர்ந்தென - அலர்ந்ததென்று. செங்கண் இருங்குயில் : அகநா. 229 : 19; பெருங். 3. 6 : 10-11. அறையும் - கூவும்.

(பி - ம்.) [1] 'யலர்த்தெனச்' (௬)

347. அவரோ வாரார் தான்வந் தன்றே
எழிற்றகை யிளமுலை பொலியப்
[1]பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே.

**குறிப்பு.** புன்கம்பூவுக்குப் பொரி; **ஐங்.** 368 : 2 ; **நற்.** 9 : 5 ; **குறுந்.** 53 : 2 - 4, 341 : 2 ; **கலி.** 33 : 11 ; **அகநா.** 116 : 5 - 6 ; **திணைமொழி.** 14 ; **சீவக.** 1649 ; **சூளா.** இரத. 56, தூதுவிடு. 1. முறி திமிர்பொழுது - தளிரை அப்பும் பொழுது.

**(மேற்.)** மு. ஆசிரியப்பாவிற்கு மூன்றடி சிறுமை (**யா. வி.** 32.)

**(பி - ம்.)** [1] 'பொரியபூம்'

(எ)

348. அவரோ வாரார் தான்வந் தன்றே
வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம்
மணங்கமழ் தண்பொழின் மலரும் பொழுதே.

**குறிப்பு.** வலஞ்சுரி மராஅம் - வலமாகச் சுரித்த வெண்கடப்பமலரை ; மராம் இளவேனிலில் மலர்வது ; **குறுந்.** 22 : 3 - 4, 211 : 4 - 5 ; **தே. திருஞா.** நாகைக்காரோணம்.

(அ)

349. அவரோ வாரார் தான்வந் தன்றே
பொரிகான் மாஞ்சினை புதைய
எரிகா லிளந்தளி ரீனும் பொழுதே.

**குறிப்பு.** பொரிகால் மாஞ்சினை - பொரிந்த அடியையுடைய மாமரத்தினது கிளை. புதைய - மறைய. எரிகால் இளந்தளிர் - நெருப்பைப்போன்ற ஒளியைக் கக்குகின்ற இளைய தளிர். மாந்தளிர்க்கு எரி : **தக்க.** 625; "சீதப் புனலுண் டெரியைக் காலும், சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே" (**சுந்தர. தே.**)

(க)

350. அவரோ வாரார் தான்வந் தன்றே
வேம்பி ணொண்பூ வுறைப்பத்
தேம்படு கிளவியவர் தெளிக்கும் பொழுதே.

**குறிப்பு.** உறைப்ப - உதிர. தேம்படுகிளவியவர் - மகளிரை. தெளிக்கும் - தெளிவுபெறச் செய்யும். வேம்பு வேனிலில் மலர்வது : **குறுந்.** 24: 1-2.

341 - 50. பொழுது வந்தது, தலைவர் வந்திலர் : **குறுந்.** 155 : 3 - 7 ; 254 : 1 - 3.

(கo)

(ருரு) இளவேனிற் பத்து முற்றிற்று.

# (௩௬) வரவுரைத்த பத்து

351. அத்தப் பலவின் வெயிறின் சிறுகாய்
அருஞ் [1]சுரஞ் செல்வோ ரருந்தினர் கழியும்
காடுபின் னொழிய வந்தனர் தீர்கினிப்
பல்லித ழுண்கண் மடந்தைநின்
நல்லெழி லல்குல் வாடிய நிலையே.

**எ - து** பிரிந்த தலைமகன்வரவு உணர்ந்ததோழி தலைமகட்குச் சொல்லியது.

**குறிப்பு.** அத்தப்பலவின் - வழியிலுள்ள பலாமரத்தினது. அருந்தினர் கழியும் - அருந்திச்செல்லும். தீர்கினி - தீர்க இனி; தொகுத்தல்விகாரம்; **ஐங்.** 494 : 4. பல்லிதழ் உண்கண் : **ஐங்.** 170 : 4, குறிப்பு. மடந்தை : விளி. வாடியநிலை இனித் தீர்க. (**பி - ம்.**) [1] 'சுரஞ்செல்வோர் வருந்தினர்' (௧)

352. விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுக லன்ன விழுப்பிணர்ப்
பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்
வெஞ்சுர மரிய வென்னுர்
வந்தனர் தோழிநங் காத லோரே.

**இதுவுமது.**

(**ப - ரை.**) 'வெஞ்சுரம் அரிய என்னுர் வந்தனர்' என்றது இன்று இடையிலே தங்காது வந்தனர் எ - று.

**குறிப்பு.** விழுத்தொடைமறவர் - சிறந்தமாலையையுடைய மறவர். எழுத்துடைநடுகல்: **ஐந். எழு.** 29. தொலைந்தோரது நடுகல் அன்ன. பிணர் - சருச்சரை. நடுகல் யானைப்பிணருக்கு உவமை. உறைக்கும் - மிகும்; "உப்புறைப்ப" (**பெரும்பாண்.** 379, **ந.**மேற்.) அரிய - கடத்தற்கு அரிய. (௨)

353. எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போலச்
சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகலம்
நீயினிது முயங்க வந்தனர்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

**இதுவுமது.**

**குறிப்பு.** எரிக்கொடி - சோதிக்கொடி. கவைஇய - வளைந்த. செவ்வரை - சிவந்த மலை. அகலம் - மார்பு. மார்புக்கு மலையும் அதன்மேலுள்ள அணிக்கு எரிக்கொடியும் உவமைகள். இறந்தோர் - கடந்தோனுகிய தலைவன். இறந்தோர் வந்தனர். அடி, 4 : **குறுந்.** 232 : 6. (௩)

354. ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நா யேற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்
அரிய சுரன்வந் தனரே
தெரியிழை யரிவைநின் பண்புதர விரைந்தே.

**இதுவுமது.**

**குறிப்பு.** ஈர்ம்பிணவு - அன்புடைய பெட்டையை. ஏற்றை : ஆண்பாற் பெயர். மறி - குட்டி. மான்பிணை - பெண்மான். கொள்ளாது - பற்றுமல். அரிவை : விளி. விரைந்து சுரனின்றும் வந்தனர். (ச)

355. திருந்திழை யரிவை நின்னல முள்ளி
அருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
[1]சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரும்
(5) நெறிவிலங் கதர [2] கானத் தானே.

**எ - து** நினைந்த எல்லையளவும் பொருள்முற்றி நில்லாது பெற்றபொருள் கொண்டு தலைவியை நினைந்து மீண்ட தலைமகன் அவட்குச் சொல்லியது.

(**ப - ரை.**) 'பொருட்பிணி பெருந்திருவுறுக' என்றது மேல் உளதாகும் பொருட்பிணி திருவுறுவதாகவெனக் குறிப்பின் வெகுண்டு உரைத்தது. 'சொல்லாது பெயர்தந்தேனே' என்றது உடன்சென்றோர் விலக்குவரெனச் சொல்லாது மீண்டேன் எ - று.

**குறிப்பு.** அரிவை - விளி. உள்ளி - நினைந்து. பொருட்பிணி: **ஐங்.** 336 : 3, குறிப்பு. பெருந்திரு உறுகஎன - பெருஞ் செல்வத்தைப் பெறுக என்று; சீவக. 961. சொல்லாது - உடன் இருப்போரிடமும் சொல்லாது. பெயர்தந்தேன் - மீண்டேன். பொறி - புள்ளி. பொறியானை : **ஐங்.** 46 : 6. அதர் - வழி. கானத்தானே பெயர்தந்தேன்.

நினைந்த எல்லையளவும் பொருள் முற்றிநில்லாது : "சுரம்பல விலங்கிய அரும்பொருள், நிரம்பா வாகலின்" (**குறுந்.** 59 : 5-6.)

(**மேற்.**) மு. பாலைத்திணைக்கு விரவும் பொருள்களுள் ஒன்றாகிய தலைவன் மீட்சி கூறிற்று ; இது பெற்ற பொருள் கொண்டு நின் நலம் நயந்து வந்தேன் என்றது (**தொல்.** அகத். 45, **ந.**)

(**பி - ம்.**) [1] 'செல்லாது' [2] 'கானந்தானே' (ரு)

356. [1]உள்ளுதற் கினிய மன்ற செல்வர்
யானை பிணித்த பொன்புனை கயிற்றின்
ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை
உள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.

**எ - து** வினைமுற்றி மீண்டுவந்த தலைமகன் தலைவிக்கு அவள்குணம் புகழ்ந்து கூறியது.

(ப - ரை.) 'உள்ளம்வாங்கத் தந்த நின்குணன்' என்றது என்னுள்ளம் வாங்குதற்பொருட்டு நீ தந்த குணங்கள் எ - று.

குறிப்பு. உள்ளுதற்கு - நினைத்தற்கு. பொன்புனை கயிற்றின் - பொன்னாற் செய்யப்பட்ட கயிற்றைப் போன்ற. எரிமேய்ந்த - நெருப்புத்தின்ற; கலி. 13 : 2. வாங்க - கொள்ள. நின்குணன் உள்ளுதற்கு இனிய.

(பி - ம்.) [1] 'உள்ளற்கினிய' (௬)

357. குரவ மலர மரவம் பூப்பச்
சுரனணி கொண்ட கானங் காணூஉ
அழுங்குக செய்பொருட் செலவென விரும்பிநின்
அங்கலிழ் மாமை கவின
(5) வந்தனர் தோழிநங் காத லோரே.

எ - து பொருள்வயிற்பிரிந்து ஆண்டு உறைகின்ற தலைமகன் குறித்த வரவுகண்டு கடிதின் மீண்டுவந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

(ப - ரை.) 'அழுங்குக செய்பொருட்செலவு' என்றது மேலுளதாகும் பொருட்பிணிச்செலவும் இனிக் கெடுவதாக எ - று.

குறிப்பு. குரவமும் மரவமும் : ஐங். 344, 348. காணூஉ-கண்டு. அழுங்குக - கெடுக; தொல். உரி. 52. செலவு - இனிச் செல்லுதல். செலவு அழுங்குக. அம் கலிழ் மாமை - அழகு ஒழுகுகின்ற மாமைநிறம். கவின - ஒளிபெற. காதலோர் வந்தனர். (எ)

358. கோடுயர் பன்மலை யிறந்தன ராயினும்
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
[1]உடைத்தெழு வெள்ள மாகிய கண்ணே.

எ-து தலைமகள் ஆற்றாமைகண்டு பிரிந்த தலைமகன் வந்தனனாகத் தோழி சொல்லியது.

குறிப்பு. கோடு - சிகரம். இறந்தனராயினும் - கடந்தாராயினும். நீடு நினைந்து - காலந் தாழ்த்தமையை நினைந்து. துடைத்தொறும் - துடைக்குந்தோறும். தடுப்பினும் வெள்ளம் உடைத்தல்; நாலடி. 222. கண் நீட விடுமோ.

(மேற்.) மு. பாலைத்திணைக்கு விரவும் பொருள்களுள் ஒன்றாகிய தலைவன் மீட்சி கூறிற்று (தொல். அகத். 45, ந.) (பி - ம்.) [1] 'உடைத்தரு' (அ)

359. அரும்பொருள் வேட்கைய மாகிநிற் றுறந்து
பெருங்க லதரிடைப் பிரிந்த காலைத்
தவநனி நெடிய வாயின வினியே
அணியிழை யுள்ளியாம் வருதலின்
(5) நணிய வாயின சுரத்திடை யாறே.

எ - து மீண்டுவந்த தலைமகன் அவளைப் பிரிகின்றகாலத்துச் சுரத்துச் சேய்மையும் வருகின்றகாலத்து அதன் அணிமையும் கூறியது.

குறிப்பு. வேட்கையமாகி - விருப்பத்தை உடையேமாகி. நிற்றுறந்து - நின்னைத் துறந்து. அதர் - வழி. தவநனி நெடிய - மிகவும் நீண்டதாக. அணியிழை - தலைவியை. உள்ளி - நினைந்து. நணிய - அண்ணியதாக. ஆறு பிரிந்தகாலை தவநனி நெடியவாயின, அணியிழை உள்ளிவருதலின் நணியவாயின. (கூ)

360. எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடை
அரிய வாயினு மெளிய வன்றே
அவவுறு நெஞ்சங் [1] கவவுநனி விரும்பிக்
கடுமான் றிண்டேர் [2] கடைஇ
(5) நெடுமா ணேக்கிநின் னுள்ளியாம் வரவே.

எ - து வினைமுற்றி மீண்டுவந்த தலைமகன், 'சுரத்தருமை நோக்காது வந்தவாறு என்னை?' என வினவிய தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. எரி - நெருப்பை. என்றூழ் - வெயில். இடை - வழி. அரிய வாயினும் - கடத்தற்கு அருமையுடையவாயினும். அன்று, ஏ: அசைநிலைகள். அவவு - அவா; கலி. 14 : 19. கவவு - அகத்திடுதலை. மான் - குதிரை. கடைஇ - செலுத்தி. நெடுமான் நோக்கி : விளி. நின்னை உள்ளி யாம் வர நீளிடை அரியவாயினும் எளிய.

(மேற்.) மு. தலைவி தலைவனை வருத்தமுற்றீரே என்றதற்குத் தலைவன் கூறியது (தொல். கற்பு. 5, இளம். ந.) (பி - ம்.) [1] 'கவவநனி' [2] 'கடவி' (கo)

(ருசு) வரவுரைத்த பத்து முற்றிற்று.

## (ருஎ) முன்னிலைப் பத்து

361. [1]உயர்கரைக் கான்யாற் றவிர்மண லகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
(5) முலையினுங் கதவநின் றடமென் றோளே.

எ - து புணர்ந்துடன்போகிய தலைமகன் இடைச்சுரத்துக்கண் விளையாட்டு வகையாற் பூத்தொடுக்கின்ற தலைமகளைக்கண்டு புகழ அவள் அதற்கு நாணிக் கண்புதைத்தவழிச் சொல்லியது.

குறிப்பு. வேனிற் பாதிரி - வேனிற்காலத்தில் மலர்கின்ற பாதிரியினது; குறுந். 147 : 1. குவைஇ - குவித்து; குறிஞ்சி. 98. தொடலை தைஇய - மாலை செய்த; நற். 138 : 7. கதவ - சினத்தையுடையன. முலையினும் தோள் கதவ. கண்ணும் முலையும் தோளும் கதவ : நற். 39; கலி. 57 : 19.

(மேற்.) மு. இது புணர்தற் பொருளாயினும் கருப்பொருளால் பாலையாயிற்று (தொல். அகத். 24, இளம்.) இஃது உடன் போயவழித் தலைவன் புகழ்ச்சிக்கு நாணித் தலைவி கண் புதைத்துழித் தலைவன் கூறியது (தொல். அகத். 41, ந.) (பி - ம்.) [1] 'உயரறற் கான்யாற் றவிரறல்' (க)

362. [1]பதுக்கைத் தாய வொதுக்கருங் கவலைச்
சிறுகண் யானை யுறுபகை நினையா
தியாங்குவந் தனையோ பூந்தார் மார்ப
அருள்புரி நெஞ்ச முய்த்தர
(5) இருள்பொர நின்ற விரவி னானே.

எ - து சேணிடைப்பிரிந்த தலைமகன் இடைநிலத்துத் தங்காது இரவின்கண் வந்துழித் தோழி சொல்லியது.

குறிப்பு. பதுக்கை - கற்குவியல்; ஐந். எழு. 30, 38. ஒதுக்கருங்கவலை - போதற்கரிய கவர்த்த வழி; கலி. 150 : 16. யானையுறுபகை : ஐங். 314 : 3-4. யாங்கு - எப்படி. உய்த்தர - செலுத்த. இரவினானே யாங்கு வந்தனையோ.

(மேற்.) மு. சேணிடைப் பிரிந்து தலைவன் இரவின்கண் வந்துழித் தோழி கூறியது (தொல். கற்பு. 9, ந.) (பி - ம்.) [1] 'பதுக்கை தாய' (உ)

363. சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
[1]கொலைவி லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென [2]நினைதி நீயே
அணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே.

எ - து புணர்ந்துடன்செல்கின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகளை நலம்பாராட்டியது.

குறிப்பு. சிலைவில் - சிலைமரத்தாற் செய்த வில்; சிலை - ஒரு மரம்; கலி. 15 : 1, ந.; குறுந். 385 : 2; முழங்கும் வில் எனலுமாம். செந்துவராடை எயினர் : நற். 33 : 6. கொலைவில் எயினர் என்றது எயினர் என்னும் துணையது. எயினர் தங்கை : ஐங். 364 : 1; குறுந். 335 : 6. நினைதி - நினைக்கிறாய். அணங்குறு நெஞ்சு - துன்புற்ற நெஞ்சம். நீ சுணங்கென நினைதி, நெஞ்சு அணங்கென நினையும்.

(மேற்.) மு. இப்பாட்டுள் 'கொலைவிலெயினர் தங்கை' எனப் புணர்தற் பொருண்மை வந்ததாயினும் பாலைக்குரிய மக்கட் பெயர் கூறுதலின் பாலையாயிற்று (தொல். அகத். 24, இளம்.) உடன்போகின்றான் நலம் பாராட்டியது (தொல். அகத். 22, ந.) இப்பாலைப் பாட்டினுள் புணர்தலென்னும் உரிப்பொருள் வந்தது (நம்பி. ஒழிபு. 42.)
(பி - ம்.) [1] 'கொலைவல்' [2] 'நினைத்தி' (ங)

364. [1]முளமா வல்சி யெயினர் தங்கை
இளமா வெயிற்றிக்கு [2] மின்நிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வெள்வேல் விடலை விரையா தீமே.

எ - து உடன்போக்கு நயந்த தலைமகன் அதனைத் தோழிக்கு உணர்த்த அவள் முடிப்பாளாய்ச் சொல்லியது.

குறிப்பு. முளமாவல்சி = முளவு மாவல்சி - முள்ளம்பன்றியின் இறைச்சியாகிய உணவையுடைய; முளவுமா; மலைபடு. 176; அகநா. 182 : 8; புறநா. 325 : 6, 374 : 11; சீவக. 1233. எயினருடைய தங்கையாகிய எயிற்றி; இளமா வெயிற்றி; சிலப். வேட்டுவ. சொல்லினேன் - சொல்லி. விடலை: விளி. விரையாதீமே - விரையாதே; மே: அசை.

(மேற்.) மு. பிரியுங்காலத்துத் தலைமகட்கு உணர்த்துகின்றேன் எனத் தலைமகற்குத் தோழி உணர்த்திப் பிரிவை விலக்கிற்று (தொல். அகத். 42, இளம்.) கொண்டு உடன்போம் காலத்திற்குக் கொண்டு உடன்போக்கு ஒருப்படுத்துவலென்றது (தொல். அகத். 22, ந.)

(பி - ம்.) [1] 'முளவுமா' [2] 'நின்னிலையறியச்' (௪)

365. கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
[1]நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பும்
[2]நலமா ணெயிற்றி போலப் பலமிகு
நன்னல நயவர வுடையை
(5) என்னோற் றனையோ மாவின் றளிரே.

எ - து வரைவிடை வைத்துப் பிரிந்து மீள்கின்றான் இடைச்சுரத்துக் குழைத்த மாவின் தளிர்கண்டு சொல்லியது.

குறிப்பு. கணமா - கூட்டமான மான்களை. தொலைச்சி - கொன்று. தன்னையர் - தன்னுடன் பிறந்தோர். வல்சி - உணவின்கண். படுபுள் ஓப்பும் - வருகின்ற புள்ளை விரட்டும். எயிற்றி - தலைவி. நன்னலம் - நல்ல மேனியழகை. நயவர - விரும்ப. என் நோற்றனையோ - என்ன நோன்பு நோற்றனையோ. தளிரே : விளி.

(மேற்.) மு. இது வரைவிடை வைத்துப் போகின்றான் மாவினை நோக்கிக் கூறியது (தொல். அகத். 22, ந.)

(பி - ம்.) [1] 'நிணவூண்' [2] 'அலமர லெயிற்றி போல நலமிக' (ரு)

366. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉம்
[1]அறிய வாகுமோ மற்றே
(5) முறியிணர்க் கோங்கம் பயந்த [2]மாறே.

எ - து தலைமகளை நோக்கி, 'இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று?' என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

(ப - ரை.) இது முன்னாள் அவன் தந்த கோங்கம்பூவால் விளைந்ததெனப் பூத்தருபுணர்ச்சி கூறியவாறாயிற்று. இது கருப்பொருளாற் பாலை.

குறிப்பு. கண்ணை - கண்ணையுடையாய். கொன்னே கடவுதியாயின் - பயனற்று வினவுவாயாயின். என்னதூஉம் - சிறிதும். அறிய ஆகுமோ - அறிய இயலுமோ. முறி இணர்க்கோங்கம் - தளிரையும் பூங்கொத்தையு முடைய கோங்கமரம். கோங்கம் பயந்ததை அறியவாகுமோ.

கருப்பொருளாற் பாலை : ஐங். 370, உரை.

(மேற்.) மு. இஃது இவ்வேறுபாடு என் என்ற செவிலிக்குத் தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடு நின்றது ; இது பாலையிற் குறிஞ்சி ; இஃது உரிப்பொருளொடு உரிப்பொருள் மயங்கிற்று (தொல். அகத். 12, ந.) ; இ - வி. 394. (பி - ம்.) [1] 'அரிய' [2] 'மார்பே' (௬)

367. பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
விரியிணர் வேங்கையொடு [1]வேறுபட மிலைச்சி
விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்
தேரொடு குறுக வந்தோன்
(5) பேரொடு புணர்ந்தன் றன்னை [2]யிவ ளுயிரே.

எ - து நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

(ப - ரை.) 'கான்யாற்றுத் தேரொடு குறுகவந்தோன்' என்றது கான் யாற்று யாங்கள் அழுந்துழிக் குறுகவந்தோன் எ - று. எனவே புனல்தரு புணர்ச்சி கூறியவாறாயிற்று. 'பேரொடு புணர்ந்தன்று இவளுயிர்' என்றது அன்றுதொட்டு இன்னான் தந்த உயிரென அவன் பேரொடுபட்டது இவளுயிர் எ - று. இது காலத்தாற் பாலை.

குறிப்பு. பொரியரைக் கோங்கு - பொரிந்த அரையையுடைய கோங்கினது. பொன் மருள் பசுவீ - பொன்னையொத்த பசுமையான மலர்களை ; மருள் : உவம உருபு. இணர் - பூங்கொத்து. வேங்கையொடு - வேங்கை மலரொடு. வேறுபட - பலதிறப்பட. மிலைச்சி - சூடி. வேனிற்காலத்துக் கான்யாற்றின் கண்ணே. அன்னை : விளி. இவளுயிர் வந்தோன் பேரொடு புணர்ந்தன்று. (பி - ம்.) [1] 'வேறுபட்டு' [2] 'யிவள் கவினே' (௭)

368. எரிப்பூ விலவத் [1]தூழ்கழி பன்மலர்
பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்கும்
தண்பத வேனி லின்ப நுகர்ச்சி
எம்மொடு கொண்மோ பெருமநின்
(5) அம்மெ லோதி யழிவில [2]ளெனினே.

எ - து 'வேனிற்காலத்து நும்மொடு விளையாட்டுநுகர வருவல்' என்று பருவம் குறித்துப் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி கூறியது.

(ப - ரை.) 'அம்மெலோதி அழிவிலளெனின் இன்பநுகர்ச்சி எம்மொடு கொண்மோ' என்றது, நீ வருந்துணையும் இவள் ஆற்றியுள்ளாயின், எம் மொடு நுகர்ச்சி கொள்வீராமினென மறுத்தவாறு.

குறிப்பு. எரிப்பூ இலவம் - நெருப்புப் போன்ற பூவையுடைய இலவ மரம்; கலி. 33 : 10; அகநா. 245 : 14-5. ஊழ்கழி பன்மலர் - மலர்ந்து காம்பினின்றும் நீங்கின பல பூ. புன்கின்மலருக்குப் பொரி உவமை; ஐங். 347:3, குறிப்பு. புகர்நிழல் வரிக்கும் - புள்ளியான நிழலைக் கோலஞ்செய்யும். கொண்மோ - கொள்வாயாக. அம் மெல்லோதி - அழகிய மென்மையான கூந்தலையுடைய தலைவி. அழிவிலளெனின் நுகர்ச்சி கொண்மோ.

(பி - ம்.) [1] 'தூழ்கிழி' [3] 'ளெனவே' (அ)

369. வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்
முளைநிரை முறுவ லொருத்தியொடு [1]நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை [2]யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.

எ - து பரத்தையொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கிவந்த தலைமகன் தலைமகள் வினயவழி, 'யாரையும் அறியேன்' என்றானாக அவள் கூறியது.

(ப - ரை.) இது பாலைக்குரித்தாகிய வேனிற்கண் நிகழும் குரவும் குயிலும் கூறுதலாற் பாலையாயிற்று.

குறிப்பு. ததைந்த-நெருங்கிய. முளைநிரை முறுவல் - முளையையொத்த நிரையினையுடைய புன்சிரிப்பு; கலி. 15 : 25. நெருநல் - நேற்று. குரவ நீள்சினை - குரவமரத்தினது நீண்ட கிளையின்கண். கௌவையின் - ஒலியினும். அலர் குயிலினது கௌவையினும் பெரிது.

ஊடல் மருத உரிப்பொருளாதலின் பாலையில் சேர்த்ததற்குக் காரணம் கூறினார்.

(மேற்.) மு. இஃது ஊடற் பொருண்மைத்தேனும் வேனிற்காலத்து நிகழும் குயிற் குரலை உவமித்தலிற் பாலைத்திணையாயிற்று (தொல். அகத். 52, இளம்.) இது பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது (தொல். அகத். 12, ந.); நம்பி. ஒழிபு. 42. (பி - ம்.) [1] 'நெருநை' [2] 'யறையும்' (கூ)

370. வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை
இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப
[1]நீநயந் துறையப் பட்டோள்
[2]யாவ ளோவெம் மறையா தீமே.

எ - து பரத்தையொருத்திக்குப் பூவணிந்தானென்பது கேட்ட தலைமகள், 'அஃதில்லை' என்று மறைக்கும் தலைமகற்குக் கூறியது.

(ப - ரை.) இது பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறினமையால் பாலை ஆயிற்று.

குறிப்பு. வண்சினை - வளவிய கிளை. படலை - மாலையை. இருஞ்சிறை - பெரிய சிறகு. நீ என்றது தலைவனை. நயந்து - விரும்பி. உறைதல் - தங்குதல். எம் மறையாதீமே - எங்களுக்கு மறையாதே.

(மேற்.) மு. இதில் பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது (தொல். அகத். 12, ந.); இ. வி. 394. (பி - ம்.) [1] 'நீநயக் துலையப்' [2] 'யாரளோ' (கo)

(நஎ) முன்னிலைப்பத்து முற்றிற்று.

## (நஅ) மகட்போக்கியவழித் [1]தாயிரங்கு பத்து.

371. மள்ளர் [2]கொட்டின் மஞ்ஞை யாலும்
உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாகுக தில்ல
அறநெறி [3]யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய [4]சுரனே.

குறிப்பு. ஆழ்வார்திருநகரி ஸ்ரீ தேவர்பிரான் கவிராயரவர்கள் வீட்டுக் கையெழுத்துப் பிரதியில் இந்தச்செய்யுளும் அடுத்த செய்யுளும் காணப்படவில்லை; இவைகள் இருத்தற்குரிய இடத்தில் "வயங்குகதிர் ஞாயிறு திருகலி னீரறுபு, கயந்துக ளாகிய வியந்தபு கொள்கையொ, டின்னு வாயினு மினிய வாகுக, காதல னயந்துபா ராட்டவென், மாதர் மடப்பிடி போகிய சுரனே" என்னும் செய்யுளொன்றே எழுதப்பட்டிருந்தது.

மள்ளர் - வீரர். கொட்டின் - பறையை முழக்கினால். மஞ்ஞை - மயில். தலைஇ - பெய்து. அறநெறி - தருமமான வழி. தெளிந்த - ஆய்ந்தறிந்த. சுரன் மழைதலைஇ இனியவாருக.

(மேற்.) மு. 'இதனுள் அறநெறி இதுவெனத்தெளிந்த என்...மகளென்று தாய் கூறவே உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்துகூறி அங்ஙனம் கூட்டிய நல்வினையைத் தன் நெஞ்சிற்கு விளக்கிப் புலம்பியவாறு காண்க' (தொல். அகத். 36, ந.) நற்றாய் சுரம் தணிவித்தல் (நம்பி. வரைவு. 16); தமிழ்நெறி விளக்கம், 23.

(பி - ம்.) [1] 'தாயிரங்குப் பத்து', 'தாயிரங்கிய பத்து' [2] 'கொட்டு மஞ்ஞை' [3] 'இனிதென' [4] 'கானே' (க)

372. என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொ
[1]டழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே.

குறிப்பு. என்னும் - என்னையும். உள்ளினள் கொல்லோ - நினைத்தாளோ. நெஞ்சு உண - தலைவி நெஞ்சு ஏற்க. வஞ்சினம் - சூள். அழுங்கல்

மூதூர் - இரக்கத்தையுடைய பழமையான ஊரில்; கலி. 23 : 5. இறந்த - கடந்த. என்மகள் உள்ளினள் கொல்லோ.

(மேற்.) இது நற்றாய் தலைமகள் கொடுமை நினைந்து கூறியது (தொல். அகத். 39, இளம்.); இது 'என்னை நினைப்பாளோ' என்றது (தொல். அகத். 36, ந.) (பி - ம்.) [1] 'டழுங்கின்' (உ)

373. நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக
புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுர மென்மக ளுய்த்த
(5) அம்பமை வல்வில் விடலை தாயே.

எ - து தலைமகளைத் தலைமகன் கொண்டு கழிந்த கொடுமை நினைந்து நற்றாய் சொல்லியது.

(ப - ரை.) இவட்காக யான் பட்ட துயரம் அவன்தாயும் படவேண்டும் எ - று.

குறிப்பு. நினைத்தொறும் - நினைக்குந்தோறும். கலிழும் இடும்பை - அழுகின்ற துன்பத்தை. புலிக்கோள் பிழைத்த - புலியால் கொள்ளப்படுவதிலிருந்து தப்பின. கவைக்கோடு - கவர்த்த கொம்பு. பிணை - பெட்டை. விளிக்கும் - கத்துகின்ற. வெஞ்சுரத்தில் என் மகளை உய்த்த. வல்வில் - ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பை எய்யும் வில்; ஐங். 390 : 3; குறுந். 100 : 5. தாய் இடும்பை எய்துக.

(மேற்.) மு. இஃது அச்சம் கூறிற்று (தொல். அகத். 36, ந.) (ங)

374. பல்லூழ் நினைப்பினு நல்லென் றூழ
மீளி முன்பிற் காளை காப்ப
முடியகம் புகாஅக் கூந்தலள்
கடுவனு மறியாக் காடிறந் தோளே.

எ - து தலைமகள் உடன்போயவழி அவள் இளமைநினைந்து இரங்கித் தாய் கூறியது.

குறிப்பு. பல்லூழ் - பல முறை. நல் என்ற ஊழ - நல்லன என்ற முறைகளையுடையன தலைவி செய்கைகள். மீளி முன்பின் காளை : கூற்றுவனையொத்த வலியையுடைய தலைவன்; மீளி - கூற்றுவன்; "மீளி மறவனும் போன்ம்" (கலி. 104 : 50, ந.) முடியகம் புகாக் கூந்தலள் : முடித்தற்குரிய நீட்சியற்ற கூந்தலையுடைய பேதைப் பருவத்தாள் என்றபடி; "முடியாத கூந்தன் முடியாள்" (திருவாரூருலா.) கடுவனுமறியாக் காடு : முருகு. 42; நற். 194 : 7; அகநா. 92 : 8-9, 368 : 8-9. கூந்தலள் காடிறந் தோள்.

(மேற்.) மு. நற்றாய் தன்மகள் இளமைத்தன்மைக்கு உளம் மெலிந்திரங்கல் (நம்பி. வரைவு. 16.) (ச)

375. [1]இதுவென் பாவை பாவை யிதுவென்
அலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதற்
பைங்கிளி யெடுத்த பைங்கிளி யென்றிவை
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
(5) நீங்கின ளோவென் பூங்க ணோளே.

எ - து சேரியும் அயலும் தேடிக் காணாது வந்தாரைக் கண்டு தலைமகள் தாய் சொல்லியது.

குறிப்பு. அலமரும் நோக்கி - சுழலுகின்ற பார்வையையுடையவள். பைங்கிளி - பசுமையான கிளிபோன்ற பெண் ; என்றது தலைவியை. தலைவி வைத்து விளையாடிய பாவை, கிளி முதலியவற்றைக் கண்டு இரங்கல் ; ஐந். ஐம். 33. காண்டொறும் - பார்க்குந்தொறும். பூங்கணோள் - பூப்போன்ற கண்ணையுடையவள். பூங்கணோள் நீங்கினளோ.

(மேற்.) அடி, 5. ஓகார இடைச்சொல் இரக்கக் குறிப்பாய் வந்தது (தொல். இடை. 47, ந.) மு. தலைமகள் உடன்போகியவழி செவிலி சேரியோரை வினயது (தொல். அகத். 41, இளம்.)இது தேடிக்காணாது வந்தாரைக் கண்டு புலம்பியது (தொல். அகத். 36, ந.) நற்றாய் பாங்கியர் தம்மொடு புலம்பல் (நம்பி. வரைவு. 15.)

(பி - ம்.) [1] 'இதுவென் பாவைக் கினியநன் பாவை, இதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி, இதுவென் பூவைக் கினியசொற் பூவையென், றலம்வரு நோக்கி னலம்வருஞ் சுடர்நுதல், காண்டொறுங் காண்டொறுங் கலங்கி, நீங்கின ளோவென் பூங்க ணோளே' (௫)

376. நாடொறுங் கலிழு மென்னினு மிடைநின்று
காடுபடு தீயிற் [1]கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
(5) [2]போக்கிய புணர்த்த வறனில் பாலே.

எ - து தலைமகள் போயவழி நற்றாய் விதியைவெகுண்டு சொல்லியது.

குறிப்பு. கலிழும் - கலங்கும். தீயின் - தீயைப்போல. கனலியர் - கொதித்திடுக. பூப்புரை - பூவையொத்த. கண்ணையுடைய மடவரல் என்றது தலைவியை. போக்கிய புணர்த்த - உடன்போக்கு நேரப் பொருத்திய. அறன் இல் பால் - தருமமில்லாத பழவினை. பால் கனலியர்.

(மேற்.) மு. இது தீவினையை வெகுண்டு புலம்பியது (தொல். அகத். 36, ந.)

(பி - ம்.) [1] 'கனலிய' [2] 'போகிய' (௬)

377. நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை
இயம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தம்
சென்றனண் மன்றவென் மகளே
[1]பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே,

**எ - து** தலைமகள் [2]உடன்போயவழி அவள் பந்துமுதலாகிய கண்டு நற்றாய் கலங்கிச் சொல்லியது.

**குறிப்பு.** நீர்நசைக்கு - தண்ணீர் வேட்கையைப் போக்கிக் கொள்ளுதற்கு. ஊக்கிய உயவல் யானை - முயன்ற வருத்தத்தையுடைய யானை யானது. அடி, 1. **நற்.** 171 : 1. இயம்புணர் தூம்பின் - வாத்தியங்களுள்ளே புணர்ந்த நெடுவங்கியம் போல. யானை நெட்டுயிர்ப்புக் கொள்ளுதற்கு நெடு வங்கியம் உவமை; **நற்.** 62 : 1-2; "ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை, தொகுசொற் கோடியர் தூம்பி னுயிர்க்கும்" (**அகநா.** 111 : 8-9.) இவ்வங்கியத்துக்கே யானைத் துதிக்கையும் உவமையாகக் கூறப்படும்; **மலைபடு.** 6; **புறநா.** 152 : 15. அத்தம் - வழியில். பாவை பந்து கழங்கு : **பெருங்.** 3 : 5 : 74. எம்மகள் ஒழித்துச் சென்றனள்.

**(மேற்.)** மு. இது யாம் இவற்றைக் கண்டு வருந்த இவற்றை எமக்கு ஒழித்துத் தான் நீரிலா ஆரிடை போயினளென்றது (**தொல்.** அகத். 36, **ந.**)

**(பி - ம்.)** [1] 'பந்து பாவையும்' [2] 'உடன்போகியவழி' (எ)

378. செல்லிய [1]முயலிப் பாஅய சிறகர்
வாவ [2]லுகக்கு மாலையாம் புலம்பப்
போகிய வவட்கோ நோவேன் றேமொழித்
துணையிலள் கலிழு நெஞ்சின்
(5) இணையே ருண்க ணிவட்குநோ வதுவே.

**எ - து** தலைமகள் உடன்போயவழி அவள்தோழியாற்றாமைகண்டு நற்றாய் சொல்லியது.

**குறிப்பு.** செல்லிய முயலி - செல்லுதற்கு முயன்று; முயலி என்பது 'இயலி' (**பெரும்பாண்.** 331) என்பதுபோல. பாய - பரவிய. சிறகர் - சிறகு. வாவல் உகக்கும் மாலை - வௌவால் உயரப் பறந்து செல்லும் மாலையின்கண்; **ஐங்.** 339 : 3, குறிப்பு. அவட்கு என்றது தலைவியைச் சுட்டியது. நோவேன் - வருந்தேன். கலிழும் - கலங்கும். துணையிலளாய்க் கலிழுகின்ற. இவட்கு - தலைவியினுடைய தோழிக்கு.

**(மேற்.)** மு. தோழியது ஆற்றாமை கண்டுழி நற்றாய் கூறியது (**தொல்.** அகத். 36, **ந.**) தோழி அழுங்கல் கண்டு நற்றாய் புலம்பல் (**நம்பி.** வரைவு. 15.) **(பி - ம்.)** [1] 'முயலின்' [2] 'லுவக்கு' (அ)

379. தன்னம ராயமொடு நன்மண நுகர்ச்சியின்
இனிதாங் கொல்லோ தனக்கே பனிவரை
இனக்களிறு வழங்குஞ் சோலை
வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே.

**எ - து** புணர்ந்துடன்போகியவழித் தோழி அறத்தொடுநிற்பக்கேட்ட நற்றாய், 'அதனை முன்னே அறிவித்து நாம் மணம்புணர்த்த ஒழுகாது போயினள்' என நொந்து சொல்லியது.

குறிப்பு. அமர் ஆயமொடு - பொருந்திய சுற்றத்தாரோடு. மண நுகர்ச்சியின் - மணத்தை அனுபவித்தலினும். வயக்குறு - விளங்குதலுற்ற. வேலவனைப் புணர்ந்து செலவு இனிதாங்கொல்லோ.

(மேற்.) மு. நற்ருய் பாங்கி தன்னெடு புலம்பல் (நம்பி. வரைவு. 15.) (கூ)

380. அத்த நீளிடை யவனெடு போகிய
முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவரல்
[1]தாய ரென்னும் பெயரே வல்லா
றெடுத்தேன் மன்ற யானே
(5) கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே.

எ - து தலைமகள் உடன்போகியவழித் தெருட்டுவார்க்குச் செவிலித்தாய் சொல்லியது.

குறிப்பு. அத்தம் - வழி. முத்து ஏர் - முத்தையொத்த. வல்லாறு - இயன்றவரை யான் தாயர் என்னும் பெயரே எடுத்தேன்.

(மேற்.) மு. இது செவிலி தெருட்டுவார்க்குக் கூறியது (தொல். அகத். 42, ந.); நம்பி. வரைவு. 14. (பி - ம்.) [1] 'தாய ளென்னும் பெயரே னல்லா' (க0)

(ந.அ) மகட்போக்கியவழித் தாயிரங்குபத்து முற்றிற்று.

## (ந.கூ) உடன்போக்கின்கண் இடைச்சுரத் துரைத்த பத்து

381. பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கான் மராஅத்த வரிநிழ லிருந்தோர்
யார்கொ லளியர் தாமே வார்சிறைக்
[1]குறுங்கான் மகன்றி லன்ன
(5) உடன்புணர் கொள்கைக் காத லோரே.

எ - து உடன்போக்கின்கண் இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது.

குறிப்பு. பைங்காய் நெல்லி - பசுமையான நெல்லிக்காயை. பலவுடன் - பலாக்காயுடன். மிசைந்து - உண்டு. மராத்த - வெண்கடம்ப மரத்தின் அடியிலுள்ள. அளியர் - அளிக்கத் தக்கவர். வார்சிறை - நீண்ட சிறகு. மகன்றில் - ஒருவகைப் பறவை; குறுந். 57 : 2; சீவக. 1250; பெண் அன்றில் என்றும் கூறுவர். மகன்றிற் புணர்ச்சி: "நீருறை மகன்றிற் புணர்ச்சி போல, பிரிவரி தாகிய " (குறுந். 57 : 2-3); பரி. 8 : 44. நிழலிருந்தோர் காதலோர் யார் கொல்.

(பி - ம்.) [1] 'குறுங்கா னகன்றி' (க)

382. புள்ளொலிக் கமர்த்த கண்ணள் வெள்வேல்
திருந்துகழற் காளையொ டருஞ்சுரங் கழிவோள்
எல்லிடை யசைந்த கல்லென் சீறூர்ப்
புனையிழை மகளிர்ப் பயந்த
(5) மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே.

**எ - து** தலைமகள் இடைச்சுரத்தினது ஊரின்கண் எல்லிடைத் தங்கிய வழி அவ்வூர்ப்பெண்டிர்பார்த்து இரங்குதல் கண்டார் சொல்லியது.

**குறிப்பு.** புள்ளொலிக்கு அமர்த்த கண்ணள் : பறவைகளின் ஓசைக்கு வெருவும் இயல்பினள் என்றபடி. எல்லிடை - பகலில். அசைந்த - தங்கிய. கல்லென்சீறூர் - கல்லென்ற ஒலியையுடைய சிறிய ஊரிலுள்ள. பயந்த - பெற்ற. மார் : அசைச்சொல். நோவு பெரிது. (உ)

383. கோட்சுரும் பரற்று நாட்சுரத் தமன்ற
நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற
மள்ள னுள்ள மகிழ்கூர்ந் தன்றே
(5) பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கும்
அஞ்சாய் கூந்த லாய்வது [1]கண்டே.

**எ - து** உடன்போகிய தலைமகள் தலைமகன் வளைத்த கொம்பிற் பூக் கொண்டு தனக்கும் பாவைக்கும் வகுக்கக் கண்டார் கூறியது.

**குறிப்பு.** கோட்சுரும்பு - தேனைக்கொள்ளும் சுரும்பு. அரற்றும் - ஒலிக்கின்ற. அமன்ற - நெருங்கிய. மராத்துக் குறுஞ்சினை - வெண்கடம்ப மரத்தினது குறுகிய கிளையை. வலஞ்சுரி வாலிணர் - வலமாகச் சுரித்த ஒளி பொருந்திய பூங்கொத்துக்களை. மராத்தின் வலஞ்சுரிவாலிணர் ; ஐங். 348 : 2, குறிப்பு. மள்ளன் - தலைவனது. பஞ்சாய்ப்பாவை : ஐங். 155 : 5, குறிப்பு. பாவையும் தலைவியும் : குறுந். 278 : 3. அஞ்சு ஆய் கூந்தல் - ஆய்ந்த ஐம்பாலையுடையாள். ஆய்வது - வகுப்பது. கூந்தல் ஆய்வது கண்டு மள்ளன் உள்ளம் மகிழ்கூர்ந்தன்று. (பி - ம்.) [1] 'கொண்டே' (ங)

384. சேட்புல முன்னிய [1]வசைநடை யந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்
[2]யாய்நயந் தெடுத்த வாய்நலங் [3]கவின
ஆரிடை யிறந்தன ளென்மின்
(5) நேரிறை முன்கையென் னுயத் தோர்க்கே.

**எ - து** உடன்போகிய தலைமகள் ஆண்டு எதிர்வரும் அந்தணர்க்குச் சொல்லியது.

**குறிப்பு.** சேட்புலம் - நெடுந்தூரத்திலுள்ள இடத்தை. முன்னிய - கருதிய. அசைநடை அந்தணிர் - அசைந்த நடையையுடைய அந்தணரே ; விளி. நும்மை ஒன்று இரந்தனென். யாய் நயந்தெடுத்த ஆய் நலம் -

அன்னை விரும்பி எடுத்த எமது அழகிய பெண்மை நலம்; நற். 23 : 4; குறுந். 223 : 6; அகநா. 146 : 13, 195 : 9-10. கவின - கவின்பெற. ஆரிடை - கடத்தற்கரிய வழியை. இறந்தனள் என்மின் - கடந்தனள் என்று கூறுங்கள். நேரிறை முன்கை என்ஆயத்தோர்க்கு - நேரிய திரண்ட முன்கையையுடைய என் ஆயத்தவர்க்கு. அந்தணிர், என் ஆயத்தோர்க்கு 'இறந்தனள்' என்மின்.

(மேற்). மு. தலைவி இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டது (தொல். அகத். 45, இளம். 42, ந.); நம்பி. வரைவு. 28.

(பி - ம்.) [1]'விரைநடை' [2]'தாய்நயந்' [3]'கவின்பெற' (ச)

385\. கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்
கோள்வல் [1]வேங்கை மலைபிறக் கொழிய
[2]வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்கள்
(5) நற்றோ ணயந்துபா ராட்டி
எற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே.

எ - து வரைவு மறுத்துழி உடன்போய தலைமகள் இடைச்சுரத்துக் கண்டாரை, 'யான் போகின்றபடியை யாய்க்கு நீர் கூறவேண்டும்' எனச் சொல்லியது.

குறிப்பு. கடுங்கட்காளை - அஞ்சாமை பொருந்திய தலைவனோடு. கோள்வல் வேங்கை மலை - கொள்ளுதலில் வல்ல வேங்கைப் புலிகளையுடைய மலை. பிறக்கு - பின். ஆறுசெல் மாக்கள் - வழியிற் செல்கின்ற மக்களே; விளி. நல் தோளை நயந்து பாராட்டி. எற்கெடுத்து - வரைவு மறுத்து என்னைக் கெடுத்து. அறனில் யாய்க்கு - மறம் மிக்க தாய்க்கு; குறுந். 244 : 6. மாக்கள், யாய்க்குச் சுரம் இறந்தனளெனக் கூறுமின்.

(மேற்.) மு. இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டது (தொல். அகத். 45, இளம்.); தலைவி 'யான் தேரேறி வருத்தமின்றிப் போகின்றமை யாய்க்கு உரைமின்' என்றது; உடன்போக்கில் தேர் ஏறிப் போதலுண்டு (தொல். அகத். 42, பொருள். 18, ந.); நம்பி. வரைவு. 28.

(பி - ம்.) [1]'வேங்கைய' [2]'வேரன் மலருஞ் சுரமிறந் தனளென' (ரு)

386\. புன்கண் யானையொடு புலிவழங் கத்தம்
நயந்த காதலற் புணர்ந்துசென் றனளே
நெடுஞ்சுவர் நல்லின் மருண்ட
இடும்பை யுறுவிநின் கடுஞ்சூன் மகளே.

எ - து புணர்ந்துடன்போகிய தலைமகளை இடைச்சுரத்துக் கண்டார் அவள்தாய்க்குச் சென்று கூறியது.

குறிப்பு. புன்கண் யானை - துன்பத்தைச் செய்யும் யானை. அத்தம் - அருநெறியை. காதலனைப் புணர்ந்து சென்றனள். இடும்பை உறுவி -

துன்பத்தை அடைந்தவளே; என்றது நற்றாயை நோக்கிய விளி. கடுஞ்சூல் - முதற்சூல்; **ஐங்.** 309 : 3, குறிப்பு. உறுவி, நின்மகள் சென்றனள்.

(**மேற்.**) மு. நற்றாய்க்கு அந்தணர் மொழிதல்; **நம்பி.** வரைவு. 28. (சு)

387. அறம்புரி யருமறை நவின்ற நாவின்
திறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டனெ மம்ம சுரத்திடை [1]யவளை
(5) இன்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் [2] தோளே.

**எ - து** பின்சென்ற செவிலியால் வினவப்பட்ட அந்தணர் அவட்குச் சொல்லியது.

**குறிப்பு.** மறை - வேதம். திறம் - விதம். கொள்கை - விரதம். அந்தணிர் - அந்தணர்களே; விளி. தொழுவல் - தொழுகிறேன். ஒண்டொடி - தலைவியைப் பற்றி. பெண்டே: செவிலியை நோக்கிய விளி. கண்டனெம் - பார்த்தோம். துணை - தலைவன். குன்று - சிறுமலைகள். பிறங்கல் - செறிதல். இறந்தோளைக் கண்டனெம்.

(**மேற்.**) மு. செவிலி வினாஅயவழிக் கண்டோர் கூற்று நிகழும் (**தொல்.** அகத். 43, **இளம்.** 40, **ந.**) (**பி - ம்.**) [1] 'யவளே' [2] 'தோரே' (எ)

388. [1]நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் [2]யாத்து வரிநிழ [3]லிரீஇச்
சிறுவரை யிறப்பிற் [4]காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
(5) [5]வென்வேல் விடலை முன்னிய சுரனே.

**எ - து** தேடிச்சென்ற செவிலிக்கு இடைச்சுரத்துக்கண்டார் அவளைக் கண்டதிறம் கூறியது.

**குறிப்பு.** கனலி - சூரியனது. உருப்பு - வெம்மை. கருங்கால் யாத்து- கருமையான அடிமரத்தையுடைய யாவினது; யா - ஒருவகை மரம்; **குறுந்.** 37 : 3. இரீஇ - இருந்து. இறப்பின் - கடந்தால். மடந்தை - தலைவி. வென் - வெற்றி. சுரனைக் காண்குவை.

(**மேற்.**) மு. இது செவிலித்தாயது நிலைமையைக் கண்டு கண்டோர் கூறி விடுத்தது (**தொல்.** அகத். 43, **இளம்.**) கண்டோர் 'தெய்வமென யாங்கள் போந்தேம், நுமக்கெய்தச் சேரலாம்' என்று செவிலியைக் கூறி விடுத்தது (**தொல்.** அகத். 40, **ந.**)

(**பி - ம்.**) [1] 'ஒருப்பவிர்' [2] 'யாத்த' [3] 'லசைஇ' [4] 'காண்டி செறி தளிர்ப்' [5] 'வெள்வே லண்ணல்' (அ)

389. செய்வினைப் பொலிந்த செறிகழ னோன்றாள்
மையணற் காளையொடு பைய வியலிப்
பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றி ரைய
ஒன்றின வோவவ ளஞ்சிலம் படியே.

எ - து பின்சென்ற செவிலித்தாய் வினவப்பட்டோர், 'கண்டோம்' என்புழிச் சொல்லியது.

குறிப்பு. செய்வினை - வேலைப்பாடுகள். நோன் தாள் - வலிய பாதம். மையணற்காளை - மயிராற் கறுத்த தாடியையுடைய தலைவன்; பு. வெ. 12; புறநா. 83 : 1. பையஇயலி - மெல்ல நடந்து. என்றிர் - என்றீர்கள். ஐய : விளி. மடந்தை காளையொடு பைய இயலிச் சென்றனள் என்றிர், அவள் அடி ஒன்றினவோ.

(மேற்.) மு. செவிலி சுரத்திடை வினாஅயது (தொல். அகத். 40, இளம்.) (௯)

390. [1]நல்லோ ராங்கட் பரந்துகை தொழுது
பல்லூழ் [2]மறுகி வினவு வோயே
திண்டோள் வல்விற் காளையொடு
கண்டனெ மன்ற சுரத்திடை யாமே.

எ - து பின்சென்ற செவிலித்தாய் பலரையும் வினவக் கண்டோர் தாம் கண்டவாறு அவட்குக் கூறியது.

குறிப்பு. நல்லோராங்கண் - நல்லோரிடத்தே. பல்லூழ் - பலமுறை. மறுகி - அறிவு சுழன்று. வினவுவோயே : செவிலியை நோக்கிய விளி. வல்வில் : ஐங். 373 : 5, குறிப்பு. கண்டனெம் - பார்த்தோம். வினவுவோயே, யாம் சுரத்திடைக் காளையொடு கண்டனெம்.

(பி - ம்.) [1] 'நல்லோரங்கட் பரிந்து' [2] 'மறுகின்' (௰)

(௩௯) உடன்போக்கின்கண் இடைச்சுரத்
துரைத்தபத்து முற்றிற்று.

## (௪௰) மறுதரவுப் பத்து

391. மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொ
டஞ்சி லோதியை வரக்[1]கரைந் தீமே.

எ - து உடன்போகிய தலைமகள் மீடற்பொருட்டுத் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது.

குறிப்பு. மறுவில் - குற்றமில்லாத. தூவி - இறகு. காக்கை : விளி. பச்சூன் - செவ்வித்தசை ; புறநா. 258 : 4. பைங்கிணவல்சி - செவ்விய நிணமான உணவை. பொலம்புனைகலத்தில் - பொற்பாத்திரத்தில். அஞ்சிலோதி ; ஐங். 49 : 1, குறிப்பு. கரைந்தீமே - கரையுங்கள். காக்கை கரைதல் புதியோர் வரவைக் குறிக்கும் ; குறுந். 210 ; சிற். 235 ; பழ. 35. 391-400: மறுதரவுப் பத்து - மீளுதலைக் கூறும் பத்து.

பராய்க்கடன் உரைத்தல் - பரவித் தான் செய்யும் முறைமையைச் சொல்லுதல்.

(மேற்.) அடி, 1. சிறுகருங்காக்கையென்பது ஈரடை முதலோடாதல் (நன். 402, மயிலை. 403, சங்.) மு. நற்றாய் உடன்போய தலைமகள் பொருட்டாகக் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது (தொல். அகத். 39, இளம்.) இது நிமித்தத்தொடுபடுத்துப் புலம்பியது (தொல். அகத். 36, ந.) ; தமிழ் நெறி விளக்கம், 23 ; நிமித்தம் போற்றல் (நம்பி. வரைவு. 16.)

(பி - ம்.) [1] 'கரைந்திடுமே' (க)

392. வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற
ஆய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
[1]பரியல் வாழி தோழி [2]பரியின்
எல்லையி லிடும்பை தரூஉம்
நல்வரை நாடனொடு [3]வந்த மாறே.

எ - து உடன்போய் மீண்டுவந்த தலைமகள் வழிவரல்வருத்தம் கண்டு ஆற்றாளாகிய தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. வேயினது வனப்பை ; வேய் - மூங்கில். வெயில்தெற - வெயில் வருத்த. ஆய்கவின் - ஆய்ந்த பேரழகு. பரியல் - வருந்தாதே. வந்த மாறு - வந்ததனால். தோழி தோளையும் நுதலையும் நோக்கிப் பரியல், பரியின் வந்தமாறு இடும்பைதரும்.

(மேற்.) மு. இது மீண்டு வந்த தலைவி வழிவரல் வருத்தங்கண்டு வருந்திய தோழிக்குக் கூறியது (தொல். அகத். 42, ந.)

(பி - ம்.) [1] 'பிரியல்' [2] 'பிரியன்' [3] 'வந்த வாறே' (உ)

393. துறந்ததற் [1]கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கு [2]மளைக ணாட்டி
எவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மகளே
[3]வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.

எ - து உடன்போய்த் தலைமகள் மீண்டுவந்துழி அயலோர் அவள் தாய்க்குச் சொல்லியது.

குறிப்பு. தற்கொண்டு - தன்னைக்கொண்டு ; தன்னை என்றது மகளை. துயரடச் சாஅய் - துயர் வருத்த மெலிந்து. அறம் புலந்து பழிக்கும் - அறத்தைக் கோபித்துப் பழிக்கின்ற. அளைகணாட்டி - நீரளைந்த கண்களையுடையவளே ; என்றது நற்றாயை ; விளி. நற்றாய் அறத்தைப் பழித்தல் ; ஐங். 376.

எவ்வம் - துன்பம். ஏமமாக - பாதுகாப்பாக. விடலை முந்துற நின்மகள் வந்தனளோ.

(மேற்.) மு. இது பார்ப்பார் கூறியது (தொல். அகத். 47, இளம்.) இஃது அயலோர் கூற்று (தொல். அகத். 42, ந.); தமிழ் நெறி விளக்கம், 23.

(பி - ம்.) [1] 'கொண்டுங்' [2] 'முண்க' [3] 'வெஞ்சின வென்வேல்' (௩)

394. மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த
அன்பி லறனு [1] மருளிற்று மன்ற
வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதிப்
பெருமட மான்பிணை யலைத்த
சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே.

ஏ - து உடன்போய்த் தலைமகள் வந்துழித் தாய் சுற்றத்தார்க்குச் சொல்லியது.

குறிப்பு. துயரைச் செய்த அன்பில்லாத அறமும். மான்பிணையலைத்த : தலைவிக்கு அடை; அலைத்த - வருத்திய. குறுமகட் காட்டிய - தலைவியை யான் காட்டுதற்கு. வம்மே - வாருங்கள்.

(மேற்.) மு. இது தலைவி மீண்டுவந்துழித் தாய் சுற்றத்தார்க்குக் காட்டியது (தொல். அகத். 36, ந.) (பி - ம்.) [1] 'மருளின்று' (௪)

395. முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
இன்னா வருஞ்சுரந் தீர்ந்தன மென்மெல
ஏகுமதி வாழியோ குறுமகள் போதுகலந்து
கறங்கிசை யருவி வீழும்
பிறங்கிருஞ் சோலைநம் மலைகெழு நாட்டே.

ஏ - து உடன்போய் மீள்கின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. முளிவயிர்ப் பிறந்த - காய்ந்த மூங்கிலில் தோன்றிய. வளி - காற்றால். எரிச்சுடரை விடுகின்ற நெடுங்கொடி. விடர்முகை - வெடிப்பை யுடைய குகைகளில்; நற். 156 : 9; குறுந். 218 : 1; அகநா. 47 : 6; புறநா. 374 : 12. இன்னா - இனியவல்லாத. தீர்ந்தனம் - கடந்தோம். ஏகுமதி - செல்வாயாக. குறுமகள் : விளி. போது - மலர். கறங்கிசையருவி - ஒலிக்கின்ற இசையையுடைய அருவி. பிறங்கிருஞ்சோலை - செறிந்த பெரிய சோலை. நாட்டு ஏகுமதி.

(மேற்.) மு. தலைவன் தம்மூர் சார்ந்தமை சாற்றல் (நம்பி. வரைவு. 21.) (௫)

396. [1]புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர் கொய்துநின்
கதுப்பய லணியு மளவை பைபயச்
சுரத்திடை யயர்ச்சியை யாறுக மடந்தை
கல்கெழு சிறப்பி னம்மூர்
எல்விருந் தாகிப் புகுக நாமே.

இதுவுமது.

குறிப்பு. புலிப்பொறி வேங்கைப் பொன்இணர் - புலியின் மேலுள்ள புள்ளிகள் போன்ற வேங்கை மரத்தினது பொன்னிறமான பூங்கொத்து ; வேங்கைப் பூவிற்குப் புலிப்பொறி : குறுந். 47 : 1-2, அடிக். கதுப்பு - கூந்தல். அணியும் அளவை - அணியும் நேரம் வரை. சுரத்திடை அயர்ச்சியை - சுரத்தில் நடந்ததால் உண்டான வருத்தத்தை. ஆறுக - ஆற்றுவாயாக. மடந்தை : விளி. கல் - மலை. எல்விருந்து - பகல் விருந்தாகி. நாம் புகுக. (பி - ம்.) [1] 'புலிப்பொலி' (சு)

397. கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் [1]பன்றி கொள்ளாது கழியும்
சுரநனி வாரா நின்றன ளென்பது
[2]முன்னுற விரைந்தநீ ருரைமின்
இன்னகை முறுவலென் னாயத் தோர்க்கே.

எ - து உடன்போய் மீள்கின்ற தலைமகள் தன்னூர்க்குச் செல்கின்றாரைக் கண்டு கூறியது.

குறிப்பு. கவிழ்மயிர் எருத்து - கவிழ்ந்த மயிர் பொருந்திய கழுத்தையுடைய. குருளைப் பன்றி - பன்றிக்குட்டியை. கொள்ளாது - உணவுக்காகப் பற்றாமல். 'செந்நாயேற்றை.........கழியும்' என்றதால் சுரத்தினது வெம்மையின் மிகுதி கூறியவாறாயிற்று. இன்னகை ஆயத்தார் : குறுந். 351 : 7. நீர் என் ஆயத்தோர்க்கு வாராநின்றனள் என்பது உரைமின்.

(மேற்.) மு. மீண்டு வருவாள் ஆயத்தார்க்குக் கூறிவிட்டது (தொல். அகத். 45, இளம். 42, ந.) ; இறை. 23 ; நம்பி. வரைவு. 21.

(பி - ம்.) [1] 'பன்றிக்' [2] 'முன்னுறச் செல்வீ' (எ)

398. புள்ளு மறியாப் பல்பழம் [1]பழுனி
மடமா னறியாத் தடநீர் நிலைஇச்
சுரநனி யினிய வாகுக வென்று
நினைத்தொறுங் கலிழு மென்னினும்
மிகப்பெரிது [2]புலம்பின்று தோழிநம் மூரே.

எ - து தலைமகள் மீண்டுவந்துழி அவட்குத் தோழி கூறியது.

குறிப்பு. புள்ளும் - பறவைகளும் ; உம்மை : உயர்வு சிறப்பு. பழுனி - பழுத்து. நிலைஇ - நிலைத்து. நினைத்தொறும் - நினைக்குந்தோறும். கலிழும் - கலங்குகின்ற. புலம்பின்று - புலம்பியது. தோழி, நம்மூர் என்னினும் மிகப் புலம்பின்று.

(மேற்.) மு. தலைவி மீண்டு வந்துழித் தோழி ஊரது நிலைமை கூறுதல் (தொல். அகத். 39, ந.)

(பி - ம்.) [1] 'பழூஉ' [2] 'கலங்கின்று' (அ)

399. நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வென்வேல்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே.

**எ - து** உடன்கொண்டுபோன தலைமகன் மீண்டு தலைவியைத் தன் இல்லத்துக்கொண்டுபுக்குழி அவன்தாய் அவட்குச் சிலம்புகழிநோன்பு செய்கின்றாளெனக்கேட்ட நற்றாய் ஆண்டுநின்றும் வந்தார்க்குச் சொல்லியது.

**குறிப்பு.** சிலம்பு கழீஇ - சிலம்பைக் கழித்து; மணம்புரிவதற்கு முன் மணமகளது காலில் பெற்றோர்கள் அணிந்திருந்த சிலம்பை நீக்குதற்கு ஒரு சடங்கு செய்யப்படும்; அது சிலம்புகழி நோன்பு எனப்படும்; **நற்.** 279 : 10-11. அயரினும் - சடங்கு செய்தபோதிலும். எம்மனையின் கண்ணே வதுவை மணம் கழிக. சொல்லின் எவனோ - சொன்னால் வரும் குற்றம் என்ன? **குறுந்.** 141 : 3. வென் - வெற்றி. மையற - குற்றமில்லாதபடி. பொய்வல்காளை - பொய் கூறுதலில் வல்ல தலைவன்; **குறுந்.** 25 : 2. தாய்க்கு 'எம்மனை வதுவை மணம் கழிக' எனச் சொல்லின் எவனோ? சொல்லி என்மனையில் வதுவை மணம் செய்வித்தீர்களில்லையே என வருந்தியபடி.

**(மேற்.)** மு. தலைவன் மீண்டு தலைவியைத் தன் மனைக்கண் கொண்டு வந்துழி அவன் தாய் சிலம்புகழிநோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டுநின்றும் வந்தார்க்குக் கூறியது (**தொல்.** அகத். 36, **ந.**) தலைமகன் தன்னகத்தே வதுவைக் கலியாணம் எடுத்துக் கொண்டான் என்பது கேட்ட நற்றாய் 'ஒழிந்த கலியாணம் செய்யினும், நம்மகத்தே வதுவைக் கலியாணம் செய்ய நேருங்கொல்லோ காளையைப் பயந்தாள்' என்னும் (**இறை.** 23, உரை.) நற்றாய் மணனயர் வேட்கையிற் செவிலியை வினைதல் (**நம்பி.** வரைவு. 24.) (௯)

400. மள்ள ரன்ன மரவந் தழீஇ
மகளி ரன்ன வாடுகொடி நுடங்கும்
அரும்பதங் கொண்ட பெரும்பத வேனிற்
காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்
வெஞ்சின விறல்வேற் காளையொ
டின்றுபுகு தருமென வந்தன்று தூதே.

**எ - து** உடன்போய் வதுவையயரப்பட்ட தலைவி, 'தலைவனோடு இன்று வரும்' எனக்கேட்ட செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது.

**குறிப்பு.** மள்ளரன்ன - வீரரைப் போன்ற. மரவம் - ஒரு வகை மரம். மகளிரன்ன - மகளிரைப் போன்று; மள்ளரும் மகளிரும்: **ஐங்.** 94 : 1-2.

அரும்பதம் - அரிய செவ்வி. பெரும் பதம் - பெரிய காலத்தையுடைய. காதல் - கலியாணம். விறல் - வெற்றி. புகுதரும் - வருவாள். தூது வந்தன்று ; வந்தன்று - வந்தது.

**(மேற்.)** மு. வரைந்தமை செவிலி நற்றாய்க் குணர்த்தல் (**நம்பி.** வரைவு. 24. (கo)

(சo) மறுதரவுப் பத்து முற்றிற்று.

பாலை முற்றிற்று.

**ஓதலாந்தையார்**

# 5. முல்லை

## (சக) செவிலிகூற்றுப் பத்து

401. மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வ னடுவண ளாக நன்றும்
இனிது மன்றவவர் கிடக்கை முனிவின்றி
நீணிற வியலகங் கவைஇய
(5) ஈனு மும்பரும் பெறலருங் குரைத்தே.

**எ - து** கடிமனைச்சென்றுவந்த செவிலி உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது.

**இனி வருகின்ற பாட்டு ஒன்பதனுள் முதல் எட்டினுக்கும் இஃது ஒக்கும்.**

**குறிப்பு.** மறி - மான்குட்டியை. மானும் பிணையும் போல. நடுவணன் - நடுவின்கண் உள்ளான். கிடக்கை - கிடத்தல். நீனிறவியலகம் - கடல். கவைஇய - சூழ்ந்த ; “ கிண்கிணி கவைஇய ” (**முருகு.** 13.) ஈனும் - இவ்வுலகும் ; **சிலப்.** பதி. 53, 23 : 176 ; **மணி.** 28 : 132 ; **பெருங்.** 3. 24 : 207. பெறலருங்குரைத்து - பெறுதற்கரிது ; **புறநா.** 5 : 8.

**(மேற்.)** மு. இது செவிலி நற்றாய்க்கு உவந்து கூறியது (**தொல்.** கற்பு. 12, **ந.**) (க)

402. புதல்வற் கவைஇய தாய்புற முயங்கி
நசையினன் வதிந்த கிடக்கை பாணர்
நரம்புளர் முரற்கை போல
இனிதா லம்ம பண்புமா ருடைத்தே.

**குறிப்பு.** புதல்வற் கவைஇய - புதல்வனைச்சூழ்ந்த. தாய்புறம் - தாயினது முதுகை. நசையினன் - விருப்பமுள்ளவனாகி. வதிந்த - தங்கிய. முரற்கை - துள்ளலோசை : **ஐங்.** 407 : 2 ; **மலைபடு.** 390. கிடக்கை இனிது, பண்பும் உடைத்து ; ஆல், மார் : அசைநிலைகள். மு. ஒப்பு. **குறுந்.** 359. (உ)

403. புணர்ந்த[1]கா தலியிற் புதல்வன் றலையும்
அமர்ந்த வுள்ளம் பெரிதா கின்றே
அகன்பெருஞ் சிறப்பிற் றந்தை [2] பெயரன்
முறுவலி னின்னகை பயிற்றிச்
சிறுதே ருருட்டுந் தளர்நடை கண்டே.

**குறிப்பு.** காதலியின் - தலைவியினும். புதல்வன்தலையும் - தலைவனிடத்தில்; உம்மை: அசைநிலை. தந்தை பெயரன் - தலைவனது தந்தையின் பெயரையுடையவனாகிய புதல்வனது; தலைவன் தன் தகப்பனார் பெயரைத் தன் பிள்ளைக்கிடுதல் மரபு; **கலி.** 75 : 23 - 5; "எந்தை பெயரனை யாம் கொள்வேம்" (**கலி.** 81 : 35.) சிறுதேர் உருட்டல்: "ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்" (**பெரும்பாண்.** 249); **பட்.** 24-5; **குறுந்.** 61 : 1 - 3. கண்டு பெரிதாகின்று.

**(பி - ம்.)** [1] 'காதலின்' [2] 'பெயரான்' (௩)

404. வாணுத லரிவை மகன்முலை யூட்டத்
தானவள் சிறுபுறங் கவையின னன்று
[1] நறும்பூந் தண்புற வணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே.

**குறிப்பு.** அரிவை - தலைவி. மகனை முலையூட்ட. சிறுபுறம் - புறக்கழுத்தை. கவையினன் - அணைந்தான். புறவு - முல்லைநிலம். குறும்பல் பொறைய - குறிய பல சிறு குவடுகளையுடைய; **குறுந்.** 134 : 3, 215 : 5, 333 : 4. கிழவோன் கவையினன். தலைவன் தலைவியது புறத்தைக்கவவுதல்: **அகநா.** 19 : 19, 26 : 23; **பெருங்.** 3. 14 : 148.

**(மேற்.)** மு. இது செவிலி நற்றாய்க்கு உவந்து கூறியது (**தொல்.** கற்பு. 12, **ந.**) **(பி - ம்.)** 'நறும்பூண் டண்' (௪)

405. ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல
மனைக்குவிளக் காயினள் மன்ற கனைப்பெயற்
பூப்பல வணிந்த வைப்பிற்
புறவணி நாடன் புதல்வன் றாயே.

**குறிப்பு.** பாண்டிற் செஞ்சுடர் - கால்விளக்கிலுள்ள செவ்விய தீபம். பெயல் - பெய்தற்றொழிலையுடைய மேகம். வைப்பு - இடங்கள். புதல்வன் தாய் என்றது பயன்பெற்றதைக் கூறியது; **ஐங்.** 90 : 4, குறிப்பு. "நன்கலம் நன்மக்கட் பேறு" (**குறள்.** 60.) புதல்வன்தாய் மனைக்கு விளக்காயினாள்: "மனைக்கு விளக்க மடவாள்" (**நான்மணிக்.** 105.) (௫)

406. மாத ருண்கண் மகன்விளை யாடக்
[1] காதலித் தழீஇ யினிதிருந் தனனே
தாதார் பிரச [2] மூதும்
போதார் புறவி னாடுகிழ வோனே.

குறிப்பு. மாதர் - காதலையுடைய. காதலியைத் தழீஇ. பிரசம் - வண்டு; ஐங். 417 : 3. போதார் - மலர்நிறைந்த. கிழவோன் இருந்தனன்.

(மேற்.) மு. தலைவன் பரத்தைமையிற் பிரிவொழிந்து மனைக்கண் இருந்தது (தொல். கற்பு. 31, ந.)

(பி - ம்.) [1] 'காதலிற் றழீஇ' [2] 'முரலும்' (சு)

407. நயந்த காதலித் தழீஇப் பாணர்
நயம்படு முரற்கையின் யாத்த பயன்றெரிந்
தின்புறு புணர்ச்சி நுகரும்
மென்புல வைப்பி னுடுகிழ வோனே.

குறிப்பு. நயந்த - விரும்பிய. பாணர் - பாணரது. முரற்கை - துள்ளலோசை; ஐங். 402 : 3, குறிப்பு. யாத்த - கட்டப்பட்ட. மெல்புலவைப்பு - மென்மையான புலங்களையுடைய நெய்தல் நிலம். கிழவோன் நுகரும்.

(எ)

408. பாணர் முல்லை பாடச் சுடரிழை
வாணுத லரிவை முல்லை மலைய
இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத்[1] தன் புதல்வனொடு பொலிந்தே.

குறிப்பு. முல்லை - முல்லைப்பண். முல்லை மலைய - முல்லைமலரைச்சூட. முல்லைசூடல் கற்பின்மிகுதியைக் குறிக்கும்; சிறுபாண். 30, ந.; தக்க. 119. துனி - வெறுப்பு. நெடுந்தகை பொலிந்து இனிதிருந்தனன்.

(மேற்.) மு. இது வாயில் தம்முட்கூறியது (தொல். கற்பு. 11, இளம்.)

(பி - ம்.) [1] 'தம்'

(அ)

409. புதல்வற் கவைஇயினன் றந்தை மென்மொழிப்
புதல்வன் றாயோ விருவருங் கவையினள்
இனிது மன்றவவர் கிடக்கை
[1] நணியிரும் பரப்பினிவ் வுலகுட னுறுமே.

குறிப்பு. தந்தை புதல்வனைக் கவையினன். இருவரும் - தலைவனையும் புதல்வனையும். அவர் கிடக்கை இனிது. இவ்வுலகுடன் - இவ்வுலகமுழுதும்; "உலகுடன் விளக்கும்" (யா. கா. 14, மேற்.) உறுமே: உறுது என்றபடி; ஏ, எதிர்மறை. மு. ஒப்பு. குறுந். 359 : 4 - 6. (பி - ம்.) 'நளி' (க)

410. மாலை முன்றிற் குறுங்காற் கட்டில்
மனையோ டுணைவி யாகப் புதல்வன்
மார்பி னூரு மகிழ்நகை யின்பப்
பொழுதிற் கொத்தன்று மன்னே
(5) மென்பிணித் தம்ம பாணன தியாழே.

எ - து கடிமனைச்சென்ற செவிலி தலைமகனும் தலைமகளும் புதல்வ னொடு பாடல்கேட்டிருந்தமை கண்டு தன்னுள்ளே உவந்துசொல்லியது.

குறிப்பு. முன்றிற் குறுங்காற்கட்டில் - முன்வாசலின்கண் உள்ள குறுகிய காலையுடைய கட்டிலில். மனையோள் - மனைவி. மார்பின் - மார் பிடத்தில். மென்பிணித்து - மெல்லிய பிணிப்பையுடையதானது. யாழ் இன்பப்பொழுதிற்கு ஒத்தன்று ; மென்பிணித்து. பொழுதிற்கு ஒத்தன்று என்றது முல்லைப்பண்ணை. (பி - ம்.) [1] 'குறுங்காட்டின்னகை' (கO)

(சக) செவிலிகூற்றுப் பத்து முற்றிற்று.

## (சஉ) கிழவன் பருவம்பாராட்டுப் பத்து

411. ஆர்குர லெழிலி யழிதுளி சிதறிக்
கார்தொடங் கின்றாற் காமர் புறவே
வீழ்தரு புதுப்புன லாடுகம்
தாழிருங் கூந்தல் வம்மதி விரைந்தே.

எ - து பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன் அப்பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடு கூடிச் செல்லாநின்றுழிப் பருவம் வந்ததாகத் தான் பருவத்திற்குமுன்னே வந்தமை தோன்றக் கூறுவான் தலைவிக்கு உரைத்தது.

குறிப்பு. எழிலி - மேகம். கார் தொடங்கின்று : ஐங். 413 : 3. காமர் புறவே - அழகிய முல்லை நிலத்தின்கண். ஆடுகம் - ஆடுவோம். கூந்தல் : விளி. வம்மதி - வருவாயாக. விரைந்து வம்மதி. (க)

412. [1]காயா கொன்றை நெய்தன் முல்லை
போதவிழ் தளவமொடு[2]பிடவலர்ந்து கவினிப்
பூவணி கொண்டன்றாற் புறவே
பேரமர்க் கண்ணி யாடுகம் விரைந்தே.

இதுவுமது.

(ப - ரை.) விளையாட்டு நயப்புக் கூறியது.

குறிப்பு. காயாவும் கொன்றையும் : ஐங். 420 : 1-2 ; குறுந். 183 : 1-5. நெய்தல் முல்லைக்கு வந்தது. தளவம் - செம்முல்லை. பிடவு - பிடாமலர். கவினி - அழகுபெற்று. புறவு பூவணி கொண்டன்று. பேரமர்க்கண்ணி - பெரிய அமர்த்த கண்ணையுடையவள் : விளி ; "பேரமர்க்கண்" (யா. கா. 1.) விரைந்து ஆடுகம் ; ஆடுகம் - விளையாடுவோம்.

(பி - ம்.) [1] 'காயாக்கொன்றை' [2] 'பிடவமலர்ந்து' (உ)

413. நின்னுத லாறு நறுந்தண் புறவில்
நின்னே போல மஞ்ஞை யாலக்
கார்தொடங் கின்றாற் பொழுதே
பேரிய லரிவை நாநயத் தகவே.

இதுவுமது.

குறிப்பு. நுதல் நாறுதல்: கலி. 14 : 4. நின்னேபோல - உன்னைப் போல. அடி, 1-2 : ஐங். 492 : 1-2. நாம் நயத்தக - நாம் விரும்ப. நயத்தக கார் தொடங்கின்று. (௩)

414. புள்ளு மாவும் புணர்ந்தினி துகளக்
கோட்டவுங் கொடியவும் பூப்பல பழுனி
மெல்லிய லரிவை கண்டிகும்
மல்ல லாகிய மணங்கமழ் புறவே.

இதுவுமது.

குறிப்பு. புள்ளும் மாவும் - பறவைகளும் விலங்குகளும். உகள - துள்ள. கோட்டவும் கொடியவும் - கிளையிலுள்ளனவும் கொடியிலுள்ளனவு மான; இரண்டும் முல்லைக்கே உரியன; கலி. 54 : 1. பழுனி - பழுத்து. அரிவை : விளி. கண்டிகும் - கண்டோம்; ஐங். 121, குறிப்பு. மல்லலாகிய - வளம்பெற்ற. அரிவை, பழுனி மல்லலாகிய புறவு கண்டிகும். (௪)

415. இதுவே மடந்தைநா மேவிய பொழுதே
உதுவே மடந்தைநா முள்ளிய புறவே
இனிதுடன் கழிக்கி லிளமை
இனிதா லம்ம[1]வினியவர்ப் புணர்வே.

இதுவுமது.

குறிப்பு. மடந்தை : விளி. நாம் மேவியபொழுது இதுவே, உள்ளிய புறவு உதுவே. இனியவர் என்றது தலைவியை. புணர்வு இனிதுடன் கழிக்கின் இளமை இனிது : கலி. 18 : 11-2. (பி - ம்.) [1] 'வினியவர் புணர்வே' (௫)

416. போதார் நறுந்துகள் கவினிப் புறவில்
தாதார்ந்து
களிச்சுரும் பரற்றுங் காமர் புதலின்
மடப்பிடி தழீஇய மாவே
(5) சுடர்த்தொடி மடவரற் புணர்ந்தனம் யாமே.

எ - து பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன் பருவத்திற்கு முன்னேவந்து தலைவியொடு கூடிச் செல்லாநின்றுழி அதற்கு இனியனாய்த் தன்னுள்ளே சொல்லுவான்போன்று தலைவி அறியுமாற்றாற் கூறியது.

குறிப்பு. துகள் - மகரந்தப்பொடி. கவினி - கவின்பெற்று. காமர் புதலின் - அழகிய புதரின்கண்ணே. பிடி தழீஇய மாவே என்றது யானையை நோக்கிய விளி. மடவரலை யாம் புணர்ந்தனம். (௬)

417. கார்கலந் தன்றாற் புறவே பலவுடன்
ஏர்பரந் தனவாற் புனமே யேர்கலந்து
தாதார் பிரச மொய்ப்பப்
போதார் கூந்தன் முயங்கினள் எம்மே.

இதுவுமது.

குறிப்பு. கார்கலந்தன்று - கார்காலம் கலந்தது. ஏர் - அழகு; ஏருமாம். புனம் - பயிரிடப்பட்ட இடம். புறவு கார்கலந்தன்று, புனம் ஏர்பரந்தன. பிரசம் - வண்டு. கூந்தல்; தலைவி. கூந்தல் எம்மை முயங்கினள். (எ)

418. வானம் பாடி வறங்களைந் தானா
அழிதுளி தலைஇய புறவிற் காண்வர
வானர மகளோ நீயே
மாண்முலை யடைய முயங்கி யோயே.

எ - து குறித்த பருவத்திற்கு உதவ வாராநின்ற வழிக்கண் உருவு வெளிப்பாடு கண்ட தலைமகன் இல்லத்துப் புகுந்துழித் தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. வானம்பாடி - ஒருவகைப் பறவை. வறம் - வறுமையை. மழை வறண்ட காலத்து வானம்பாடி மேகத்து நீர்த்துளியை நச்சிப் பாட மழை தவறாமல் பெய்யும்; அதனால் எல்லாரது துன்பமும் தீரலின் 'வானம் பாடி வறங்களைந்து' என்றார்; வானம்பாடி மழை நீரை நினைத்துப் பாடல்: பட். 3-5; கலி. 46 : 20; சீவக. 2897. அழிதுளி - மிக்க துளி. தலைஇய - பரவிய. காண்வர வானர மகளோ - காட்சியில் வந்த தெய்வமங்கையோ; என்றது இல்லத்திருப்பவும் பாலைநிலத்தில் தன்னை முயங்கினமை பற்றி. அடைய - முழுவதும். முயங்கியோயே, நீ வானர மகளோ. (அ)

419. உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மைப்
[1]பிரிந்துற லறியா விருந்து கவவி
நம்போ னயவரப் புணர்ந்தன
கண்டிகு மடவரல் புறவின் மாவே.

எ - து இன்ப நுகர்ச்சிக்கேற்ற பருவம் வந்துழித் தலைமகளொடு புறவிற் சென்ற தலைமகன் அவ்விடத்து மாக்களை அவட்குக்காட்டிச் சொல்லியது.

குறிப்பு. செயிர்தீர் கேண்மை - குற்றமற்ற நட்பு; உயிர்கலந்தொன்றிய கேண்மை; நற். 72 : 3. பிரிந்துறலை அறியாதபடி இருந்து. கவவி - அணைத்து. விருந்து கவவியெனப் பிரித்தலும் பொருந்தும். நயவர - விருப்பம் வர. கண்டிகும் - காண்பாயாக. மடவரல் : விளி. மா கவவிப் புணர்ந்தன கண்டிகும். (பி - ம்.) [1] 'பிரிந்துறு வறியா' (கூ)

420. பொன்னென மலர்ந்த கொன்றை மணியெனத்
தேம்படு காயா மலர்ந்த தோன்றியொடு
நன்னல மெய்தினை புறவே நின்னைக்
காணிய வருதும் யாமே
(5) வாணுத லரிவையொ டாய்நலம் படர்ந்தே.

எ - து குறித்த பருவத்து எய்திய அணித்தாகவந்த தலைமகன் பருவத்தால் அணிகொண்ட புறவைநோக்கிச் சொல்லியது.

குறிப்பு. தேம் - இனிமை. புறவே : விளி. புறவே, கொன்றையொடும், காயாவொடும், தோன்றியொடும் நலம் எய்தினை ; கொன்றைப் பூவிற்குப் பொன்னும், காயாமலருக்கு நீலமணியும் உவமைகள். கொன்றைப் பூவிற்குப் பொன் : குறுந். 21 : 1-3. காணிய - காணவேண்டி. யாம் நின்னைக் காணிய அரிலவையொடு நலம் படர்ந்து வருதும். (௰)

(சஉ) கிழவன் பருவம்பாராட்டுப் பத்து முற்றிற்று.

## (சந) விரவுப் பத்து

421. மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்
[1]புன்புல நாடன் மடமகள்
நலங்கிளர் பணைத்தோள் விலங்கின செலவே.

எ - து வினை பலவற்றிற்கும் பிரிந்தொழுகும் தலைமகன் பின்பு மனைவயின் நீங்காது ஒழுகுகின்ற காதலுணர்ந்தோர் சொல்லியது.

(ப - ரை.) வெண்காழென்றது மாலைக்காலத்து முயலெறியும் தடியை.

குறிப்பு. வெண்காழ் - வெளுத்த தடியை. இரியும் - ஓடுகின்ற. கோலால் எறிந்த முயல் : புறநா. 339 : 4. புன்புலம் - புன்செய் ; முல்லை நிலம். மடமகளது தோள் தலைவன் செலவை விலங்கின ; விலங்கின - தடுத்தன. 421-30 : விரவுப்பத்து ; விரவுதல் - கலத்தல்.

(பி - ம்.) [1] ‘புன்புன நாடன்’ (க)

422. கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் புரவி
நெடுங்கொடி முல்லையொடு தளவமல ருதிர
விரையுபு கடைஇநாஞ் செல்லின்
நிரைவளை முன்கை வருந்தலோ விலளே.

எ - து மீள்கின்றான் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

குறிப்பு. கடும்பரி நெடுந்தேர்க் கால் வல்புரவி - கடுமையாகப் பரிதலையுடைய நெடிய தேரினது உருளையை ஓட்டுதலில் வல்ல குதிரை. தளவமலர் - செம்முல்லை மலர். முல்லையும் தளவமும் : ஐங். 450. விரையுபு - விரையும்படி. கடைஇ - செலுத்தி. நிரைவளை முன்கை : குறுந். 335 : 1. வருந்தலோ இலள் - வருந்தாள். (உ)

423. மாமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே
வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே
யாமே நிற்றுறந் தமையலம்
ஆய்மல ருண்கணு நீர்நிறைந் தனவே.

எ - து கார்ப்பருவத்தே பிரியக்கருதிய தலைமகற்குத் தோழி தலைமகளது ஆற்றாமைகூறிச் செலவழுங்குவித்தது.

(ப - ரை.) இது கார்ப்பருவத்தே கூறுதலான் முல்லையாயிற்று.

குறிப்பு. மழை - மேகம். இடியூஉ - இடித்து. தளி - நீர்த் துளியை. செலவு அயர்ந்தனையே - பிரிந்து செல்ல விரும்பினையே. நிற்றுறந்து - உன்னைப் பிரிந்து. அமையலம் - பொருந்த மாட்டோம்.

அழுங்குவித்தது - தடுத்தது. இப்பாட்டு முதற்பொருளால் முல்லை. (௩)

424. புறவணி நாடன் காதன் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வ [1]னழுமினி முலைக்கே.

இதுவுமது.

குறிப்பு. நுதல் பசப்பச்செலல்: ஐங். 423 : 2. செலின் - சென்றால். குழந்தைக்குத் தாமரைப்பூ உவமை ; "ஒண்குறு மாக்களை......தாமரைப் போது பிடித்தாங்கு" (மதுரை. 461-3) ; "அடைமறை யாயிதழ்ப் போது போற் கொண்ட, குடைநிழற் றோன்றுநின் செம்மலை" (கலி. 84 : 10 - 11.) நீ செலின் புதல்வன் முலைக்கு அழும் ; தலைவி இறந்துபடுவாள் என்பது குறிப்பு.

(மேற்.) மு. இஃது எதிரது நோக்கிற்று (தொல். கற்பு. 9, ந.) திணைமயக்குறுதலுள் பிரிதல் என்னும் உரிப்பொருள் வந்த பாட்டு (நம்பி. ஒழிபு. 42.)

(பி - ம்.) [1] 'னழுமணி' (௪)

425. புன்புறப் பேடை சேவ லின்புற
மன்ன ரியவரி னிரங்குங் கானம்
வல்லை நெடுந்தேர் கடவின்
அல்ல லருநோ யொழித்தலெமக் கெளிதே.

எ - து வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

குறிப்பு. புன்புறப்பேடை - புல்லிய புறவின் பேடை. இன்புற - இன்பத்தையடைய. இயவரின் - வாத்தியக்காரரைப் போல. வல்லை - விரைவில். கடவின் - செலுத்தினால். அல்லல் அருநோய் - துன்பத்தைத் தருகிற கொடிய நோயை ; அருநோய் : அருநரகு என்றாற் போன்றது. தலைவியினது என ஒரு சொல் வருவிக்க. (௫)

426. வென்வேல் வேந்த னருந்தொழி றுறந்தினி
நன்னுதல் யானே செலவொழிந் தனெனே
முரசுபா டதிர வேவி
அரசுபடக் கடக்கு மருஞ்சமத் தானே.

எ - து வேந்தற்குத் தானைத்தலைவனாய் ஒழுகும் தலைமகன் பிரிந்து வினை முடித்து வந்து தலைவியோடு உறைகின்றுழி, 'இன்னும் பிரியுங்கொல்' என்று கருதிய தலைமகட்குக் கவற்சிதீரச் சொல்லியது.

குறிப்பு. வென்வேல் - வெற்றி பொருந்திய வேல். துறந்து - நீக்கி. நன்னுதல் : விளி. செலவொழிந்தனென் - பிரிந்து செல்லுதலை நீக்கினேன். பாடு - இடம். அதிர - ஒலிக்க. அரசுபட - பகையரசர் கெட. சமம் - போர். முரசு ஒலிக்கப் பொருதல் : **புறநா.** 93 : 1-2. சமத்தான் உண்டாகும் செலவை ஒழிந்தனன். (சு)

427. பேரமர் மலர்க்கண் மடந்தை நீயே
காரெதிர் பொழுதென விடலொல் லாயே
போருடை வேந்தன் பாசறை
வாரா னவனெனச் செலவழுங் கினனே.

**எ - து** 'பிரியுங்கொல்' என்று ஐயுற்று உடன்படாமை மேற்கொண்டு ஒழுகுகின்ற தலைமகட்குத் [1]தான் பிரிவொழிந்ததற்குக் காரணங்கூறித் தேற்றியது.

**குறிப்பு.** மடந்தை : விளி. கார் எதிர் பொழுது - கார்காலம் எதிர் வருகின்றபொழுது. விடல் ஒல்லாய் - என்னை விடுதற்குப் பொருந்தாய். பாசறை - பாடிவீட்டின்கண். அவன் என்றது பகையரசனை. அழுங்கினன் - தவிர்த்தனன் ; **தொல்.** உரி. 54.

**(பி - ம்.)** [1] 'தான் இனிப் பிரிவொழிந்த' (எ)

428. தேர்செல வழுங்கத் திருவிற் கோலி
ஆர்கலி யெழிலி [1]சோர்தொடங் கின்றே
வேந்துவிடு விழுத்தொழி லொழிய
யான்றொடங் கினனு னிற் [2]புறந் தரவே.

**எ - து** 'பிரியுங்கொல்' என்று ஐயுற்ற தலைமகள் ஐயம் தீரத் தலைமகன் சொல்லியது.

**குறிப்பு.** திருவில் - இந்திரவில் ; **புறநா.** 20 : 10 ; **சிலப்.** 15 : 156 ; **மணி.** 6: 10 ; **சீவக.** 1903 ; **சூளா.** நகரச். 18. கோலி - வளைத்து. ஆர்கலி எழிலி - ஒலியையுடைய மேகம். சோர் - மழை சோர்தலை. விழுத்தொழில் - விழுமியதொழில். நிற் புறந்தர - உன்னைப் பாதுகாக்க. புறந்தரத் தொடங்கினன்.

**(மேற்.)** மு. இஃது ஐயந்தீர்த்தது (**தொல்.** கற்பு. 5, **ந.**)
**(பி - ம்.)** [1] 'கார் தொடங்கின்றே' [2] 'புறந்தரலே' (அ)

429. பல்லிருங் கூந்தல் பசப்பு நீவிடின்
செல்வேந் தில்ல யாமே செற்றோர்
வெல்கொடி யரண முருக்கிய
கல்லா யானை வேந்துபகை வெலற்கே.

**எ - து** குறிப்பினாற் பிரிவுணர்ந்து வேறுபட்ட தலைமகள் உடம்படுவாளாக வேந்தற்கு உற்றுழிப்பிரியும் தலைமகன் சொல்லியது.

குறிப்பு. பல்லிருங் கூந்தல் - ஐம்பால்; விளி. பசப்பு - பிரிவையுள்ளிப் பசத்தலை. செற்றார் - பகைவரது. கல்லா யானை - கொடுந்தொழிலையன்றி வேறொன்றையும் கல்லாத யானை. வேந்தினது பகையை வெலற்குச் செல்வேம். (௯)

430. நெடும்பொறை மிசைய குறுங்காற் கொன்றை
அடர்பொன் னென்னச் சுடரிதழ் பகரும்
கான்கெழு நாடன் மகளே
அழுத லான்றிசி னழுங்குவல் செலவே.

எ - து 'பிரியுங்கொல்' என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் பருவவரவு கூறி, 'இதுகாரணத்தாலும் பிரியேன்' எனச்சொல்லியது.

குறிப்பு. நெடும்பொறை மிசைய - நெடிய மலையின்மேலுள்ள. அடர் பொன் என்ன=பொன்னடர் என்ன - பொன்னாலாகிய தகடு என்னும்படி. பொன்னன்ன கொன்றை : ஐங். 420 : 1, 432 : 2. பகரும் - கொடுக்கும்; ஐங். 13 : 2. அழுதலான்றிசின் - அழுதல் அமைவாயாக; சின் : முன்னிலையசை. அழுங்குவல் - கெடுப்பேன். செலவு அழுங்குவல். (௧0)

(சரு) விரவுப்பத்து முற்றிற்று.

## (சச) புறவணிப் பத்து

431. நன்றே காதலர் சென்ற வாறே
அணிநிற [1]விரும்பொறை மீமிசை
மணிநிற [2]வுருவின தோகையு முடைத்தே.

எ - து 'பிரிவுடம்பட்டும் ஆற்றுயாகின்றது என்னை?' என்று வினவியவழி, 'அவர்போன சுரம் போகற்கரிதென்று ஆற்றேனாகின்றேன்' என்ற தலைமகட்கு 'வேனிற்காலம் கழிந்தது; கார்ப்பருவத்தோற்றத்திலே பிரிந்தாராகலான் அச்சுரம் நன்று' எனத் தோழிசொல்லி ஆற்றுவித்தது.

இனி வருகின்றபாட்டு ஒன்பதுக்கும் இஃது ஒக்கும்.

குறிப்பு. அணிநிற இரும்பொறை - அழகிய நிறத்தையுடைய பெரிய மலை. மணிநிற உருவின தோகை - நீலமணி நிறத்தைப் போன்ற அழகுடைய மயிலையும். ஆறு உடைத்து.

(மேற்.) 431-40. இப்பாட்டு முதலிய பத்தும் முல்லையுட் பாலை (தொல். அகத். 9, ந.)

(பி - ம்.) [1] 'விரும்புறம்', 'வரும்பொறை' [2] 'வுறுவின்றேகை' (க)

432. நன்றே காதலர் சென்ற வாறே
[1]சுடுபொ னன்ன கொன்றை சூடிக்
கடிபுகு வனர்போன் மள்ளரு முடைத்தே.

குறிப்பு. பொன் அன்ன கொன்றை ; ஐங். 420, குறிப்பு. கடி புகுவனர் - கல்யாணத்துக்குச் செல்வோர். மள்ளர் - வீரரை.

(பி - ம்.) [1] ' சுடும்பொன் ' (உ)

433. நன்றே காதலர் சென்ற வாறே
நீர்ப்பட வெழிலி வீசும்
கார்ப்பெயற் கெதிரிய கானமு முடைத்தே.

குறிப்பு. எழிலி - மேகம். கார்ப்பெயற்கு எதிரிய - மழைபொழிதலை ஏற்றுக்கொண்ட. (ங)

434. நன்றே காதலர் சென்ற வாறே
மறியுடை மான்பிணை யுகளத்
தண்பெயல் பொழிந்த வின்பமு முடைத்தே.

குறிப்பு. மறி - குட்டி. மான்பிணை - பெண்மான் ; ஐங். 401 : 1. உகள - துள்ள. தண்பெயல் - குளிர்ந்த மழையை. (ச)

435. நன்றே காதலர் சென்ற வாறே
நிலனணி நெய்தன் மலரப்
பொலனணி கொன்றையும் பிடவமு முடைத்தே.

குறிப்பு. நிலன் அணிந்த நெய்தல் ; முல்லைக்கு நெய்தல் வந்தது நில மயக்கம். பொலன் - பொன். பிடவம் - பிடவமலர். (ரு)

436. நன்றே காதலர் சென்ற வாறே
நன்பொ னன்ன சுடரிணர்க்
கொன்றையொடு மலர்ந்த குருந்துமா ருடைத்தே.

குறிப்பு. இணர் - பூங்கொத்து. குருந்தும் : ஆர் : அசைச்சொல். கொன்றையொடு குருந்தும் உடைத்து. (சு)

437. நன்றே காதலர் சென்ற வாறே
ஆலித் தண்மழை தலைஇய
வாலிய மலர்ந்த முல்லையு முடைத்தே.

குறிப்பு. ஆலி - ஆலங்கட்டி. மழை தலைஇய - மழையால் பரந்த. வாலிய மலர்ந்த - வெண்மையுள்ளனவாக மலர்ந்த. (எ)

438. நன்றே காதலர் சென்ற வாறே
பைம்புதற் பல்பூ மலர
இன்புறத் தகுந பண்புமா ருடைத்தே.

குறிப்பு. பைம்புதல் - பசுமையான புதரில். இன்புறத் தகுந - இன்ப மடையத் தக்கதான. ஆர் : அசைநிலை. (அ)

439. நன்றே காதலர் சென்ற வாறே
குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே.

**குறிப்பு.** குருந்தங்கண்ணிக் கோவலர் - குருந்த மலரானான மாலையைத் தலையிலணிந்த இடையரது. நிலைய - நிலையையுடைய. பாக்கம் - முல்லை நிலத்து ஊர்; பக்கத்துள்ள ஊருமாம். (கூ)

440. நன்றே காதலர் சென்ற வாறே
தண்பெய லளித்த பொழுதின்
ஒண்சுடர்த் தோன்றியுந் தளவமு முடைத்தே.

**குறிப்பு.** பெயல் - மேகம். அளித்த - அருள்செய்த. சுடர்த்தோன்றி - விளக்குச் சுடர் போன்ற செங்காந்தள். தளவம் - செம்முல்லை. (கo)

(சச) புறவணிப்பத்து முற்றிற்று.

## (சரு) பாசறைப் பத்து

441. ஐய வாயின செய்யோள் கிளவி
கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென
நோய்நன்கு செய்தன வெமக்கே
யாமுறு துயரமவ ளறியினோ நன்றே.

**எ - து** சென்றவினை முடியாமையிற் கார்காலம் வந்தவிடத்து மீளப் பெறாத தலைமகன் தலைமகளுழைநின்றும் வந்த தூதர்வார்த்தை கேட்டு இரங்கியது.

**(ப - ரை.)** கார்நாள் உருமொடு நோய் நன்குசெய்தன, செய்யோள் கிளவியெனக் கூட்டுக.

**குறிப்பு.** ஐயவாயின - அழகையுடையனவாயின. செய்யோள் - தலைவியினுடைய. கிளவி - வார்த்தைகள். கார்நாள் உருமொடு - மழைக்காலத்து இடியொடு. கையற - செயலற. பிரிந்தென - பிரிய. பிரிந்தென உருமொடு செய்யோள் கிளவியும் நோய்செய்தன. யாமுற்ற துயரத்தை.

**(மேற்.)** மு. தலைவன் கூற்று நிகழுமிடங்களுள் இது வினைமுடியாமையாற் பருவங்கண்டு மீளப்பெறாத தலைவன் தூதர் வார்த்தை கேட்டு வருந்திக் கூறியது (**தொல்.** அகத். 41, ந.) (க)

442. பெருஞ்சின வேந்த னருந்தொழி றணியின்
விருந்துநனி பெறுதலு முரியண் மாதோ
இருண்டுதோன்று விசும்பி னுயர்நிலை யுலகத்
தருந்ததி யனைய கற்பிற்
(5) குரும்பை [1]மணிப்பூட் புதல்வன் றாயே.

**எ - து** வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுடியாமையிற் பாசறைக்கண் இருந்து பருவவரவின்கண் சொல்லியது.

**குறிப்பு.** அருந்தொழில் தணியின் - அருமையான தொழில் முடிவுறின். விசும்பு - ஆகாயம். இருண்டு தோன்றும் விசும்பு என்றது கார்காலத்தைக்

குறித்தது. உயர்நிலையுலகம் : குறுந். 361 : 2. அருந்ததி யனைய கற்பு : பெரும்பாண். 302-4 ; கலி. 1 : 21 ; புறநா. 122 : 8 ; திரிகடுகம், 1. குரும்பை மணிப்பூண் - குரும்பை போன்ற வடிவுள்ள மணிகளையுடைய கிண்கிணி ; நற். 269 : 1. புதல்வன்தாய் : ஐங். 90 : 4, குறிப்பு. புதல்வன்தாய் விருந்து பெறுதலும் உரியள். விருந்தயர்தல் தலைவிக்குரியது ; ஐங். 482 : 1-2.

(பி - ம்.) [1] 'மணிப்பூண்ட' (உ)

443. நனிசேய்த் தென்னாது நற்றே ரேறிச்சென்
றிலங்கு நிலவி னிளம்பிறை போலக்
காண்குவெந் தில்லவவள் கவின்பெறு சுடர்நுதல்
விண்ணுய ரரண்பல வௌவிய
மண்ணுறு முரசின் வேந்துதொழில் விடினே.

இதுவுமது.

குறிப்பு. நனி சேய்த்து என்னாது - மிக்க தூரத்திலுள்ளது என்று எண்ணாமல். காண்குவெம் - காண்பேன். தில்ல : விழைவின்கண் வந்தது. நுதலுக்கு இளம்பிறை உவமை. நுதலைப் பிறைபோலக் காண்குவம். வௌவிய - கைப்பற்றிய. மண்ணுதல் - கழுவுதல். அரண்பல வௌவிய முரசு ; வௌவிய வேந்து எனினுமாம். வேந்தினது தொழில் விடின் காண்குவெம்.

(மேற்.) மு. இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் குறித்த பருவத்து வினைமுடியாமையிற் புலம்பியது (தொல். அகத். 41, ந.) (ங)

444. பெருந்தோண் மடவரற் காண்குவெந் தில்ல
நீண்மதி லரணம் பாய்ந்தெனத் தொடிபிளந்து
வைந்நுதி [1]மழுகிய தடங்கோட் டியானை
வென்வேல் வேந்தன் பகைதணிந்
தின்னுந் தன்னாட்டு முன்னுதல் பெறினே.

இதுவுமது.

குறிப்பு. தோளையுடைய மடவரலைக் காண்குவெம். பாய்ந்தென - பாய. அரணத்தில் பாய்ந்தென. தொடி - பூண். வைந்நுதி - கூர்மையான நுனி. அடி, 2-3 : பதிற். 53 : 21 ; அகநா. 24 : 11-3. இன்னும் ; உம்மை இறந்தது தழுவியது. முன்னுதல் - செல்லுதலை. முன்னுதல் பெறின் மடவரற் காண்குவெம். (பி - ம்.) [1] 'மழுங்கிய' (ச)

445. புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்துவந் தனையே யருந்தொழிற் கட்டூர்
நல்லேறு [1]தழீஇ நாகுபெயர் காலை
உள்ளுதொறுங் கலிழு நெஞ்சம்
வல்லே யெம்மையும் [2]வரவிழைத் தனையே.

எ - து பாசறைக்கண் இருந்த தலைமகன் பருவவரவின்கண் தலைமகளை நினைந்து நெஞ்சொடுபுலந்து சொல்லியது.

குறிப்பு. புகழ்சால் சிறப்பு - புகழ்மிக்க சிறப்புடைய. வந்தனை என்றது நெஞ்சை முன்னிலைப்படுத்தி. அருந்தொழிற் கட்டூர் - அரிய தொழிலமைந்த பாசறைக்கண். நாகு - பசு. பெயர்காலை - செல்லும்போது. ஏறு தழீஇ நாகு பெயர்தல்; கலி. 113 : 28 ; சீவக. 751, 2062 ; நள. க : 156. கலிழும் -கலங்கும். நெஞ்சம் : விளி. இழைத்தனை - செய்தாய். நெஞ்சம், துறந்துவந்தனை, எம்மையும் வரவிழைத்தனை.

(மேற்.) மு. இது பகைவயிற் பிரிந்தோன் பருவங்கண்டு தலைவியை நினைந்து நெஞ்சொடு புலம்பியது (தொல். அகத். 41, ந.)

(பி - ம்.) [1] 'தழீஇய' [2] 'வரவழைத்தனையே' (ரு)

446. முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள
நல்ல காண்குவ மாஅ யோயே
பாசறை யருந்தொழி லுதவிநம்
காதனன் னாட்டுப் போதரும் பொழுதே.

எ - து பாசறைக்கண் இருந்த தலைமகன் பருவவரவின்கண் உருவு வெளிப்பாடு கண்டு சொல்லியது.

குறிப்பு. பாசறை : மூங்கிலால் கட்டப்பட்ட அறைகளையுடையது ; பாசு - மூங்கில். காதல் நன்னாட்டு - அன்பு பொருந்திய நல்ல நாட்டின்கண். போதரும்பொழுது - போகும்பொழுது. மாயோயே, போதரும்போது நல்ல காண்குவம்.

(மேற்.) மு. வேந்தற் குற்றுழிப் பிரிந்தோன் பருவவரவின்கண் உருவு வெளிப்பட்டுழிப் புலம்பியது ; உதவி என்றலின் வேந்தற்கு உற்றுழியாயிற்று (தொல். அகத். 41, ந.) தலைவன், உருவு வெளிப்பாடுகண்டு சொல்லியது (நம்பி. கற்பு. 10.) (சா)

447. பிணிவீடு பெறுக மன்னவன் றொழிலே
பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை
ஆடு சிறைவண் [1]டவிழ்ப்ப
[2]பாடு சான்ற காண்கம்வா ணுதலே.

எ - து வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் அவன் வினைமுற்றி மீளும் வேட்கையனாய்ப் பருவவரவின்கண் தலைமகளை நினைத்துச் சொல்லியது.

குறிப்பு. பிணிவீடு - கட்டு விடுதல். தொழில் பிணிவீடு பெறுக. தளவு - செம்முல்லை. சிரல் - மீன்கொத்தி. தளவினது செம்முகைக்குச் சிரல்வாய் உவமை ; "சிரல்வாய் வனப்பின வாகி...தளவந்தகைந்தன" (கார். 36.) சிறை - சிறகு. பாடுசான்ற - இயல்பு மிகுந்தன. காண்கம் - பார்ப்போம். வாணுதலைக் காண்கம். (பி - ம்.) [1] 'டழைப்ப' [2] 'பாடல்' (எ)

448. ¹தழங்குரன் முரசங் காலை யியம்பக்
கடுஞ்சின வேந்தன் றொழிலெதிர்ந் தனனே
மெல்லவன் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயற் கனை துளி காரெதிர்ந் தன்றே
அஞ்சி லோதியை யுள்ளுதொறும்
துஞ்சா தலமர னுமெதிர்ந் தனமே.

ஏ - து வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் பருவம்வந்தவிடத்தினும் மீளப்பெறாது அரசன் செய்தியும் பருவத்தின் செய்தியும் தன்செய்தியும் கூறி ஆற்றானாயது.

குறிப்பு. தழங்குரல்=தழங்குகுரல் - ஒலிக்கின்ற ஓசை; விகாரம்; "கறங்குரல்" (ஐங். 452 : 2) போல. காலை - நாட்காலையில். இயம்ப - முழங்க. முரசம் காலையில் இயம்பல் : மதுரை. 232 ; புறநா. 161 : 29 ; சிலப். 13 : 140, 14 : 14, 17 : 6, 26 : 53 ; பு. வெ. 117, 202. தொழில் - போர்த் தொழிலை. எதிர்ந்தனன் - ஏற்றுக்கொண்டனன். அவல் மருங்கில் - பள்ளங்களில். அவல் மருங்கின் முல்லை: புறநா. 352 : 3-4. பெயல் - மேகம். கார் - கார்காலம். அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலையுடையாள்; தலைவி; ஐங். 49 : 1, குறிப்பு. உள்ளுதொறும் - நினைக்குந்தோறும். துஞ்சாது - தூக்கம் கொள்ளாமல். அலமரல் - சுழற்சியை. எதிர்ந்தனம் - ஏற்றுக்கொண்டோம். வேந்தன் தொழில் எதிர்ந்தனன், கார் துளி எதிர்ந்தன்று, நாம் அலமரல் எதிர்ந்தனம்.

(மேற்.) மு. இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் பருவம் வந்துழி மீளப்பெறாது அரசன்செய்தியும் பருவத்தின் செய்தியும் தன் செய்தியும் கூறிப் புலம்பியது (தொல். அகத். 41, ந.) (பி - ம்.) ¹ 'தழங்கு குரல்' (அ)

449. முரம்புகண் ணுடையத் திரியுந் திகிரியொடு
பணைநிலை முனைஇய வயமாப் புணர்ந்து
திண்ணிதின் மாண்டன்று தேரே
ஒண்ணுதற் காண்குவம் வேந்துவினை விடினே.

ஏ - து பாசறைக்கண் வேந்தனொடு வினைப்பொருட்டாற் போந்திருந்த தலைமகன் அவ்வேந்தன் மாற்றுவேந்தர் தருதிறைகொண்டு மீள்வானைப் ¹பொருந்துழித் தானும் மீட்சிக்குத் தேர்சமைத்த எல்லைக்கண்ணே அவ்வரசன் பொருத்தம்தவிர்ந்து மீண்டும் வினைமேற்கொண்டானாகச் சொல்லியது.

குறிப்பு. முரம்பு கண் உடைய திரியும் - பருக்கையையுடைய மேட்டுநிலத்திடம் விள்ளும்படி சுற்றுகின்ற : மலைபடு. 432 ; குறுந். 400 : 4. திகிரி - சக்கரம். பணைநிலை முனைஇய வயமா - பந்தியான நிற்றலை வெறுத்த வலியுடைய குதிரைகள் ; பணை - குதிரைப்பந்தி ; முனைவுதல் - வெறுத்தல் ; பதிற். 64 : 7. மாண்டன்று - மாட்சி பொருந்தியது. வினை - போர்த்தொழிலை. மாப் புணர்ந்து தேர் மாண்டன்று, வேந்து வினைவிடின் ஒண்ணுதலைக் காண்குவம்.

பொருத்தம் - சந்தி.

(மேற்.) மு. இது வேந்தன் திறைகொண்டு மீள்வுழித்தானும் சமைந்த தேரை அழைத்துக்கண்டு திண்ணிதின் மாண்டன்று தேரெனப் பாகனொடு கூறியவழி அவ்வேந்தன் திறை வாங்காது வினைமேற் சென்றானாகப் பாகனை நோக்கிக் கூறியது (தொல். அகத். 41, ந.)

(பி - ம்.) [1] 'பிரிந்துழித் தேர் சமைத்து அழைத்துழைக்கண்ட எல்லை'

450. [1]முரசுமா றிரட்டு மருந்தொழிற் பகைதணிந்து
நாடுமுன் னியரோ பீடுகெழு வேந்தன்
வெய்ய வுயிர்க்கு [2]நோய் தணியச்
செய்யோ [3]ளிளமுலைப் படீஇயரென் கண்ணே.

எ - து வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் வினைமுற்றாமையிற் பாசறைக்கண் இருந்து தன் மனக்கருத்து உரைத்தது.

குறிப்பு. முரசு மாறிரட்டும் - முரசு மாறி மாறி ஒலிக்கின்ற. முன்னியர் - நினைப்பானாக. வெய்ய உயிர்க்கும் நோய் - வெம்மையான பெருமூச்சைச் செய்யும் நோய்; காமம். செய்யோள் - தலைவியினது. படீஇயர் - தூங்குக; ஐங். 142 : 3, குறிப்பு. வேந்தன் நாடு முன்னியர், என்கண் முலை மிசைப் படீஇயர்.

(பி - ம்.) [1] 'முரசமாறு' [2] 'நோதணிய' [3] 'ளிடைமுலை' (கo)

(சரு) பாசறைப்பத்து முற்றிற்று.

## (சசு) பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து

451. கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் [1]றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
ஆற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே.

எ - து வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் குறித்த பருவம் நினைந்து ஆற்றியிருந்த தலைமகள் அப்பருவவரவின்கண் பாசறையினின்றும் வந்தார் அரசன் செய்தி கூறக்கேட்டு ஆற்றாளாய்ச் சொல்லியது.

குறிப்பு. காலையொடு; ஒடு; இடப்பொருளது. கையற - செயலற. தவிர்குதல் - என்பால் தங்குதல். யாவது - எத்தன்மையது. பிரிந்தோர் தவிர்குதல் யாவது; இருத்தல் வேந்தனது தொழில்.

(மேற்.) இதுமுதற் பத்தும் முல்லைபுட் பாலை (தொல். அகத் 9, ந.)

(பி - ம்.) [1] 'றருதல்' (க)

452. வறந்த ஞாலந் தெளிர்ப்ப வீசிக்
கறங்குர லெழிலி கார்செய் தன்றே
பகைவெங் காதலர் திறைதரு முயற்சி
மென்றோ ளாய்கவின் மறையப
(5) பொன்புனை பீரத் தலர்செய் தன்றே.

எ - து குறித்த பருவத்து வாராது தலைமகன் பகைமேல் முயல்கின்ற முயற்சிகேட்ட தலைமகள் கூறியது.

குறிப்பு. வறந்த ஞாலம் தெளிர்ப்ப - நீர் வற்றிய உலகம் செழிப்ப. கறங்குரல் = கறங்குகுரல் - ஒலிக்கின்ற ஓசையையுடைய ; விகாரம் ; " தழங்குரல் " (ஐங். 448 : 1) போல. எழிலி - மேகம். கார்செய்தன்றே - கார் காலத்தைச் செய்தது ; **அகநா.** 4 : 7. காதலரது முயற்சி. கவின் - அழகு. பீரத்தலர் - பீர்க்கம்பூ. பொன்போற் பீரம் : **நெடுநல்.** 14. பீரத்தலர் பசலைக்கு ; **குறுந்** 98. முயற்சி பீரத்தலர் செய்தன்று. (உ)

453. [1]அவறொறுந் தேரை தெவிட்ட மிசைதொறும்
வெங்குரற் புள்ளின மொலிப்ப வுதுக்காண்
கார்தொடங் கின்றாற் காலை யதனால்
நீர்தொடங் கினவா னெடுங்கணவர்
தேர்தொடங் கின்றா னம்வயி னானே.

எ - து பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(ப - ரை.) 'தேர்தொடங்கின்றால்' என்பது தேர் வரத்தொடங்குதல் இல்லையாயிற்று எ - று.

குறிப்பு. அவல் - பள்ளம். தெவிட்ட - ஒலிக்க ; தெவிட்டல் தேரை யொலிக்கே பெரும்பாலும் வழங்குகின்றது ; **ஐங்.** 468 : 1, 494 : 1. மிசைதொறும் - இடந்தோறும். வெம்குரல் - விரும்பத்தக்க ஒலி. உதுக்காண் : **ஐங்.** 101 : 1, குறிப்பு. கார்தொடங்கின்று - கார்ப்பருவம் தொடங்கிற்று. கணவர் தேர் தொடங்கு இன்று - தலைவரது தேர்வரத் தொடங்குதல் இல்லை.

(பி - ம்.) [1] 'அவலுறுந்' (ங)

454. தளவின் பைங்கொடி தழீஇப் பையென
நிலவி னன்ன நேரரும்பு பேணிக்
கார்நயந் தெய்து முல்லையவர்
தேர்நயந் துறையுமென் மாமைக் கவினே.

எ - து பருவவரவின்கண் தலைமகள் ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. தளவு - செம்முல்லை. பையென - மெல்ல. தளவும் முல்லையும் : **பொருந.** 199-200 ; **குறுந்.** 382 : 1-3. நயந்து - வருதலை விரும்பி. தேரை நயந்து என்கவின் உறையும். (ச)

455. அரசுபகை தணிய முரசுபடச் சினைஇ
ஆர்குர லெழிலி கார்தொடங் கின்றே
அளியவோ வளிய தாமே யொளிபசந்து
மின்னிழை ஞெகிழச் சாஅய்த்
தொன்னல மிழந்தவென் றடமென் றோளே.

எ - து ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - ரை.) அரசு பகைதணிந்து எல்லாரும் மீளும்வண்ணம் கார்வந்தது; இத் தோளுக்குரியவரோ போதார் எ - று.

குறிப்பு. சினை இ - கோபித்து. ஆர்குரல் - நிறைந்த ஒலி. மேகவொலிக்கு முரசொலி உவமை. அளியவோ அளிய - மிக இரங்கத்தக்கன; நற். 12 : 8; குறுந். 56 : 5; அகநா. 43 : 13. பசந்து - பசலை நிறமடைந்து. இழை - ஆபரணம். சாஅய் - வருந்தி. தோள் அளியவோ அளிய.

தோளுக்குரியவர் : கலி. 42 : 42; அகநா. 32 : 13-9. (ரு)

456. உள்ளார் கொல்லோ தோழி வெள்ளிதழ்ப்
பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்
வெண்கொடி யீங்கைப் பைம்புத லணியும்
அரும்பனி யளைஇய கூதிர்
(5) ஒருங்கிவ ணுறைத றெளித்தகன் றோரே.

எ - து குறித்த பருவம் வரவும் தலைமகன் வந்திலனாக ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. உள்ளார் கொல்லோ - நினையாரோ; குறுந். 16 ; 1, 232 : 1. வெள்ளிதழ் - வெள்ளிய இதழ்கள். வெள்ளிதழ்ப் பகன்றை மலர் எனக் கூட்டுக. பகன்றை - சிவதைக்கொடி; புறநா. 16 : 14; பெருங். 2. 12 : 27. பகன்றை மலருக்குப் பகல் மதி உவமை. பகன்றை மலர் வெண்ணிறமானது; குறுந். 330 : 4. ஈங்கைப்புதல் - ஒருவகைப் புதல். இவண் உறைதல் - இங்கே வந்து தங்குதலை. அகன்றோர் உள்ளார் கொல்லோ. (சு)

457. பெய்பனி [1] நலிய வுய்தல்செல் லாது
குருகின நரலும் பிரிவருங் காலைத்
துறந்தமை கல்லார் காதலர்
மறந்தமை கல்லாதென் மடங்கெழு நெஞ்சே.

எ - து பருவவரவின்கண் ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. நலிய - துன்புறுத்த. உய்தல் செல்லாது - உய்யாது. நரலும் - ஒலிக்கின்ற. துறந்து அமைகல்லார் - நம்மைப்பிரிந்து பொருந்தார். அமைகல்லாது - பொருந்தாது. காதலர் துறந்து அமைகல்லார், நெஞ்சு மறந்து அமைகல்லாது. (பி - ம்.) [1] 'நளிய' (எ)

458. துணர்க்காய்க் கொன்றை குழற்பழ மூழ்த்தன
அதிர்பெயற் கெதிரிய சிதர்கொ டண்மலர்
பாணர் பெருமகன் பிரிந்தென
மாணல மிழந்தவென் கண்போன் றனவே.

எ - து பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன்வரவு பார்த்திருந்த தலைமகள் பருவமுதிர்ச்சி கூறி ஆற்றாளாய் உரைத்தது.

(ப - ரை.) சிதர் - சிந்துதல்.

குறிப்பு. துணர்க்காய் - கொத்தான காய். குழற்பழம் - குழல்போன்ற பழம்; திணைமா. 98. ஊழ்த்தன - முதிர்ந்தன. பெயற்கு - மழைக்கு. எதிரிய - எதிர்ந்து. சிதர் - சிந்துதல்; வண்டுமாம். பாணர் பெருமகன் - தலைவன்; "பாணரொக்கல்" (சிறு. 400.) மலர் என்கண் போன்றன. கொன்றைப்பூ, நீர்நிறைந்து பசலைபெற்ற கண்ணுக்கு உவமையாயிற்று. பசலைக்குக் கொன்றைமலர்; ஐங். 500 : 1; குறுந். 183 : 1–2; அகநா. 398 : 3–5. (அ)

459. மெல்லிறைப் பணைத்தோட் [1]பசலை தீரப்
புல்லவு [2]மியைவது கொல்லோ புல்லார்
ஆரரண் கடந்த சீர்கெழு தானை
வெல்போர் வேந்தனொடு சென்ற
(5) நல்வய லூர னறுந்தண் மார்பே.

எ - து 'வேந்தன் வினைமுற்றினான்; நின்காதலர் கடுகவருவர்' எனக் [3]கேட்டதலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு. இறை - முன்கை. இயைவது - பொருந்துவது. புல்லார் - பகைவர். ஊரனது மார்பு புல்லவும் இயைவது கொல்லோ.

(பி - ம்.) [1] 'பயலைநீங்கப்' [2] 'மிசைவது' [3] 'கேட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது' (கூ)

460. பெருஞ்சின வேந்தனும் பாசறை முனியான்
இருங்கலி வெற்பன் றூதுந் தோன்றா
ததையிலை வாழை முழுமுத லசைய
இன்னா வாடையு மலைக்கும்
(5) என்னா குவென்கொ லளியென் யானே.

எ - து வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகனைப் பருவமுதிர்ச்சியினும் வரக்காணாது தலைமகள் சொல்லியது.

குறிப்பு. பாசறை முனியான் - பாடிவீட்டில் இருத்தலை வெறுக்கமாட்டான். இருங்கல் - பெரியகல். வெற்பனது தூதும் தோன்றாது. வாழை முழுமுதல் - வாழையினது பெரிய முதல்; முருகு. 307. இன்னாவாடை - துன்பத்தைத்தரும் வாடைக்காற்றும். அலைக்கும் - வருத்தும். என்னாகு வென்கொல் - என்னாவேனோ. அளியென் - அளிக்கத்தக்கவள். (சo)

(சசு) பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து முற்றிற்று.

## (சஎ) தோழி வற்புறுத்த பத்து

461. வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக்
கான்பிசிர் கற்பக் கார்தொடங் கின்றே
இனையல் வாழி தோழி யெனையதூஉம்
நிற்றுறந் தமைகுவ ரல்லர்
வெற்றி வேந்தன் பாசறை யோரே.

எ - து பிரிவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி வரவு கூறி, 'உரைத்த பருவம் வந்ததாகலான் அவர் வருவர்' என வற்புறீஇயது.

(ப - ரை.) 'கான்பிசிர்கற்ப' என்றது 'மழைபெய்திட்டால் மரம் பெய்யும்' என்னும் முறைமைபற்றிக் கூறியவாறு.

குறிப்பு. வான் பிசிர்க்கருவியின் - மேகம் சிதறின நீர்த்தொகுதியாலே. பிடவுமுகை - பிடாமலரின் மொட்டுக்கள். தகைய - அழகுற்றுத் தோன்ற; "மராஅம் தகைந்தன" (கார். 19.) கான் - காடு. பிசிர் கற்ப - துவலையாகத் தூவ; "வெண்மழை,...........துவலை கற்ப" (நெடுநல். 19-20.) இனையல் - வருந்தாதே. எனையதூஉம் - சிறிதும். பாசறை யோர் என்றது தலைவனை. பாசறையோர் நின்னைத்துறந்து அமைகுவ ரல்லர். (க)

462. ஏதில பெய்ம்மழை காரென [1]மயங்கிய
பேதையங் கொன்றைக் கோதைநிலை நோக்கி
[2]எவனினி மடந்தைநின் கலிழ்வே நின்வயின்
தகையெழில் வாட்டுந ரல்லர்
முகையவிழ் புறவி னாடிறந் தோரே.

எ - து பருவங்கண்டு வேறுபட்ட கிழத்தியைத் தோழி, 'பருவமன்று' என வற்புறீஇயது.

குறிப்பு. ஏதில - அயன்மையையுடையதாகி ; குறுந். 194 : 4. காரென- கார்காலம் என்று கருதி. பேதையங்கொன்றை - அறியாமையையுடைய கொன்றை மரத்தினது. கோதை - மாலைவடிவான பூங்கொத்தை. கொன் றைக்கோதை : ஐங். 497 : 1 ; பரி. 14 : 10 ; திணைமா. 109. எவன் - ஏன் ? மடந்தை : விளி. கலிழ்வு - கலக்கம். கொன்றை பேதைமையால் கார் அல்லாக்காலத்திலும் மலர்தல் ; நற். 99 : 8-10; குறுந். 66, 183 : 1–2. நாடிறந் தோர் எழிலை வாட்டுநர் அல்லர், கலிழ்வு எவன் ? எழில் வாட்டுநர் அல்லர் ; கலி. 11 : 20. (பி - ம்.) [1] 'மயங்கிப்' [2] 'எவனனி' (உ)

463. புதன்மிசை நறுமலர் கவின்பெறத் தொடரிநின்
நலமிகு கூந்த றகைகொளப் புனைய
வாரா தமையலோ விலரே நேரார்
நாடுபடு நன்கலந் தரீஇயர்
நீடினர் தோழிநங் காத லோரே.

எ - து குறித்த பருவம் வரவும் தலைமகன் தாழ்த்துழித் தோழி காரணம் கூறி வற்புறீஇயது.

குறிப்பு. புதன்மிசை - புதரில். தொடரி - தொடர்ந்து; அகநா. 86 : 4. நின் கூந்தலைப் புனைய வாராதமையல் இலர். நாடுபடு நன்கலம் - பகைவர் நாட்டிலுள்ள நல்ல ஆபரணங்களை. தரீஇயர் - தரவேண்டி. காதலர் நீடினர். நேரார்நாடுபடு நன்கலம் தருதல் : அகநா. 1 : 8–9. (௩)

464. கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென
இவர்கொடிப் பீர [1]மிரும்புதன் மலரும்
அற்சிர மறக்குந ரல்லர்நின்
நற்றோண் [2]மருவரற் குலமரு வோரே.

எ - து வரைந்த அணுமைக்கண்ணே பிரிந்த தலைமகன் குறித்த பருவம் வந்துழி, 'இதனை மறந்தார்' என்ற தலைமகட்குத் தோழி, 'வரைவதற்கு முன்பு அவரன்புடைமை இதுவாகலான் மறத்தல்கூடாது' எனச்சொல்லி வற்புறீஇயது.

குறிப்பு. கண்ணென - கண்ணைப்போல. கருவிளைக்குக் கண் : "கருவிளை கண்மலர்போற் பூத்தன" (கார். 9.) பீரம் - பீர்க்கம்பூ. பீர்க்கம் பூவிற்குப் பொன் உவமை. அற்சிரம் = அச்சிரம் - முன்பனிக்காலத்தை; ஐங். 223 : 4, குறிப்பு. மருவரல் - சேர்தல். உலமருவோர் - சுழலுவோர்; உலம்வரல் : உரிச்சொல்; புறநா. 207 : 11, உரை. உலமருவோர் மறக்குநர் அல்லர்.

(பி - ம்.) [1] 'மிரும்புதன்' [2] 'மறுவரற்' (௪)

465. [1]நீரிகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர்
கார்செய் கானம் பின்படக் கடைஇ
மயங்குமல ரகல நீயினிது முயங்க
வருவர் வாழி தோழி
(5) செருவெங் குருசி றணிந்தனன் பகையே.

எ - து பருவங்கண்டு வேறுபட்ட தலைமகளை வேந்தன் வினைமுடித்தானெனக்கேட்ட தோழி, 'வருவர்' என வற்புறீஇயது.

(ப - ரை.) 'நீரிகுவன்ன' என்றது...........

குறிப்பு. நீர்இகுவன்ன - நீரின்தாழ்ச்சியை யொத்த; இகுதல் - தாழ்தல்; மலைபடு. 226; குறுந். 109 : 2; அகநா. 82 : 5, 112 : 14, 274 : 2. கடைஇ - வேகமாகச்செலுத்தி. தேரின்வேகத்துக்கு நீரின்வேகம் : "குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக" (குறுந். 189 : 2.) அகலம் - மார்பை. செருவெங்குருசில் - போரை விரும்பும் தலைவன். குருசில் பகை தணிந்தனன், வருவர். 'நீரிகுவன்ன' என்றது இடைவழியில் தங்காமல் இடையறுது தேரைச் செலுத்தி இங்கு வருவர் என்றவாறு. தணிந்தனன், வருவர் என்பன ஒருமை பன்மை மயக்கம். (பி - ம்.) [1] 'நீரிரிகுவன்ன' (௫)

466. வேந்துவிடு விழுத்தொழி லெய்தி யேந்துகோட்
டண்ணல் யானை யரசுவிடுத் தினியே
எண்ணிய நாளகம் வருதல் பெண்ணியல்
காமர் சுடர்நுதல் விளங்கும்
(5) தேமொழி யரிவை தெளிந்திசின் யானே.

எ - து பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகளை, 'அவர்போனகாரியம் இடையூறின்றி முடித்துவருதல் பல்லாற்றானும் தெளிந்தேன்' எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது.

குறிப்பு. யானையையுடைய அரசு. நாளகம்வருதல் - நாளில்வருதல். காமர் - அழகிய. அரிவை : விளி. தெளிந்திசின் - தெளிந்தேன்; இசின் தன்மைக்கண் வந்தது. யான் வருதலைத் தெளிந்திசின். (சு)

467. புனையிழை நெகிழச் சாஅய் நொந்துநொந்
தினையல் வாழியோ இகுளை வினைவயின்
சென்றோர் நீடினர் பெரிதெனத் தங்காது
நம்மினும் விரையு மென்ப
(5) வெம்முரண் யானை விறற்போர் வேந்தே.

எ - து தலைமகன் வினைவயிற்பிரிய ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

(ப - ரை.) 'சென்றோர்நீடினர் பெரிது' என்பது.........

குறிப்பு. சாஅய் - மெலிந்து. இனையல் - வருந்தாதே. இகுளை என்றது தலைவியை நோக்கி. சென்றோர் - சென்ற தலைவன். இகுளை, நீடினர்பெரி தென இனையல், வேந்து விரையுமென்ப. (எ)

468. வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்டக்
கார்தொடங் கின்றே காலை யினிநின்
நேரிறைப் பணைத்தோட் கார்விருந் தாக
வடிமணி நெடுந்தேர் கடைஇ
(5) வருவ ரின்றுநங் காத லோரே.

எ - து பிரிவுநீட ஆற்றாளாய தலைமகட்குத் தோழி பருவங்காட்டி 'இன்றே வருவர்' என வற்புறீஇயது.

குறிப்பு. நுணல் : மணலுக்குள் முழுகி மறைந்துகிடக்கும் ஒருவகைப் பிராணி; நற். 59 : 1; "மணலுண் முழுகி மறைந்து கிடக்கும், நுணலுந் தன் வாயாற் கெடும்" (பழமொழி, 184.) கறங்க - ஒலிக்க; நுணல் கறங்கல் : அகநா. 364 : 3. தெவிட்ட - ஒலிக்க. ஐங். 453 : 1, குறிப்பு. நுணல் வேறு தேரை வேறு. பணைத்தோட்கு விருந்தாகக் காதலோர் வருவர். (அ)

469. பைந்தினை யுணங்கல் செம்பூழ் கவரும்
வன்புல நாடற் றரீஇய வலனேர்
பங்க ணிருவிசும் பதிர வேறொடு
பெயறொடங் கின்றே வானம்
காண்குவம் வம்மோ பூங்க ணோயே.

எ - து பிரிவுநீட ஆற்றுளாகிய தலைமகட்குத் தோழி, ‘அவரை நமக்குத் தருதற்கு வந்ததுகாண் இப்பருவம்’ எனக்காட்டி வற்புறீஇயது.

(ப - ரை.) ‘வன்புலநாடன்’ என்றது அக்க...........

குறிப்பு. செம்பூழ் - ஒருவகைப் புள். வன்புலம் - முல்லைநிலம். தரீஇய - தர. வலன்ஏர்பு - வலமாக எழுந்து. அங்கண் இருவிசும்பு - அழகிய இடத்தையுடைய பெரிய ஆகாயம். ஏறொடு - இடியொடு. பூங்கணோய் - பூப்போன்ற கண்ணையுடையவளே. பூங்கணோயே, தரீஇய வானம் பெயல் தொடங்கின்று, காண்குவம், வம்மோ. (௯)

470. இருநிலங் குளிர்ப்ப வீசி யல்கலும்
அரும்பனி யளைஇய [1] வற்சிரக் காலை
உள்ளார் காதல ராயி னொள்ளிழை
சிறப்பொடு விளங்கிய காட்சி
மறக்க விடுமோநின் மாமைக் கவினே.

எ - து பருவம்வந்ததுகண்டு தாம் குறித்த இதனை மறந்தாரென வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

குறிப்பு. அல்கலும் - நாடோறும். பனியளைஇய அற்சிரம் : ஐங். 223 : 4, குறிப்பு ; குறுந். 68 : 3, 76 : 6. உள்ளார் - நினையார். ஒள்ளிழை : விளி. காதலர் உள்ளாராயினும் நின் மாமைக்கவின் நின்னை மறக்கவிடுமோ.

(பி - ம்.) [1] ‘வச்சிரக் காலை’ (௧௦)

(சஎ) தோழி வற்புறுத்த பத்து முற்றிற்று.

## (சஅ) பாணன் பத்து

471. எல்வளை நெகிழ மேனி வாடப்
பல்லித ழுண்கண் பனியலைக் கலங்கத்
துறந்தோன் மன்ற மறங்கெழு குருசில்
அதுமற் றுணர்ந்தனை போலாய்
இன்னும் வருதி யென்னவர் தகவே.

எ - து பருவவரவின்கண் தூதாகிவந்த பாணன் கூறியவழித் தோழி சொல்லியது.

குறிப்பு. பல்லிதழ் உண்கண் ; ஐங். 170 : 4, குறிப்பு. பனியலைக்கலங்க - பனி அலைத்தலாற் கலங்க. மன்ற : தெளிவுப்பொருளை உணர்த்துவதோர்

இடைச்சொல். மறம் - வீரம். அவர் தகவு என். 'துறந்தோன்', 'குருசில்', 'அவர்' என்பன ஒருமை பன்மை மயக்கம். ஈண்டு 'பாண' என்னும் விளிப்பெயரை அதிகாரத்தால் வருவிக்க. (க)

472. கைவல் சீறியாழ்ப் பாண நுமரே
செய்த பருவம் வந்துநின் றதுவே
எம்மி னுணரா ராயினுந் தம்வயின்
பொய்படு கிளவி நாண லும்
(5) எய்யா [1] ராகுத னோகோ யானே.

எ - து குறித்த பருவம் வரவும் தலைமகன் வாராளுகியவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழி கூறியது.

குறிப்பு. கைவல் சீறியாழ்ப்பாண - பண்ணை வாசித்தலில் வல்ல சிறிய யாழையுடைய பாணனே. நுமரென்றது தலைவனை; குறித்த பருவத்து வாராமையால் வேறுபடுத்தி 'நுமர்' என்றாள். நாண லும்; உம்மை அசை நிலை. எய்யாராகுதல் - அறியாராகுதலின். நோகோ - நோவேனே.

(மேற்.) மு. இது குறித்த பருவத்துத் தலைவன் வாராதவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழிகூறியது (தொல். கற்பு. 9, ந.)

(பி - ம்.) [1] 'ராக' (உ)

473. பலர்புகழ் சிறப்பினுங் குருசி லுள்ளிச்
செலவுநீ நயந்தனை யாயின் மன்ற
இன்னா வரும்பட ரெம்வயிற் செய்த
பொய்வ லாளர் போலக்
(5) கைவல் பாணவெம் மறவா தீமே.

எ - து 'தலைமகன் பிரிந்தநாட்டிற் செல்வேம்' என்ற அவன்பாணற்குத் தலைமகள் சொல்லியது.

குறிப்பு. குருசில் உள்ளி - தலைவனை நினைந்து. செலவு நீ நயந்தனை யாயின் - செல்லுதலை நீ விரும்பினையாயின்; முருகு. 64. படர் - நோயை. பொய்வலாளர் - பொய் கூறுதலில் வல்லவனுன தலைவன். கைவல் பாண; ஐங். 472 : 1. எம்மை மறவாதீமே; மே : அசைநிலை.

(மேற்.) மு. இது தூதுவிடக்கருதித் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.) (ங)

474. மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்
செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு
கதழ்பரி நெடுந்தே ரதர்படக் கடைஇச்
சென்றவர்த் தருகுவ லென்னும்
(5) நன்றா லம்ம பாணன தறிவே.

எ - து பிரிவின்கண் ஆற்றாமைகண்டு, 'தூதாகிச்சென்று அவனைக் கொணர்வல்' என்ற பாணன்கேட்பத் தலைமகள் கூறியது.

குறிப்பு. மை - குற்றம். கறுத்தோர் - பகைவர். செய்யரண் - செய்த அரணை. தானை - படை. கதழ்பரி - விரைவுடைய குதிரை. அதர்பட - வழியில் வர. கடைஇ - செலுத்தி. சென்றவர் - பிரிந்து சென்ற தலைவனை. தருகுவல் - தருகுவேன். என்னும் - என்று கூறுவான். பாணனது அறிவு நன்று.

(மேற்.) மு. இது பாணனைத் தூதுவிட்டுத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.) (ச)

475. தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்
பெரிதுபுலம் பினனே சீறியாழ்ப் பாணன்
எம்வெங் காதலொடு பிரிந்தோர்
(5) தம்மோன் போலான் பேரன் பினனே.

எ - து பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தலைமகனுழைநின்று வந்தார் கேட்பத் தன்மெலிவு கண்டு இரங்கிய பாணனைத் தோழிக்கு மகிழ்ந்து சொல்லியது.

குறிப்பு. தொடி - வளைகளது. வடிநலன் - மாவடுவின் அழகை. பாணன் என்தோளும் கண்ணும் நோக்கிப் பெரிது புலம்பினன். எம்வெம் காதலொடு - எமது விருப்பம் பொருந்திய அன்பொடு. தம்மோன் - தம் மவன்; என்றது தலைவனை. போலான் - போல் இல்லை. (ரு)

476. கருவி வானங் கார்சிறந் தார்ப்பப்
பருவஞ் செய்தன பைங்கொடி முல்லை
பல்லான் கோவலர் படலைக் கூட்டும்
அன்பின் மாலையு முடைத்தோ
(5) அன்பில் பாண வவர்சென்ற [1]நாடே.

எ - து 'பிரிவாற்றுமை அவற்கும் உளதன்றே, நீ வேறுபடுகின்றது என்னை?' என்ற பாணற்குத் தலைமகள் கூறியது.

குறிப்பு. கருவி - தொகுதி. பல்லான் கோவலர் - பல பசுக்களையுடைய இடையர். படலை - தழைவிரவித் தொடுத்த மாலையை; "பல்லான் கோவலர் படலை சூட்ட" (புறநா. 265 : 4.) மாலை - அந்திப்பொழுது. உடைத்தோ - உடையதோ. அன்பில் பாண, நாடு மாலையும் உடைத்தோ.

(பி - ம்.) [1] 'நாட்டே' (சா)

477. பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்
கையறு [1]நெஞ்சிற் குயவுத்துணை யாகச்
சிறுவரைத் தங்குவை யாயின்
(5) காண்குவை மன்னாற் பாணவெந் தேரே.

எ - து தலைமகள்மாட்டுப் பாணனைத் தூதாக விடுத்த தலைமகன் கூறியது.

குறிப்பு. கண்ணில் பசலை பாய. துனி - வெறுப்பு. படர்உழப்போள் - நோயால் வருந்துபவளது. கையறு நெஞ்சிற்கு - செயலற்ற மனத்துக்கு. உயவுத்துணையாக - உசாவுதலையுடைய துணையாக; குறுந். 207 : 4; அகநா. 103 : 12, 298 : 22. சிறுவரை - சிறியதாகிய காலத்தளவு. பாண, எம் தேரைக் காண்குவை. மன்; ஆல்: அசை.

(மேற்.) மு. இது தூதுவிடும் தலைமகன் கூறியது (தொல். அகத். 48, இளம்.; 41, ந.) (பி - ம்.) [1] 'நெஞ்சத் துயவுத்துணை யாகிச்' (எ)

478. நீடின மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல ளாகிப் [1]பிறிதுநினைந்
தியாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துரைமதி நீயே
(5) முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே.

எ - து பிரிந்துறையும் தலைமகன் தலைமகள்விட்ட தூதாய்ச்சென்ற பாணனை, 'அவள் சொல்லியதிறம் கூறு' எனக் கேட்டது.

குறிப்பு. நீடினம் - காலந்தாழ்த்தோம். தூற்றி - பலரறியப் பேசி. யாம் வெம்காதலி - நாம் விரும்பும் தலைவி. நோய்மிகச் சாஅய் - பிரிவு நோயால் மிக மெலிந்து. முல்லை - முல்லைப்பண்: முல்லைமாலையுமாம். பாண, காதலி தூற்றி, நினைந்து, சாஅய் சொல்லியது எமக்கு உரைமதி.

(மேற்.) மு. இது தூதுகண்டு தலைமகன் கூறியது (தொல். அகத். 48, இளம். 41, ந.) (பி - ம்.) [1] 'பெரிது நினைத்', 'பெரிது நினைந்' (அ)

479. சொல்லுமதி பாண சொல்லுதோ றினிய
நாடிடை விலங்கிய வெம்வயி னொடொறும்
அரும்பனி கலந்த வருளில் வாடை
தனிமை யெள்ளும் பொழுதில்
(5) பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே.

எ - து தலைவி விடத் தூதாய்ச் சென்ற பாணன் மாற்றம் கூறக்கேட்ட தலைமகன், 'இவ்வாடை வருத்தத்திற்கு மருந்தாக இன்னுங்கூறவேண்டும்' எனக் கூறியது.

குறிப்பு. சொல்லுமதி - சொல்வாயாக. சொல்லுதோறினிய - சொல்லுந் தோறும் இனிமையாக இருக்கின்றன. நாடிடை விலங்கிய - பல நாடுகளை இடையிட்டுப் பிரிந்த. வாடை - வாடைக்காற்று. தனிமை எள்ளும்பொழுதில் - தனிமையை இகழும் காலத்தில். கண்ணி - தலைவி. பாண, கண்ணி கூறியது எமக்குச் சொல்லுமதி, இனிய. (கூ)

480. நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
ஈரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே.

எ - து தலைமகட்குத் தூதாய்ப் பாசறைக்கண் சென்ற பாணன் தலைமகனை நெருங்கிச் சொல்லியது.

குறிப்பு. குருசிலை அல்லை - தலைவன் இல்லை. காதலி - தலைவி. மனைக்கண் புலம்பி. ஈரிதழ் உண்கண் - ஈரம்பொருந்திய இமையையுடைய மையுண்ட கண்கள். உகுத்த - சிந்திய. பூசல் - வருத்தத்தை. அருளாதோய் : தலைவனை நோக்கிய விளி.

(மேற்.) மு. பிரிவின்கண் பாணர்க்குக் கூற்று நிகழும் (தொல். அகத். 45, இளம்.) (௧௦)

(௪௮) பாணன்பத்து முற்றிற்று.

## (௪௯) தேர்வியங்கொண்ட பத்து

481. சாயிறைப் பணைத்தோ ளவ்வரி யல்குல்
சேயிழை மாதரை யுள்ளி நோய்விட
முள்ளிட் டூர்மதி வலவநின்
புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.

எ - து வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகற்குக் கூறியது.

இனி வருகின்றபாட்டு ஒன்பதிற்கும் இஃது ஒக்கும்.

குறிப்பு. சாய் இறைப் பணைத் தோள் - வளைந்த சந்தினையுடைய பருத்த தோள்; குறுந். 168 : 5, 279 : 8. அவ்வரி - அழகிய வரிகள். உள்ளி - நினைந்து. நோய்விட - பிரிவுநோய் தீர. முள் - தாற்றுக்கோல். ஊர்மதி - ஊர்வாயாக. வலவ : விளி. புள்ளியல் கலிமா - புட்போல நிலம் தீண்டாத செலவினையுடைய முழங்கிய குதிரை; ஐங். 486 : 5; தொல். கற்பு. 53, ந. வலவ! நோய்விட, தேரை முள்ளிட்டு ஊர்மதி.

481-90. தேர்வியங்கொண்ட : வியங்கொள்ளல் - வினையினது ஏவலைக் கொள்ளல்; சிலப். 9 : 78. (௧)

482. தெரியிழை யரிவைக்குப் பெருவிருந் தாக
வல்விரைந்து கடவுமதி பாக [1]வெள்வேல்
வென்றடு தானை வேந்தனொடு
நாளிடைச் சேப்பி னூழியி னெடிதே.

**குறிப்பு.** இழை - ஆபரணம். வல்விரைந்து - மிகவிரைந்து. கடவுமதி - செலுத்துவாயாக. வெள்வேல் - வெள்ளிய வேல். சேப்பின் - தங்கினால். ஊழியின் - ஊழிக்காலத்தினும். நெடிதே - நீண்ட தன்மையையுடையது.

**(பி - ம்.)** [1] 'வென்வேல்' (உ)

483. ஆறுவனப் பெய்த வலர்தா யினவே
வேந்துவிட் டனனே மாவிரைந் தனவே
முன்னுறக் கடவுமதி பாக
நன்னுத லரிவை தன்னலம் பெறவே.

**குறிப்பு.** ஆறு - வழி. அலர் தாயின - மலர் பரந்தன. மா - குதிரைகள். நலம்பெறக் கடவுமதி. (ந)

484. வேனி னீங்கக் கார்மழை தலைஇக்
காடுகவின் கொண்டன்று பொழுது பாடுசிறந்து
கடிய கடவுமதி பாக
நெடிய நீடின நேரிழை மறந்தே.

**குறிப்பு.** கார்மழை - கார்காலத்துமழை. தலைஇ - தோன்றி ; சொரிந்து மாம். பொழுது பாடுசிறந்து - மாலைப்பொழுதியல்பு சிறந்து. பாடுசிறந்து காடுகவின் கொண்டன்று. கடிய - விரைவாக. நெடியநீடினம் - நெடுங்காலம் தாழ்த்தனம். நேரிழை - தலைவியை. பாக, மறந்து நீடினம், கடியக் கடவுமதி. (ச)

485. அரும்பட ரவல மவளுந் தீரப்
பெருந்தோ ணலம்வர யாமு முயங்க
ஏமதி வலவ தேரே
மாமருண் டுகளு மலரணிப் புறவே.

**குறிப்பு.** அவலம் - துன்பம். அரும்படரவலம் ; கலி. 28 : 10. நலம்வர - இழந்தநலம் வர. ஏமதி - செலுத்துவாயாக ; ஐங். 487 ; நற். 21 : 5 ; அகநா. 134 ; 9. மா - மான்கள். உகளும் - துள்ளும். புறவின்கண் ஏமதி. (ரு)

486. பெரும்புன் மாலை யானுது நினைஇ
அரும்பட ருழத்தல் யாவ தென்றும்
புல்லி யாற்றுப் புரையோட் காண
வள்புதெரிந் தூர்மதி வலவநின்
(5) புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே.

**குறிப்பு.** மாலை - மாலைப்பொழுதை. புன்மாலை : குறுந். 352 : 5. ஆனது நினைஇ - இடைவிடாமல் நினைத்து. படர் - துன்பம். யாவது - எத்தன்மை யது? புல்லி யாற்றுப் புரையோள் : கலி. 142 : 1, ந. வள்பு-வார். புள்ளியற் கலிமா : ஐங். 481 : 4, குறிப்பு. வலவ, புரையோளைக்காணத் தேரை ஊர்மதி. (சு)

487. இதுமற் பிரிந்தோ ருள்ளும் பொழுதே
செறிதொடி யுள்ள முவப்ப
மதியுடை வலவ வேமதி தேரே.

**குறிப்பு.** பிரிந்தோரை உள்ளும்பொழுது இதுமன்; உள்ளும் - நினைக்கும். செறிதொடி - தலைவி. தேரை ஏமதி; ஏமதி - செலுத்துவாயாக. (௭)

488. கருவி வானம் பெயறொடங் கின்றே
பெருவிறற் காதலி கருதும் பொழுதே
விரியுளை நன்மாப் பூட்டிப்
பருவர றீரக் கடவுமதி தேரே.

**குறிப்பு.** கருவி - தொகுதி. பெயல் - மழையை. பெருவிறற் காதலி - கற்பினால் உண்டான வெற்றியையுடைய தலைவி. உளை - பிடரிமயிர். பருவரல் - துன்பம். பொழுதின்கண் பருவரல் தீரக் கடவுமதி. (௮)

489. அஞ்சிறை வண்டி னரியின மொய்ப்ப
மென்புல முல்லை மலரு மாலைப்
பையு ணெஞ்சிற் றைய லுவப்ப
நுண்புரி வன்கயி றியக்கினின்
வண்பரி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே.

**குறிப்பு.** அஞ்சிறை வண்டின் அரிஇனம் - உள்ளிடத்தே சிறகையுடைய வண்டின் அழகிய கூட்டம்; "அஞ்சிறை வண்டி னரிக்கணம்" (முருகு. 76, ந.) முல்லை மலரும் மாலையின்கண்; குறுந். 234 : 2-3. பையுள் - நோய். தையல் - தலைவி. உவப்ப - மகிழ. இயக்கி - இயங்குவித்து. பரி - செலவு. உவப்ப விரைந்து கடவுமதி. (௯)

490. அந்தீங் கிளவி தான்றர வெம்வயின்
வந்தன்று........................
..............................................
வாய்மணி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே.

**குறிப்பு.** அம்தீம் கிளவி - அழகிய இனிய சொல்லையுடைய தலைவி. தேரை விரைந்து கடவுமதி. (௧0)

(௪௯) தேர்வியங்கொண்ட பத்து முற்றிற்று.

## (௫௰) [1]வரவுச்சிறப்புரைத்த பத்து

491. காரதிர் காலை யாமோவின்று நலிய
நொந்துநொந் துயவு முள்ளமொடு
வந்தனெ மடந்தைநின் னேர்தர விரைந்தே.

ஏ - து வினைமுற்றிப் புகுந்த தலைமகன் தலைவிக்குச் சொல்லியது.

குறிப்பு. கார் - மேகம். ஓவின்று நலிய - ஓய்வில்லாமல் வருந்த. உயவும் உள்ளமொடு - வருந்துகின்ற மனத்தொடு. வந்தனெம் - வந்தோம். மடந்தை : விளி. ஏர் - அழகை.

(பி - ம்.) [1] 'வரவு சிறப்பு' (க)

492. நின்னே போலு மஞ்ஞை யாலநின்
நன்னுத னாறு முல்லை மலர
நின்னே போல மாமருண்டு [1]நோக்க
நின்னே யுள்ளி வந்தனென்
(5) நன்னுத லரிவை காரினும் விரைந்தே.

இதுவுமது.

குறிப்பு. நின்னே போலும் - உன்னைப் போலவே. முல்லை நாற்ற முடையது நுதல் : குறுந். 323 : 4-5 ; அகநா. 43 : 9-10. மா - மான்கள். நின்னே யுள்ளி - உன்னையே நினைந்து. அரிவை : விளி. காரினும் - மேகத்தினும். காரென விரைதல் : "காரெனக் கடிது சென்றான்" (கம்ப. குகப். 39.) (பி - ம்.) [1] 'நோக்கி' (க)

493. ஏறுமுரண் சிறப்ப வேறெதி ரிரங்க
மாதர் மான்பிணை மறியொடு மறுகக்
[1] கார்தொடங் கின்றே காலை
நேரிறை முன்கைநின் னுள்ளியாம் வரவே.

இதுவுமது.

குறிப்பு. ஏறு - முன்னது இடி; பின்னது ஆண் எருமை. மாதர் - அழகிய. மான்பிணை - பெண்மான். மறி - குட்டி. மறுக - சுழல. நேர் இறைமுன்கை : விளி ; ஐங். 384 : 5, குறிப்பு. யாம்வர, கார்தொடங்கின்று.

(பி - ம்.) [1] 'கார்தொடங் கின்றால்' (உ)

494. வண்டுதா தூதத் தேரை தெவிட்டத்
தண்கமழ் புறவின் முல்லை மலர
இன்புறுத் தன்று பொழுதே
நின்குறி வாய்த்தனந் தீர்கினிப் படரே.

இதுவுமது.

குறிப்பு. தாதூத - தாதை நுகர. தேரைதெவிட்ட : ஐங். 453 : 1, குறிப்பு. இன்புறுத்தன்று - இன்பத்தைக் கொடுத்தது. குறிவாய்த்தனம் - குறிப்பை வாய்ப்பச் செய்தனம். இனிப் படர் தீர்க. (ச)

495. [1] சென்னில மருங்கிற் பன்மலர் தாஅய்ப்
புலம்புதீர்ந் தினிய வாயின புறவே
பின்னிருங் கூந்த னன்னலம் புனைய
உள்ளுதொறுங் கலிழு நெஞ்சமொடு
முள்ளெயிற் றரிவையாம் வந்த [2] மாறே.

இதுவுமது.

குறிப்பு. தாஅய் - பரந்து. புலம்பு - துன்பம். புறவு இனிய வாயின. பின்னிருங் கூந்தல் - பின்னுதலுற்ற பெரிய கூந்தலையுடைய தலைவியது. கலிழும் - கலங்கும். அரிவை : விளி. வந்தம் - வந்தோம்.

(பி - ம்.) [1] 'செந்நில' [2] 'வாறே' (ரு)

496. மாபுதல் சேர [1] வரகிணர் சிறப்ப
மாமலை புலம்பக் கார்கலித் தலைப்பப்
பேரமர்க் கண்ணி நிற்பிரிந் துறைநர்
தோடுணை யாக வந்தனர்
போதவிழ் கூந்தலும் பூவிரும் புகவே.

எ - து குறித்தபருவத்தின்கண் தலைமகன் வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.

குறிப்பு. மா - மிருகங்கள். புதல் - புதரை. இணர் - கொத்து. மழையால் வரகு சிறத்தல் : குறுந். 220 : 1. கார் - மேகம். அலைப்ப - வருத்த. கண்ணி : விளி. உறைநர் நின் தோளுக்குத் துணையாக வந்தனர், கூந்தலும் பூவை விரும்புக.

(பி - ம்.) [1] 'வரசிறை' (சா)

497. குறும்பல் கோதை கொன்றை மலர
நெடுஞ்செம் புற்ற மீயல் பகர
மாபசி மறுப்பக் கார்தொடங் கின்றே
பேரிய லரிவைநின் னுள்ளிப்
போர்வெங் குருசில் வந்த மாறே.

இதுவுமது.

குறிப்பு. குறும்பல் - குறியபல. கோதை கொன்றைமலர - மாலையாகக் கொன்றைப்பூ மலர ; ஐங். 462 :2, குறிப்பு. நெடும்செம் புற்றம் - நெடிய சிவந்த புற்று. ஈயல் பகர - ஈசல்களை அளிக்க. புற்றில் ஈயல் : ஐங். தனிப் பாடல், 4. அரிவை : விளி. வந்தமாறு - வந்ததால் ; மாறு - ஏதுப் பொருளதோரிடைச்சொல். வந்தமாறு கார்தொடங்கின்று. (எ)

498. தோள்கவி னெய்தின தொடிநிலை நின்றன
நீள்வரி நெடுங்கண் வாள்வனப் புற்றன
ஏந்துகோட் டியானை வேந்துதொழில் விட்டென
விரைசெல னெடுந்தேர் கடைஇ
வரையக நாடன் வந்த மாறே.

இதுவுமது.

குறிப்பு. தோளும் தொடியும் : ஐங். 475 : 1. வாள் வனப்பு - ஒளிமிக்க அழகை. ஏந்திய கோட்டையுடைய. விட்டென - விட. கடைஇ - செலுத்தி. வந்தமாறே தோள் கவின் எய்தின. (அ)

499. பிடவ மலரத் தளவ நனையக்
கார்கவின் கொண்ட கானங் காணின்
வருந்துவள் பெரிதென வருந்தொழிற் ககலாது
வந்தன ரானங் காதலர்
(5) அந்தீங் கிளவிநின் ளுய்நலங் கொண்டே.

இதுவுமது.

குறிப்பு. நனைய - அரும்புவிட. காரால் கவின் கொண்ட. அகலாது - நீங்காமல். கிளவி : விளி. நலங்கொண்டு நம் காதலர் வந்தனரால்; ஆல் : அசை. (கூ)

500. கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன விவட்கே வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
(5) வயமான் றோன்றனீ வந்த மாறே.

எ - து வினைமுற்றிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

குறிப்பு. கொன்றைப்பூ பசலைக்கு : ஐங். 458, குறிப்பு. சுனைக் குவளை அழகுபெற்ற கண்ணுக்கு உவமை. வயமான் தோன்றல் - புலிபோன்ற தலைவன். வந்தமாறு இவட்கு உண்கண் கவின்பெற்றன. (க0)

(ரு0) வரவுச்சிறப்புரைத்த பத்து முற்றிற்று.

முல்லை முற்றிற்று.

பேயனர்

**ஐங்குறுநூறு முற்றிற்று.**

இத் தொகை தொகுத்தார் புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்; இத்தொகை தொகுப்பித்தார் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையார்.

அடியிலுள்ள பாடல்கள் **ஐங்குறுநூற்றுக்** கையெழுத்துப்பிரதிகள் பலவற்றிற் காணப்படவில்லை; **தென்காசிச் சுப்பையா பிள்ளையவர்கள்** வீட்டுப் பிரதியொன்றில் மட்டும் இருந்தமையின், தனியே பதிப்பிக்கப்பெற்றன.

1. உள்ளார் கொல்லோ தோழி சிள்ளெனப்
பருந்துவீழ்ந் தெடுத்த பைந்தலை யரவம்
காதறு கவணை தேய்க்கும்
தீதுறு கள்ளியங் காடிறந் தோரே.

**குறிப்பு.** உள்ளார்கொல்லோ - நினையாரோ; **குறுந்.** 16 : 1. சிள்ளென : ஒலிக்குறிப்பு. காதற்ற கவணை ஏய்க்கும்; ஏய்க்கும் - ஒக்கும். காடிறந்தோர் உள்ளார் கொல்லோ. (க)

2. உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
அலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவள மேய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே.

**குறிப்பு.** ஈந்தின் - ஈந்தினது. சிலம்பிபொதி செங்காய் - சிலம்பி நூலால் மூடப்பட்ட சிவந்த காய். சிலம்பி நூலுக்குத் துகிலும் ஈந்தின் காய்க்குப் பவழமும் உவமை. கள்ளியங்காடு : **குறுந்.** 16 : 5. காடிறந்தோர் உள்ளார்கொல்லோ.

**(மேற்.)** அடி, 1. 'காடிறந்தோரேஎ' எனப் பாடங்கொண்டு செய்யுளிடத்து ஈற்றில் நின்றிசைக்கும் ஏகாரம் மூன்று மாத்திரை பெற்று வரும் என்பர் (**தொல்.** இடை. 38, **ந.**) ஒரூஉ எதுகைத்தொடை; இது தாஅவண்ணம்; தாஅவண்ணமாவது இடையிட்டு வந்த எதுகையையுடையது (**தொல்.** செய். 99, 215, **பேர்.**) அடி, 1-2. **தொல்.** செய். 87, **பேர்.**

**மு.** ஆசிரியப்பா உறுப்பாகி வந்த செய்யுள் (**தொல்.** செய். 105, **பேர்.**) இஃது ஈரசைச்சீர் நின்று ஈரசைச்சீரொடு ஒன்றிய சிறப்பிலாசிரிய நேரசைத் தளை (**யா. வி.** 19.) இதன் முதலடியிலே முழுதும் நேரொன்றாசிரியத்தளை கொள்ளுமாறு சீர்களெல்லாம் நேரொடு நேராக ஒன்றி நின்றன (**யா. கா.** 11, உரை); **இ. வி.** 718. (உ)

3. உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
இலவ மேறிய கலவ மஞ்ஞை
எரிபுகு மகளி ரேய்க்கும்
அரில்படு கள்ளியங் காடிறந் தோரே.

**குறிப்பு.** ஏய்க்கும் - ஒக்கும். இலவமலருக்கு எரியும் மஞ்ஞைக்கு மகளிரும் உவமைகள். அரில் - சிறுதூறு. (ங)

4. உள்ளார் கொல்லோ தோழி வெள்ளைப்
புழுங்க னெல்லின் பொரிவீழ்த் தென்ன
நுண்குழிப் புற்றின் மண்கா லீயல்
கோல்பிடி குருட ரேய்க்கும்
மாலுறு கள்ளியங் காடிறந் தோரே.

**குறிப்பு.** பொரி வீழ்த்தென்ன - பொரியை வீழ்த்தாற்போன்ற. கோலைப் பிடித்திருக்கும் குருடரை. ஏய்க்கும் - ஒக்கும். மால் - மயக்கம்.

5. எம்மூ ரல்ல தூர்நணித் தில்லை
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையண் மெல்லியண் மடந்தை
அரிய சேய[1] பெருங்கான் யாறே.

**குறிப்பு.** நணித்து - பக்கத்திலுள்ளதாக. செல்வன் - சூரியன். கதிரும் ஊழ்த்தனன் - கிரணங்களையும் சுருக்கினன்; சூரியன் மறைந்தனன் என்றபடி. சேந்தனை சென்மோ - இங்கே தங்கிச் செல்வாயாக. மடந்தை இளையள். அரிய - கடத்தற்கு அருமையை யுடையன. சேய - நெடுந்தூரத்தன. ஊழ்த்தனன், இளையள், சேய, சேந்தனை சென்மோ.

**(மேற்.)** அடி, 3. தெரிநிலை வினைமுற்று விரிந்து வினையெச்சமாயிற்று (**இ. வி.** 237, 250.) இது பாலைக்கண் தலைவியை உடனழைத்துச் செல்லும் தலைவனை மாலைக்காலத்து இடைச்சுரத்துக் கண்டோர் கூறியது (**இறை.** 23, உரை.) **மு.** உடன் போயவழி மாலைக்காலமும் சேறற்கரிய வழியும் அஞ்சுவரக்கூறி அவற்றது தீங்கு காரணமாகப் போகின்றார்க்கு வரும் ஏதத்தைத் தலைமகனுக்குக் கண்டோர் கூறுதல்; இதனுள் கதிரும் ஊழ்த்தனன் எனவே பொழுதும் பெருங்கலாறு எனவே ஆற்றருமையும்பற்றிக் குற்றங் காட்டிய வாறு காண்க (**தொல்.** அகத். 40, **ந.**) கண்டோர் காதலின் விலக்கல் (**இ. வி.** 36.) (**பி - ம்.**) [1] 'பெருங்க லாறே' (ரு)

6. [1]அடும்பம ணெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப
வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன்
கொடிய னாயினு மாக
அவனே தோழியென் னுயிர்கா வலனே.

**குறிப்பு.** அடும்பமல் நெடுங்கொடி - ஒருவகைக் கொடி. உள்புதைந்து - உள்ளே மறைந்து. தோழி : விளி.

**(மேற்.)** **மு.** இது வழுவின்று நிலைஇய இயற்படு பொருட்கண் கூறியது (**தொல்.** களவு. 21, **இளம்.** 20, **ந.**) (**பி - ம்.**) [1] 'அடும்பம லங்கொடி' (சு)

# ஐங்குறுநூற்றுச் செய்யுளகராதி

எண் — செய்யுளின் எண்.

## இந்நூல் ஐந்திணையிலும் உள்ள முதல், கரு, உரிப்பொருள்களின் அகராதி

[ எண் - செய்யுளெண் ]

### 1 மருதம்

## 2. நெய்தல்

## 3. குறிஞ்சி

## 4. பாலை

## 5. முல்லை

---

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[ எண் – செய்யுளெண் ]

## பிரகடன பத்திரம்

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| பதிற்றுப்பத்து மூலமும் பழைய வுரையும் (3-ஆம் பதிப்பு 1941) ... | 2 | 8 | 0 |
| பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும் (2-ஆம் பதிப்பு 1935) ... | 2 | 0 | 0 |
| புறநானூறு மூலமும் உரையும் (3-ஆம் பதிப்பு 1935) ... | 5 | 0 | 0 |
| புறநானூறு மூலம் ... | 1 | 8 | 0 |
| குறுந்தொகை மூலமும் உரையும் ... | 7 | 8 | 0 |

கிடைக்குமிடம் : **'தியாகராஜ விலாசம்'**
67, பிள்ளையார்கோயில் தெரு
திருவேட்டீசுவரன்பேட்டை,
**திருவல்லிக்கேணி, சென்னை**